# வணிகமும் கணக்கீட்டுக் கல்வியும்

## தரம் 10

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்



சகல பாடநூல்களையும் இலத்திரனியல் ஊடாகப் பெற்றுக்கொள்வதற்கு
**www.edupub.gov.lk** வலைத்தளத்தை நாடுங்கள்.

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக்கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.



***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

# முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீனமயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக்கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
*2019.04.10*

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

டபிள்யூ.எம். ஜயந்த விக்கிரமநாயக்க — கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## வழிகாட்டல்

டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி — கல்வி வெளியீட்டு ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

அ. குலரட்ணம் — உதவி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## எழுத்தாளர் குழு

எம்.எச்.எம். புகாரி - ஆசிரிய ஆலோசகர் (ஓய்வு நிலை)
வலயக் கல்வி பணிமனை, கேகாலை.

எஸ். பாலசுப்ரமணியம் - முகாமையாளர்
ஆசிரியர் வள நிலையம், ஹாலியெல.

த. நந்தகுமார் - அதிபர் சேவை
இசிபத்தானக் கல்லூரி, கொழும்பு 05.

ஆர்.பீ.குணபால - ஆசிரிய ஆலோசகர்
வலயக் கல்விக் காரியாலயம், தங்கல்ல.

டபிள்யூ. ஏ. தயாரத்ன - ஆசிரிய ஆலோசகர்
வலயக் கல்வி காரியாலயம், தங்கல்ல.

ஏ. நிலந்த - ஆசிரியர் சேவை
சாந்த யோசேப் வித்தியாலயம்,
கொழும்பு 10.

யெசிக்கா விஜயவிக்ரம - கல்விப் பணிப்பாளர் (ஓய்வு நிலை)
வலயக் கல்வி பணிமனை, சிலாபம்.

கே. எல். யூ. டீ. பெரேரா - விரிவுரையாளர்
ஸ்ரீ ஜெயவர்த்தன புர பல்கலைக் கழகம்.

எம். வை. எம். அரூஸ் - ஆசிரியர் சேவை
ஜெயிலான் தேசிய பாடசாலை,
பலாங்கொடை.

எச். எம். ரீ. ஜீ. சீ. கதிரவன் - விரிவுரையாளர்
ஸ்ரீ ஜெயவர்த்தனபுர பல்கலைக்கழகம்.

## பதிப்பாசிரியர் குழு

பீ. வை. ஜீ. ரத்னசேகர - சிரேஷ்ட விரிவுரையாளர்
ஸ்ரீ ஜெயவர்த்தனபுர பல்கலைக்கழகம்.

சுதத் மஞ்சள அமரசேன - சிரேஷ்ட விரிவுரையாளர்
ஸ்ரீ ஜெயவர்த்தனபுர பல்கலைக்கழகம்.

எஸ்.கே. பிரபாகரன் - சிரேஷ்ட விரிவுரையாளர்
தேசிய கல்வி நிறுவகம்.

பீ. ஏச். குசுமாவதி - சிரேஷ்ட விரிவுரையாளர்
தேசிய கல்வி நிறுவகம்.

யூ. ஏ. செனவிரத்ன - உதவி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## பதிப்பாசிரியர் ( மொழி )

இ. நகுலேசபிள்ளை - உதவிக் கல்விப் பணிப்பாளர்
(ஓய்வு நிலை)
மேல் மாகாணக் கல்வித் திணைக்களம்

## சரவை நோக்கு

வி. ராஜேந்திரம் - ஆசிரிய ஆலோசகர்
வலயக் கல்விப் பணிமனை,
கொழும்பு.

## கணினி வடிவமைப்பு

தே. நிரோஷனி தோமஸ் - கணினி வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## உள்ளடக்கம்


| | | |
|---|---|---|
| 1 | வணிகப் பின்னணி | 01 |
| 2 | வணிகச் சூழல் | 17 |
| 3 | வணிக அமைப்புகள் | 29 |
| 4 | கணக்கீட்டுக்கான அறிமுகம் | 57 |
| 5 | கணக்கீட்டுச் சமன்பாடு | 67 |
| 6 | கொடுக்கல் வாங்கல்களின் இரட்டை விளைவு | 80 |
| 7 | மூல ஏடுகள் | 90 |
| 8 | காசேடும் சில்லறைக் காசேடும் | 96 |
| 9 | வங்கிக் கணக்கும் வங்கிக் கணக்கிணக்கக் கூற்றும் | 126 |
| 10 | கொள்வனவு நாட்குறிப்பு, விற்பனை நாட்குறிப்பு மற்றும் பொது நாட்குறிப்பேடு | 152 |
| 11 | பரீட்சை மீதி | 168 |
| 12 | கணக்கீட்டு வழுக்களைத் திருத்துதல் | 179 |

## பாடநூல் கருப்பொருட் பாடல்

மனதில் பூ பூத்திடும் புதிய புத்தகம்
வாசமே
கண்களில் காட்சி தோன்றும் எமது
உலகமே வெளிச்சமே...//

புத்தகம் அறிவு வரும் முகங்களில்
மகிழ்வு தரும்
புதிய புத்தகம் புதிய பொலிவு பெறும்
தினமுமே.

புத்தகம் கண்கள் தானே அதை
காப்பது போலவே
அறிவைத் தரும் புத்தகங்களை
மகிழ்வுடன் காப்போமே.

மனதில் பூ பூத்திடும் புதிய புத்தகம்...//

பாடலாசிரியர் :- சரத் குமார பெரேரா
இசை :- மகேஷ் தெனிப்பிட்டிய

# 1 வணிகப் பின்னணி




இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.

1.1 வணிகம் பற்றிய அடிப்படை எண்ணக்கருக்கள்

- வணிக எண்ணக்கருக்கள்
- வணிகத்தின் நோக்கங்களும் இலக்குகளும்
- நுகர்வோரின் தேவைகளும் விருப்பங்களும்
- உற்பத்தி வணிகம்
- உற்பத்திக் காரணிகள்

1.2 வணிகத்தில் அக்கறை செலுத்தும் பிரிவினர்

- வணிகத்தில் அக்கறை செலுத்தும் பிரிவினர்
- வணிகத்தில் அக்கறை செலுத்தும் பிரிவினர்களது நோக்கங்கள்

## 1.1 வணிகம் பற்றிய அடிப்படை எண்ணக்கருக்கள்

மனிதன் சமூகமயப்பட்டு நடத்தை மாற்றங்களுக்கு உட்பட்டபோது அவனது தேவைகளும் விருப்பங்களும் படிப்படியாக அதிகரித்துச் சென்றன. அதிகரித்த தேவைகளுள் தனக்கு அவசியமான சகல தேவைகளையும் தனித்து உற்பத்தி செய்வதென்பது ஒருவருக்குக் கடினமான காரியமொன்றாகக் காணப்பட்டது. இப்பிரச் சினைக்குத் தீர்வாகப் பல்வேறு தரப்பினரும் தத்தமது திறமை, தம்மிடம் காணப்படும் வளங்கள் என்பவற்றைப் பயன்படுத்தி தம்மால் மிகவும் சிறப்பாக உற்பத்திசெய்யக் கூடிய பொருள்களை மாத்திரம் பாரியளவில் உற்பத்திசெய்தனர். இதன் விளைவாக மிகை உற்பத்தி ஏற்பட்டது. இம்மிகை உற்பத்தியை ஏனைய தரப்பினருடன் பரிமாற்றியதோடு, தமக்குத் தேவையான ஏனைய பண்டங்களை அவர்களிடமிருந்து பெற்றுக்கொண்டனர். இவ்வாறு பண்டங்களிற்குப் பண்டம் பரிமாற்றம் செய்ததைப் **பண்டமாற்று முறை** (Barter system) என அழைத்தனர்.

நிகழ்காலத்திலும் கூட எந்தவொரு தரப்பினரும் தமக்குத் தேவையான அனைத்துப் பண்டங்களையும் தாமே உற்பத்திசெய்துகொள்வதில்லை. விவசாயி அரிசியை உற்பத்தி செய்வார், தச்சன் தளபாடங்களைத் தயார் செய்வார், ஆசிரியர் கற்பிப்பார், இவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் உற்பத்தியாளராகவும் இன்னொரு சந்தர்ப்பத்தில் நுகர்வோராகவும் இருப்பர். இவர்கள் அனைவரும் பல்வேறு வகையான உற்பத்திகளை மேற்கொள்கின்ற வணிக நிறுவனங்களினூடாகத் தமது தேவைகள், விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்கின்றனர். ஆகையால், நவீன சமூகமானது வணிக நடவடிக்கைகளுக்கு அதிக முக்கியத்துவத்தை வழங்குகின்றது.

## வணிக எண்ணக்கரு

மனிதனிற்குப் பிறப்பிலிருந்து இறப்பு வரை தேவைகளும் விருப்பங்களும் காணப் படுகின்றன. வணிகங்கள் மூலமே இத்தேவைகளும் விருப்பங்களும் நிறைவு செய்யப் படுகின்றன. வணிகங்கள் மூலமே தேவைகளுக்கும் விருப்பங்களுக்கும் ஏற்றவாறு பொருள்களும் சேவைகளும் உற்பத்திசெய்யப்பட்டுப் பங்கீடு செய்யப்படுகின்றன. எனினும், நிகழ்காலத்தில் மனிதன் தனது தேவைகள், விருப்பங்களை நிறை வேற்றிக் கொள்வதற்குப் பொருள்களையும் சேவைகளையும் உற்பத்திசெய்து விநியோகிக்கப்படும் முறைகள் பல்வேறுபட்டவையாகவும் சிக்கலானவையாகவும் காணப்படுகின்றன.

மனிதர்களது தேவைகளை நிறைவுசெய்வதற்கு அவசியமான பொருள்களையும் சேவைகளையும் உற்பத்திசெய்தல் அல்லது விநியோகம்செய்தல் தொடர்பான பொருளாதார நடவடிக்கைகள் ''**வணிகம்**'' எனப்படுகின்றது. இங்கு பெரும்பாலான வணிகங்கள் இலாபம் உழைக்கும் நோக்குடன் வணிக நடவடிக்கைகளை

மேற்கொள்வதோடு சில வணிகங்கள் இலாப நோக்கின்றியும் செயற்படுகின்றன. விசேடமாக அரச துறை நிறுவனங்களில் பெரும்பாலானவை இலாப நோக்கின்றிச் சமூக நலனை அடிப்படையாகக் கொண்டு செயற்படுகின்றன. பெரும்பாலான தனியார் துறை அமைப்புக்கள் இலாப நோக்குடன் செயற்படினும்கூட சில தனியார் துறை வணிகங்கள் இலாப நோக்கின்றிச் சமூக நலனில் அக்கறையுடன் செயற்படுவதைக் காணக்கூடியதாகவுள்ளது.

கடந்த காலங்களில் மனித வலுவின் மூலம் மேற்கொள்ளப்பட்டு வந்த உற்பத்திச் செயற்பாடுகளானவை இன்று நவீன தொழினுட்ப முறைகளைப் பயன்படுத்தி உற்பத்தியாக்கப்படுகின்றன. பெரும்பாலான வணிகக் கொடுக்கல் வாங்கல்கள் இலத்திரனியல் ஊடகங்கள் மூலமே இடம்பெறுகின்றன. இதனால், நிகழ்காலத்தில் பொருள்களுக்கான கட்டளையிடல், பணம் செலுத்துதல், விளம்பரம் செய்தல் போன்ற எந்தவொரு நடவடிக்கையையும் இலத்திரனியல் ஊடகங்களினூடாக விரைவாகவும் இலகுவாகவும் நிறைவேற்றிக்கொள்ளமுடியும். தகவல் தொடர்பாடல் தொழினுட்பத்தின் துரித வளர்ச்சியின் விளைவாக ஏற்பட்ட இலத்திரனியல் வணிகத்தினூடாக இன்று முழு உலகுமே ''உலகக் கிராமம்'' (Global village) என்னும் நிலைக்கு மாறியுள்ளது. உலக நாடுகளில் வாழும் மக்கள் தமது தேவைகளையும் விருப்பங்களையும் பூர்த்திசெய்ய வெவ்வேறுபட்ட நாடுகளில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களையும் சேவைகளையும் கொள்வனவு செய்வது இன்று பரவலாகக் காணப்படுகின்றது. உங்களது அன்றாட வாழ்க்கையானது எந்தளவு தூரத்திற்குப் பூகோளமயமாக்கலிற்கு உட்பட்டுள்ளது என்பதைப் பின்வரும் செயற்பாட்டினூடாக அறிந்து கொள்ள முடியும்.

செயற்பாடு 01

குறிப்பிட்ட ஒரு தினத்தில் உங்களால் நுகர்வு செய்யப்பட்ட சில பொருள்களைப் பெயரிட்டு அப்பொருள்களை உற்பத்தி செய்த நாடுகளைப் பட்டியற்படுத்துக.

## வணிக நோக்கம்

தமது தேவைகளைப் பூர்த்தி செய்கின்றபோது தரமான பொருள்களை நியாயமான விலைகளில் பெற்றுக் கொள்வதே நுகர்வோரது நோக்கமாகும். நுகர்வோரைப் போன்றே வணிகங்களும் பல்வேறு நோக்கங்களையோ அல்லது விசேடமான ஒரு நோக்கத்தையோ நிறைவேற்றிக் கொள்ளும் எதிர்பார்ப்புடனேயே வணிக நடவடிக்கைகளை மேற்கொள்கின்றன.



படம் 1.1

வணிகத்தின் உரிமையாளரைப் போன்றே அதனுடன் தொடர்புடைய முகாமையாளர்கள், ஊழியர்கள், வாடிக்கையாளர்கள், அரசு, சமூகம் போன்ற பல்வேறு தரப்பினர்களும் பல்வேறுப்பட்ட நன்மைகளை வணிகத்திலிருந்து எதிர்பார்ப்பதனாலேயே வணிகங்கள் தமது செயற்பாடுகளை மேற்கொள்கின்றன.

**பொதுவாகக் காணப்படக்கூடிய வணிக நோக்கங்கள் சில கீழே காட்டப்படுகின்றன.**

1. **இலாபத்தை உழைத்தல்**

   உரிமையாளர்கள் தாம் ஈடுபடுத்திய மூலதனத்திற்குப் போதியளவு வருமானத்தினைப் பெற்றுக்கொள்ளும் நோக்கத்தினையே வணிகங்கள் இலாபத்தினை உழைத்தல் என்பது குறிக்கின்றது.

2. **நுகர்வோரது தேவைகள், விருப்பங்களைப் பூர்த்திசெய்தல்**

   வணிகமொன்றின் மூலம் நுகர்வோரது தேவைகள், விருப்பங்கள் எவ்வாறு பூர்த்திசெய்யப்படுகின்றன என்பதை அடிப்படையாகக்கொண்டே வணிகங்களின் நிலைத்திருக்கும் தன்மை தீர்மானிக்கப்படுகின்றது.

இந்நோக்கங்களை நிறைவேற்றும்போது வணிகமொன்றிற்குப் பல்வேறு துணை நோக்கங்களின் மீது கவனஞ் செலுத்தும் தேவை ஏற்படுகின்றது. அவ்வாறான துணை நோக்கங்கள் சிலவற்றை நாம் இங்கு கலந்துரையாடுவோம்.

(i) **பொருள்கள், சேவைகளது தரத்தினை மேம்படுத்துதல்**

வணிகமானது நுகர்வோரின் தேவைகள் விருப்பங்களைச் சரியான நேரத்தில் உரியவாறு நிறைவு செய்வது மட்டுமன்றி நியாயமான விலைகளில் தரமான பொருள்கள், சேவைகளை வழங்குவதற்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ளும்.

(ii) **தொழில் வாய்ப்புகளை ஏற்படுத்துதல்**

ஊழியர்களிலிருந்து மேல்மட்ட முகாமையாளர் வரையில் பல்வேறு தொழில் வாய்ப்புகள் வணிகங்கள் மூலம் உருவாக்கப்படுகின்றன. தனிநபரிடம் காணப்படும் பல்வேறு ஆற்றல்களை வெளிக்கொணர்வதற்கும், அதன் மூலம் பயன்பாட்டினைப் பெற்றுக் கொள்வதற்கும் இத்தொழில் வாய்ப்புகள் முக்கியமானவையாகும்.

(iii) **ஊழியர் நலன்கள்**

தனது ஊழியர்களைத் திருப்திப்படுத்தும், ஊக்கப்படுத்தும் நோக்கங்களுடன் சம்பளத்திற்கு மேலதிகமாக நலன்புரிச் சேவைகளை வழங்குதல் வணிகங்களது நோக்கங்களில் ஒன்றாகும். உணவு மற்றும் குடிபானம் வழங்குதல், தங்குமிட வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தல், போக்குவரத்து வசதிகளை வழங்குதல், வைத்திய வசதிகள், காப்புறுதி வசதிகள் போன்ற பல்வேறு வசதிகளை வணிகமொன்று நலன்புரிச் சேவைகளாகத் தமது ஊழியர்களுக்கு வழங்குகின்றது.

# நுகர்வோரின் தேவைகளும் விருப்பங்களும்

## தேவைகள்

மனிதன் உயிர் வாழ்வதற்கு அவசியமாக நிறைவுசெய்து கொள்ள வேண்டியவைகள் மனித தேவைகள் எனப்படும். உணவு, உடை, உறையுள் என்பவை மனிதனின் அடிப்படைத் தேவைகளெனத் தொன்று தொட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. சமூக விருத்திகள் காரணமாகக் கல்வி, சுகாதாரம், பாதுகாப்பு, போக்குவரத்து, தொடர்பாடல், பொழுதுபோக்கு போன்றனவும் அடிப்படை மனித தேவைகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாறான அடிப்படை மனிதத் தேவைகளில் பின்வரும் பண்புகள் இனங்காணக்கூடியவையாக உள்ளன.



படம் 1.2

### தேவைகளது பண்புகள்

- **அத்தியாவசியமானவை**
  உயிர் வாழ்வதற்காகத் தேவைகளைப் பூர்த்திசெய்வது அத்தியாவசிய மானதாகும்.
- **பொதுத்தன்மை கொண்டவை**
  பெரும்பாலான நபர்களினது தேவைகள் ஒத்தவையாகக் காணப்படு கின்றன. தேவைகள் அனைவருக்கும் பொதுவானவையாகும்.
- **தோற்றுவிக்க முடியாதிருத்தல்**
  தேவைகள் மனிதரில் இயல்பாக எழுகின்றன. வணிகர்கள் தேவைக ளைத் தோற்றுவிக்க முடியாது.
- **வரையறுக்கப்பட்டவை.**
  தேவைகள் எண்ணிக்கை ரீதியாக மிகவும் குறைந்த அளவிலேயே காணப்படுகின்றன.

## விருப்பங்கள்

மனித தேவைகளைப் பூர்த்திசெய்கின்ற பல்வேறுபட்ட முறைகளே ''**விருப்பங்கள்**'' எனப்படும். ஒரே வகையான தேவையினைப் பூர்த்திசெய்வதற்குப் பல்வேறுபட்ட முறைகள் காணப்படுகின்றன.

**உதாரணம் :-**

| தேவைகள் | | விருப்பங்கள் |
|---|---|---|
| உணவு | - | இடியப்பம், ஐஸ்கிரீம், கேக் |
| உடை | - | சேலை, சீருடை, காற்சட்டை, சப்பாத்து |

மனிதத் தேவைகள் விருப்பங்களை நிறைவு செய்வதற்குப் பல்வேறு பொருள்கள், சேவைகளை வணிகர்கள் உற்பத்தி செய்கின்றனர். இவ்விருப்பங்கள் பின்வரும் பண்பு களைக் கொண்டிருக்கும்.

## விருப்பங்களின் பண்புகள்

- **அத்தியாவசியமானதன்று**

  உயிர் வாழ்வதற்காக யாதேனும் விருப்பமொன்றைப் பூர்த்திசெய்து கொள்வது கட்டாயமன்று. அதனையொத்த வேறு வகையான விருப்பங்க ளின் மூலமும் அத்தேவையைப் பூர்த்திசெய்து கொள்ள முடியும்.

- **பல்வகைப்பட்டவை**

  எல்லாத் தரப்பினருக்கும் தேவைகள் பொதுவானவையாக இருப்பினும் அவற்றைப் பூர்த்திசெய்யும் முறைகளான விருப்பங்கள் அவர்களது பொருளாதார, சமூக நிலமைகளிற்கமைய வேறுபட முடியும்.

- **தோற்றுவிக்கக்கூடியதாக இருத்தல்**

  விருப்பங்களை வணிகர்கள் தோற்றுவிக்க முடியும்.

- **வரையறைக்குட்படாதவை**

  ஒரு தேவையைப் பூர்த்திசெய்து கொள்வதற்காகப் பல்வேறு வகையில் விருப்பங்களைப் பயன்படுத்த முடியும்.

- **பரவலானவையாகக் காணப்படல்**

  விருப்பங்கள் வரையறுக்கப்படாதவையாகவும் பல்வேறுபட்டவையாக வும் காணப்படுவதனால் விருப்பங்களைப் பூர்த்திசெய்து கொள்ளும் முறைகளும் பரவலானவையாகக் காணப்படும்.

## செயற்பாடு 02

நீங்கள் பின்வரும் தேவைகளை நிறைவுசெய்து கொள்ளும் பல்வேறு முறைகளைக் குறிப்பிடுங்கள்.

| தேவைகள் | விருப்பங்கள் |
|---|---|
| உணவு | |
| ஆடையணிகள் | |
| வசிப்பிடம் | |
| கல்வி | |
| சுகாதாரம் | |
| பாதுகாப்பு | |
| போக்குவரத்து | |
| தொடர்பாடல் | |
| பொழுதுபோக்கு | |

## செயற்பாடு 03

தேவைகள், விருப்பங்களுக்கிடையில் காணப்படும் வேறுபாடுகள் நான்கினைத் தருக ?

## செயற்பாடு 04

மனிதத் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்வதற்காகப் பயன்படுத்தப்படும் பல் வேறுபட்ட பொருள்கள், சேவைகள் நிகழ்கால வணிகர்கள் மூலம் ஆக்கபூர்வமான முறையில் சந்தைக்குக் கையளிக்கப்படுகின்றன. இதற்கமைய கடந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் மனித தேவைகளைப் பூர்த்திசெய்துகொள்ளும்போதும் பல்வேறு பொருள்கள், சேவைகளைப் பயன்படுத்துதல் தொடர்பாக ஒப்பிட்டு ஆராயவும்.

## உற்பத்தி வணிகம்

வணிகமொன்றினால் உற்பத்தி செய்யப்படும் உற்பத்திகளின் தன்மைக்கமைய வணிகங் களைப் பின்வருமாறு வகைப்படுத்திக் காட்ட முடியும்.

- பொருள் உற்பத்தி வணிகம்
- சேவை உற்பத்தி வணிகம்

## பொருள் உற்பத்தி வணிகம்

மனித தேவைகள், விருப்பங்களை நிறைவு செய்கின்ற, தொட்டுணரக்கூடிய, பௌதிகத் தன்மை கொண்ட பொருள்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்களைப் "**பொருள் உற்பத்தி வணிகம்**" என அழைக்கமுடியும். ஒரே வகையான தேவையைப் பூர்த்திசெய்வதற்காகப் பயன்படுத்தக்கூடிய பல்வேறு பொருள்கள் உற்பத்தி வணிகங்கள் மூலம் சந்தைக்கு வழங் கல் செய்யப்படுகின்றன. நுகர்வோரின் சுவை, வருமான மட்டம், சமூக அந்தஸ்து (Social status) போன்ற விடயங்களைக் கருத்திற் கொண்டு வணிகங்களினால் பல்வேறு பண்டங் கள் நுகர்விற்காகச் சந்தைக்கு வழங்கப்பட்டு, மனிதனது வாழ்க்கைப் பாங்கினை (Life style) இலகுபடுத்திக் கொள்வதற்குப் பங்களிப்புச் செய்யப்படுகின்றது. வணிகங்கள் மூலம் உற்பத்தி செய்யப்படும் பண்டங்களுக்கான உதாரணங்கள் பல கீழே காட்டப்பட்டுள்ளன.



படம் 1.3

உதாரணம் :-

தயாரிக்கப்பட்ட உணவு, குடிபானங்கள், மோட்டார் வாகனம், மின்குமிழ், கையடக்கத் தொலைபேசி, சலவை இயந்திரம், சமையலறைப் பொருள்கள்

### செயற்பாடு 05

உங்களது வீட்டில் அன்றாட நுகர்விற்காகப் பயன்படுத்தப்படும் பொருள்கள் பல காணப்படும். அவற்றுள் உமது பிரதேசத்தில் உற்பத்திசெய்யப்பட்ட பொருள்கள் எவையென்பதைப் பட்டியற்படுத்துக.

### செயற்பாடு 06

கீழ்க் காட்டப்பட்டுள்ள ஒவ்வொரு பொருள்களும் பல்வேறு பண்டக்குறிகளுடன் சந்தையில் காணப்படும். அந்தப் பண்டக்குறிகளின் அடிப்படையில் உங்களது வீட்டில் பயன்படுத்தப்படும் பொருள்களைக் கருத்திற்கொண்டு அவற்றை நீர் தெரிவுசெய்தமைக்கான காரணங்களையும் குறிப்பிடவும். இவ்விடையினை உங்களது நண்பரின் விடையுடன் ஒப்பிட்டுக் கலந்துரையாடலில் ஈடுபடவும்.

| பொருள் வகைகள் | பண்டக்குறியின் பெயர் | தெரிவுசெய்வதற்கான காரணங்கள் |
|---|---|---|
| சவர்க்காரம் | | |
| பற்பசை | | |
| சொக்கிலேற் | | |
| அப்பியாசப் புத்தகங்கள் | | |
| பேனா | | |

## சேவை உற்பத்தி வணிகம்

வணிகமொன்றின் மூலம் நுகர்வோரது தேவைகள், விருப்பங்களைப் பூர்த்திசெய்வதற்காக நுகர்வோருக்கு வழங்கப்படும் ஒரு செயற்பாடு அல்லது செயன்முறை **''சேவைகள்''** என அழைக்கப்படும். இக்கருமங்களை மேற்கொள்ளும் நிறுவனங்கள் **''சேவை வழங்கல் வணிகம்''** என அழைக்கப்படும்.

உதாரணம் :-

மொத்த வியாபார நிறுவனங்கள்
சில்லறை வியாபார நிறுவனங்கள்
காப்புறுதி நிறுவனங்கள்
வங்கிகள்
வைத்தியசாலைகள்
கல்வி நிறுவனங்கள்
அழகுக்கலை நிலையங்கள்.




படம் 1.4

செயற்பாடு 07

உங்களது வீட்டுக் கருமங்களை இலகுபடுத்திக் கொள்வதற்காகப் பல்வேறு சேவை களைப் பெற்றுக்கொள்ள வேண்டியுள்ளது. உங்களது பிரதேசத்தில் காணப்படும் சேவை வழங்கல் வணிகங்கள் மூலம் வழங்கப்படும் சேவைகள் சிலவற்றை இனங்காணுங்கள்.

## உற்பத்திக் காரணிகள்

பொருள்கள் அல்லது சேவைகளை உற்பத்தி செய்வதற்காக வணிகங்களிற்குப் பல்வேறு வளங்கள் தேவைப்படுகின்றன. இவ்வாறு தேவைப்படும் வளங்கள் ''**உற்பத்திக் காரணிகள்**'' என அழைக்கப்படும். உற்பத்திக் காரணிகளை நிலம், உழைப்பு, மூலதனம், முயற்சி என வகைப்படுத்திக் காட்டமுடியும்.

### நிலம்

இயற்கையிலிருந்து கிடைக்கப்பெற்ற அனைத்து வளங்களும் ''**நிலம்**'' என அழைக்கப் படும். நிலத்தின் மேற்பகுதியில் மட்டுமின்றி அதன் அடிப்பகுதியில் காணப்படும் அனைத்து வளங்களும் கூட நிலம் என்பதன் கீழ் உள்ளடக்கப்படும். நிலத்திலிருந்து கிடைக்கப்பெறும் அநேகமான வளங்கள் வரையறுக்கப்பட்டவையாக உள்ளன.

உதாரணம் :-

கனியவளம், காட்டு வளம், ஆறு, மண், தரைத் தோற்றம், காலநிலை, மழைநீர்

### உழைப்பு

வணிகமொன்றில் இடம்பெறும் உடல், உள ரீதியான பங்களிப்புகள் ''**உழைப்பு**'' என எளிமையாகக் கூற முடியும்.

உதாரணம் :-

| | | |
|---|---|---|
| உடல் உழைப்பை வழங்குவோர் | - | சுரங்கத் தொழிலாளர்கள்,<br>சுத்திகரிப்புத் தொழிலாளர்கள் |
| உள உழைப்பைப் வழங்குவோர் | - | கணக்காளர்கள்,<br>முகாமையாளர்கள் |

### மூலதனம்

உற்பத்திக்காக மனிதனால் உருவாக்கப்பட்டவைகளும் உற்பத்தியின்போது துணையாகக் கொள்ளப்படுபவைகளும் ''**மூலதனம்**'' எனக்கூறலாம்.

உதாரணம் :-

இயந்திரம், கட்டடம், மோட்டார் வாகனம், பணம்

### முயற்சி

உற்பத்திக்குத் தேவையான நிலம், உழைப்பு, மூலதனம் போன்ற உற்பத்திக் காரணிகளை ஒழுங்கமைத்து யாதேனும் உற்பத்திச் செயன்முறையொன்றை ஆரம்பித்து நடாத்திச் செல்லும் கருமமானது ''முயற்சி அல்லது முயற்சியாண்மை'' என அழைக்கப்படும். வணிகமொன்றின் உரிமையாளர் முயற்சியாளராவார். முயற்சியாளர் வணிக இடர்களைப் பொறுப்பேற்று புத்துருவாக்கங்களை அறிமுகப்படுத்தி வணிக நடவடிக்கைகள் தொடர்பான தீர்மானங்களை மேற்கொள்வார்.

#### செயற்பாடு 08

1. உங்களது பிரதேசத்தில் காணப்படும் வணிகமொன்றைத் தெரிவுசெய்து அவ்வணிகத்திற்குப் பயன்படுத்தப்படும் பல்வேறு வளங்களைப் பட்டியற்படுத்துங்கள்.
2. உங்களால் இனங்காணப்பட்ட வளங்களை நிலம், உழைப்பு, மூலதனம், முயற்சி என்னும் காரணிகளின் அடிப்படையில் வகைப்படுத்திக் காட்டுங்கள்.
3. மேற்காட்டிய வணிகத்தில் நிறைவேற்றப்படும் முயற்சியாண்மைக் கருமங்களைக் குறிப்பிட்டுக் காட்டுங்கள்.

## 1.2 வணிகத்தில் அக்கறை செலுத்தும் பிரிவினர்

வணிக நடவடிக்கைகள் தொடர்பாக அக்கறை செலுத்தும் பல்வேறுப்பட்ட பிரிவினர்களை **அக்கறை செலுத்தும் பிரிவினர்** என அழைப்பர். இந்த அக்கறை செலுத்தும் பிரிவினர்கள் வெவ்வேறுப்பட்ட நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்வதற்காகவே வணிகக் கருமங்களில் அக்கறை செலுத்துவர்.



படம் 1.5 வணிகமொன்றின் மீது அக்கறை செலுத்தும் பிரிவினர்

மேற்காட்டப்பட்ட படத்தில் காணப்படும் அக்கறை செலுத்தும் பிரிவினர் தொடர்பாக அறிந்து கொள்வோம்.

**உரிமையாளர்கள்** வணிகத்தில் வளங்களை ஈடுபடுத்துவோர் உரிமையாளர் எனப் படுவார். தனி நபர் அல்லது பல நபர்கள் சேர்ந்த குழுவொன்று வணிகமொன்றின் உரிமையாளராக இருக்க முடியும்.

**முகாமையாளர்கள்** வணிக நடவடிக்கைகளைச் செயற்படுத்தும் உரிமையாளர் களின் தீர்மானங்களை நடைமுறைப்படுத்தும் நபர்கள் முகா மையாளர் எனப்படுவர். சிலவேளைகளில் உரிமையாளரே முகாமையாளராகவும் காணப்படுவர். அநேகமாக பாரிய அளவிலான வணிகங்களில் நிதி முகாமையாளர், சந்தைப் படுத்தல் முகாமையாளர் போன்று பல முகாமையாளர்கள் காணப்படுவர்.

**வாடிக்கையாளர்கள்** வணிகத்திலிருந்து பொருள்களையும் சேவைகளையும் கொள்வனவுசெய்யும் நபர்கள் வாடிக்கையாளர்கள் எனப்படுவர். இவர்கள் இப்பொருள்களை மீள விற்பனைசெய்யும் நோக்குடன் அல்லது நுகர்வுத் தேவை கருதிக் கொள்வனவு செய்வர்.

**வழங்குனர்கள்** வணிகத்திற்குத் தேவையான பல்வேறுபட்டவைகளை வழங்குவோர் வழங்குனர்கள் எனப்படுவர். மூலப்பொருள்கள், போக்குவரத்து வசதிகள் போன்றவற்றை அவர்கள் வழங்குவர்.

**போட்டியாளர்கள்** யாதேனும் வணிகமொன்றின் மூலம் உற்பத்தி செய்யப்படும் உற்பத்திப் பொருள்களுக்குச் சமமான பொருள்கள், சேவைகளை உற்பத்தி செய்து சந்தைப்படுத்துபவர்கள் ''போட்டியாளர்கள்'' என அழைக்கப்படுவர்.

**நிதி நிறுவனங்கள்** வணிகத்திற்குத் தேவையான கடன்கள், ஆலோசனைச் சேவைகள் போன்றவற்றை வழங்கும் வங்கிகளும், ஏனைய கடன் வழங்கும் நிறுவனங்களும் ''நிதி நிறுவனங்கள்'' என அழைக்கப்படும்.

**ஊழியர்கள்** வணிகக் கருமங்களை நிறைவேற்றும் நபர்கள் ஊழியர்களாவர்.

**அரசாங்கம்** நாடொன்றின் பொருளாதார விருத்திக்குத் தேவையான கொள்கைகளை வகுப்பது அரசாங்கம் எனப்படும்.

**சமூகம்** நாட்டில் வாழும் முழுச் சனத்தொகையைக் குறிக்கும்.
உதாரணம் : சூழலியலாளர்கள், ஊடகவியலாளர்கள், அழுத்தக் குழுக்கள்.

வணிகத்தின் மீது அக்கறை செலுத்தும் இவ்வனைத்துத் தரப்பினரும் வணிகத்தின் மூலம் பல்வேறு நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ள எதிர்பார்க்கின்றனர். வணிகத்தின் மீது அக்கறை செலுத்தும் பல்வேறு பிரிவினர்களையும் அவர்களது நோக்கங்களையும் அட்டவணை இலக்கம் 1.1 காட்டுகின்றது.

| அக்கறை செலுத்துவோர் | நோக்கங்கள் |
|---|---|
| உரிமையாளர்கள் | ஈடுபடுத்திய மூலதனத்தைப் பாதுகாத்தல், போதியள விலான இலாபத்தை உழைத்தல், எதிர்காலத்தில் வணிக நடவடிக்கைகளை அபிவிருத்திசெய்தல் |
| முகாமையாளர்கள் | வணிக நோக்கங்களை நிறைவேற்ற அவசியமான முகா மைத் தீர்மானங்களை எடுத்தலும் அவற்றை நடை முறைப்படுத்தலும் தொழில் அபிவிருத்தி, தொழிற் திருப்தி போன்றன. |
| ஊழியர்கள் | நியாயமானசம்பளத்தைப் பெறுதல், தொழிற் பாதுகாப்பை உறுதிப்படுத்திக் கொள்ளல், பிற நன்மைகளைப் பெற்றுக் கொள்ளல் |
| வாடிக்கையாளர்கள் | தரமான உற்பத்திப் பொருள்களை நியாயமான விலையில் பெற்றுக்கொள்ளல் |
| வழங்குனர்கள் | தொடர்ச்சியாகப் பொருள் கட்டளையைப் பெற்றுக் கொள் ளல். பணத்தினை உரிய நேரத்தில் பெற்றுக் கொள்ளல் |
| நிதி நிறுவனங்கள் | வழங்கப்பட்ட கடன்களை உரிய காலத்தில் மீள அற விட்டுக் கொள்ளல், மேலும் கடன்களை வழங்குதல் |
| அரசு | பெறவேண்டிய வரி வருமானங்களைச் சரியான முறை யில் பெற்றுக் கொள்ளல், தொழில் வாய்ப்புகளை ஏற்படுத்தல்,தேசிய உற்பத்தியை அதிகரித்துக் கொள்ளல். |
| போட்டியாளர்கள் | தமது உற்பத்திப் பொருள்களினது விலைகளைத் தீர்மானித்தல். ஏனைய வணிகங்களது கருமங்கள் நடை பெறும் முறைகள் தொடர்பாகத் தகவல்களை அறிந்து கொள்ளல்.போட்டி நிலைமைகளுக்கு முகங்கொடுத்தல் |
| சமூகம் | சூழலில் பாதிப்பை ஏற்படுத்தாதவாறு வணிகக்கருமங்கள் மேற்கொள்ளப்படுகின்றதா என்பதை அவதானித்தல்,சமூக நலனில் அக்கறையுடன் செயற்படுகின்றார்களா என்பதை அறிதல். |

அட்டவணை 1.1 அக்கறை செலுத்தும் பிரிவினர்களுக்கும் அவர்களது நோக்கங்களுக்குமான உதாரணங்கள்

அக்கறை செலுத்தும் பிரிவினரின் பல்வேறுப்பட்ட நோக்கங்களை நிறைவுசெய்யும் நோக்குடன் வணிகங்களும் தமது செயற்பாடுகளை மேற்கொள்ளல் வேண்டும். எனவே தான் வணிகங்களும் கூட அக்கறை செலுத்தும் பிரிவினர்களிடமிருந்து வணிகத்திற்குப் பல்வேறுபட்ட பங்களிப்புகளை எதிர்பார்க்கின்றன.மேற்காட்டிய ஒவ்வொரு பிரிவினர்களிடமிருந்தும் வணிகம் எதிர்பார்க்கும் பங்களிப்புகளுக்கான உதாரணங்கள் சிலவற்றை பின்வரும் அட்டவணை இலக்கம் 1.2 இல் காட்டப்பட்டுள்ளது.

| அக்கறை செலுத்தும் தரப்பினர் | வணிகம் எதிர்பார்க்கும் பங்களிப்புகள் |
|---|---|
| உரிமையாளர்கள் | தேவையான அளவு மூலதனப் பங்களிப்பினைப் பெற்றுக் கொள்ளல்.<br>வணிகக் கருமங்களை ஈடுபாட்டுடனும் அர்ப்பணிப்புடனும் மேற்கொள்ளல்.வணிகச் செயற்பாடுகளைப் பரிசீலனை செய்தல். |
| முகாமையாளர்கள் | வணிகத் திட்டத்தைச் சரியான முறையில் செயற்படுத்துதல்.<br>சரியான தீர்மானமெடுத்தல் |
| ஊழியர்கள் | வழங்கப்பட்ட பொறுப்புகளை சரியான முறையில் நிறை வேற்றல்.<br>உழைப்புத் திறனை அதிகரித்துக் கொள்ளல் |
| வழங்குனர்கள் | தரமான மூலப்பொருள்களை வழங்குதல்.<br>உரிய நேரத்தில் மூலப்பொருள்களை வழங்குதல். |
| அரசாங்கம் | வரிச்சலுகைகளை வழங்குதல், குறைந்த வட்டி வீதத்தில் கடன் போன்ற ஏனைய ஊக்குவிப்புகளை வழங்குதல் |
| | |

அட்டவணை 1.2 அக்கறை செலுத்தும் பிரிவினர் மூலம் வணிகம் எதிர்பார்க்கும் பங்களிப்புகள்

இவ்வாறு வணிகத்திற்கும் அதில் அக்கறை செலுத்தும் பிரிவினர்களுக்குமிடையே காணப்படும் நெருங்கிய தொடர்புகளின் அடிப்படையில் வணிகத்தின் நிலைப்புத் தன்மையும் எதிர்கால அபிவிருத்தியும் நிர்ணயிக்கப்படும்.

## செயற்பாடு 09

உங்களது பாடசாலையுடன் தொடர்புடைய அக்கறை செலுத்தும் பிரிவினர்களை இனங்கண்டு பெயரிட்டுக் காட்டவும். அவர்கள் பாடசாலையின் மூலம் நிறை வேற்றப்படவேண்டுமென எதிர்பார்க்கப்படும் நோக்கங்களையும் அவர்கள் பாடசா லைக்கு வழங்க வேண்டிய பங்களிப்புகளையும் அட்டவணைப்படுத்துக.

## செயற்பாடு 10

உங்களது பிரதேசத்தில் வணிகக் கருமங்களில் ஈடுபடும் பின்வரும் நிறுவனங்களின் மீது அக்கறை செலுத்தும் பிரிவினர்களை இனங்கண்டு எழுதவும்

வணிக வங்கியொன்று

தொழிற்சாலையொன்று

# 2 வணிகச் சூழல்




இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.

2.1 வணிகச் சூழலும் வணிகச் செயற்பாடுகளும்

2.2 தொழினுட்ப மற்றும் பொருளாதாரச் சூழல்கள்

- தொழினுட்பச் சூழலின் செல்வாக்கு
- பொருளாதாரச் சூழலின் செல்வாக்கு

2.3 பூகோளமயச் சூழலும் வணிகச் செயற்பாடும்

2.4 வணிகமொன்றின் சூழலைக் கற்பதன் முக்கியத்துவம்

## 2.1 வணிகச் சூழலும் வணிகச் செயற்பாடும்

எந்தவொரு வணிகத்தை நோக்கினும் அதனுடன் தொடர்புடைய சூழலொன்று காணப்படும். வணிகமொன்றில், அதனைச் செயற்படுத்தக்கூடிய சூழலில் காணப்படும் காரணிகள் வணிக நிலைப்பாட்டிற்கு நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ தாக்கங்களை ஏற்படுத்தக்கூடியவையாக உள்ளன. இதற்கமைய வணிகத்தை நடாத்திச் செல்லும்போது அதில் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடிய பல்வேறு காரணிகளினால் செயற்படும் சூழலை **வணிகச் சூழல்** என எளிமையாக அழைக்க முடியும். இச்சூழல் தாக்கங்கள் விரைவாக மாற்றமடைவதைப் போன்று சூழற் தாக்கங்களுக்கு இசை வாக்கமடையக்கூடியவாறு செயற்படவேண்டி இருப்பதனால் வணிக உலகமானது தொடர்ச்சியான மாற்றங்களுக்கு உட்படுகின்றது.

வணிகமொன்று வெற்றியடைவதற்கு வணிகச்சூழல் தொடர்பாக எப்பொழுதும் கவனஞ் செலுத்துவது மிக முக்கியமானதாகும். சூழற் காரணிகளில் ஏற்படும் பல்வேறு மாற்றங்களையும் அதனால் ஏற்படும் பல்வேறு போக்குகளையும் இனங்காண்பதன் மூலம் புதிய வணிக வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொள்ள முடியும். எனவே, வெற்றிகரமான வணிகங்கள் எவ்வேளையிலும் வணிகச்சூழலில் கவனஞ் செலுத்துவதோடு, அதற்கேற்றவாறு தமது வணிக நடவடிக்கைகளைச் செயற்படுத்துகின்றன.

## வணிகச் சூழலை வகைப்படுத்தல்

வணிகச் சூழலைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

- அகச் சூழல்
- புறச் சூழல்

வணிகமொன்றில் அகச் சூழல் மற்றும் புறச் சூழலில் பல்வேறு பிரிவினர்களோடு பல்வேறு காரணிகளும் செல்வாக்குச் செலுத்துகின்றன. இங்கு பின்வரும் பிரிவினர்கள், காரணிகள் தொடர்பாக மட்டுமே கவனஞ் செலுத்தப்படுகின்றது.




**படம்** 2.1 **வணிகச் சூழலின் வகைகள்**

## அகச் சூழல்

வணிகச் செயற்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடிய அச்செயற்பாட்டில் ஈடுபடும் பல்வேறு பிரிவினர்களும் வணிகத்தில் காணப்படும் ஏனைய காரணிகளும் ''**அகச் சூழல்**'' என அழைக்கப்படும். வணிகமொன்றின் அகச்சூழலுக்கு உரித்தான பிரிவினர் களும் அப்பிரிவினர்களால் வணிகத்தில் ஏற்படும் தாக்கங்களும் பின்வருமாறு.

| | |
|---|---|
| **உரிமையாளர்** | இவர் வணிகத்தில் மூலதனத்தை ஈடுபடுத்துபவராக இருப்பார். உரிமையாளர்களின் நிதிப்பலம், வணிக அறிவு, அனுபவம் என்பன வணிகமொன்றின் வெற்றிக்குக் காரணமாக அமையும். |
| **முகாமையாளர்கள்** | வணிகமொன்றின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக வணி கத்தின் வளங்களைச் செயற்படுத்துவதற்குத் தேவையான தீர்மானம் மேற்கொள்ளும் நபர்களே முகாமையாளர்கள் ஆவர். வணிகமொன்றின் வாடிக்கையாளருக்கும் பணியாளர்களுக்கும் இடையிலான சிறந்த தொடர்பானது முகாமையாளர்கள் மூலமே கட்டியெழுப்பப்படுகின்றது. சில வணிகங்களில் உரிமையாளர்களே முகாமையாளர்களாகவும் காணப்படுவர். |
| **ஊழியர்கள்** | தனது அறிவு, திறன் என்பவற்றைப் பயன்படுத்தி ஒப்படைக்கப் பட்ட கருமங்களைச் சரியான முறையில் நிறைவேற்றுவோர் ஊழியர்கள் எனப்படுவர். அவர்களது சாதக மனப்பாங்கும் அர்ப்பணிப்பும் வணிகமொன்றின் வெற்றிக்குக் காரணமாக அமையும். |

### புறச் சூழல்

வணிகமொன்றின் செயற்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்துகின்ற, வணிகத்தினின்றும் வெளியக ரீதியாகச் செயற்படும் பிரிவினர்களும் ஏனைய காரணிகளும் ''**புறச்சூழல்**'' என அழைக்கப்படும். புறச்சூழல் காரணிகள் வணிகத்தில் தாக்கத்தை ஏற்படுத்தும் முறையினைப் பின்வருமாறு காட்டலாம்.

**வாடிக்கையாளர்கள்**

வணிகமொன்றில் பொருள்கள், சேவைகளைக் கொள்வனவு செய்வோர் வாடிக்கை யாளர்களாகக் கருதப்படுவர். இவர்கள் மூலமே வணிகமொன்றின் நிலைப்புத்தன்மை நிர்ணயிக்கப்படும். எனவே, அவர்களது பல்வேறு தேவைகள், விருப்பங்களை இனங்கண்டு அவற்றைச் சரியான முறையில் திருப்திசெய்வதற்கு வணிகங்கள் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். வாடிக்கையாளர்களது கொள்வனவு செய்யும் போக்குகளில் ஏற்படும் மாற்றங்கள் வணிகமொன்றின் செயற்பாடுகள் மீது அதிக தாக்கத்தினை ஏற்படுத்த முடியும்.

**வழங்குனர்கள்**

வணிகமொன்றை நடாத்திச்செல்லும்போது தேவையான மூலப்பொருள்கள், போக்குவரத்து வசதிகள் போன்ற பல்வேறு சேவைகளை வழங்கும் பிரிவினர்கள் வழங்குனர்கள் எனக் கருதப்படுவர். மூலப்பொருள்கள் மற்றும் சேவைகளைத் தொடர்ச்சியாக உரிய நேரத்திற்குப் பெற்றுக்கொள்ள உதவுதல், அவற்றின் தரத்தை உறுதிப்படுத்தல் எனும் வழங்குனரது சேவைகள் வணிகத்தின் தொடர்ச் சியான செயற்பாட்டை நடாத்திச் செல்வதற்கு மிக முக்கியமானவையாகும்.

**போட்டியாளர்கள்**

வணிகமொன்றினது பொருள் அல்லது சேவையொன்றிற்குச் சமமான பொருள் அல்லது சேவையொன்றை உற்பத்திசெய்யும் அல்லது விநியோகம்செய்யும் நிறுவனங்கள் போட்டியாளர்கள் எனக் கருதப்படும். போட்டியாளர்கள் அவர்களது வணிகச் செயற் பாடுகளை மேற்கொள்ளும் முறைகள், போட்டியாளர்களது உற்பத்திகளின் விலைகள், தரம் போன்ற விடயங்களும் வணிகச் செயற்பாடுகளில் அதிக தாக்கத்தை ஏற்படுத்தும்.

**அரசியற் சூழல்**

நாட்டில் அரசாங்கத்தினது நிலைத்த தன்மை மற்றும் அரசினால் பின்பற்றப்படும் வேறுபட்ட கொள்கைகள் வணிகங்களில் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியவையாகும். இவற்றைக் கருத்திற்கொண்டு வணிகர்கள் தமது வணிகச் செயற்பாடுகளை மேற் கொள்ளல் வேண்டும். அரசியற் சூழல்களுக்கு உதாரணங்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.

உதாரணம் :- அரசினது நிலைப்புத் தன்மை
உட்கட்டமைப்பு அபிவிருத்திக் கொள்கைகள்
வரவு செலவுத் திட்டக் கொள்கைகள்
தொழிலாளர் தொடர்பான கொள்கைகள்

## சட்டச் சூழல்

உள்நாட்டு உற்பத்தியாளர்கள், நுகர்வோர், வணிகச் சமூகம் போன்றோர்களையும் சூழலையும் பாதுகாப்பதற்காக அங்கீகரிக்கப்பட்ட சட்ட விதிகள் மற்றும் ஒழுங்கு முறைகள் என்பன சட்டச் சூழலில் அடங்கும். அரசினால் விதிக்கப்படுகின்ற சட்ட விதிகள், ஒழுங்கு முறைகள் என்பன வணிகங்களுக்குப் பல்வேறு வகையான தாக்கங் களை ஏற்படுத்தும். அதேபோன்று சட்டதிட்டங்களை நடைமுறைப்படுத்துவதற்காக நிறுவனங்கள், சபைகள், ஆணைக்குழுக்கள், மற்றும் பொறுப்பு வாய்ந்த அதிகாரிகள் மற்றும் தனிநபர்கள் போன்றோர்களை அரசு நியமித்துள்ளது. இவ்வாறான சட்ட விதிகளுக்கு உதாரணங்கள் பல கீழே தரப்பட்டுள்ளன.

உதாரணம் :-

2007 ஆம் ஆண்டு 07 ஆம் இலக்க கம்பனிச் சட்டம்.
2003 ஆம் ஆண்டு 09 ஆம் இலக்க பாவனையாளர் அலுவல்கள் அதிகார சபைச் சட்டம்.
1954 ஆம் ஆண்டு 14 ஆம் இலக்கக் கடை, காரியாலய ஊழியர் சட்டம்.

இத்தகைய சட்டதிட்டங்களைச் செயற்படுத்துவதற்காக உருவாக்கப்பட்டுள்ள பதவிகள் மற்றும் நிறுவனங்கள் என்பன பலவாகும்.

உதாரணம் :-

- கம்பனிப் பதிவாளர் நாயகம்
- இலங்கை மத்திய சுற்றாடல் அதிகார சபை
- தொழில் பிணக்குச் சபை
- பொதுச் சுகாதாரப் பரிசோதகர்
- நுகர்வோர் விவகார / பாவனையாளர் அலுவல்கள் அதிகார சபை

இவ்வாறான சட்ட விதிகள் மற்றும் ஒழுங்கு முறைகள் காரணமாக வணிகங்களுக்குத் தாம் எண்ணியவாறு வணிக நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கான இயலுமை வரையறுக்கப்பட்டுள்ளது. அனைத்து வணிகர்களும் அரசினால் விதந்துரைக்கப் பட்டுள்ள, தமது வணிகங்களுக்குரிய சட்ட விதிகள் மற்றும் ஒழுங்கு முறைகள் என்பவற்றைப் பின்பற்றுதல் அவசியமானதாகும்.

## 2.2 தொழினுட்ப மற்றும் பொருளாதாரச் சூழல்கள்

### தொழினுட்பச் சூழல்

புதிய கண்டுபிடிப்புக்கள், ஆக்கங்கள் காரணமாக விரைவாகத் தொழினுட்பச் சூழல் வளர்ச்சியடைந்து வருகின்றது. வணிக நடவடிக்கைகள் போன்று தனி நபர் வாழ்க்கைப் போக்குகளும் கூட தொழினுட்பச் சூழல் காரணிகளால் மாற்றங்களுக்கு உட்படுகின்றன கணினித் தொழினுட்ப வளர்ச்சியினால் வலைப் பின்னல்களினூடாக தேடியறிதலினால் ஏற்பட்ட தொடர்பாடல் தொழினுட்பம், நனோ ( Nano) தொழினுட்ப அறிமுகம், எண்மானத் ( Digital ) தொழினுட்பம் என்பவற்றின் மூலம் உற்பத்தி முறைமை களில் ஏற்பட்ட விருத்தியைப்போன்று போக்குவரத்துத் தொழினுட்ப வளர்ச்சியின் காரணமாகவும் வணிகச் சூழல் அதிசயிக்கத் தக்க மாற்றங்களுக்கு உட்பட்டு வருகின்றன.



படம் 2.1

**தொழினுட்ப மாற்றங்கள் காரணமாக வணிக உலகத்தில் இடம்பெற்ற மாற்றங்களுக்கு உதாரணங்கள் பலவற்றைப் பின்வருமாறு காட்ட முடியும்.**

உதாரணம் :-

- ஆடை உற்பத்தி வரலாற்றில் மிக எளிமையாகக் கையால் இயக்கக்கூடிய இயந்திரங்களைப் பயன்படுத்தி ஆடை உற்பத்திசெய்யப்பட்டது. நிகழ்காலத்தில் நவீன இயந்திராதிகள், கணினித் தொழினுட்பங்களைப் பயன்படுத்தித் தரமான ஆடைகளைக் குறைந்த செலவில் குறுகிய காலத்தில் உற்பத்திசெய்கின்றனர்.

- முன்னைய காலங்களில் பயன்படுத்தப்பட்ட சாதாரண தபாலுக்குப் பதிலாகத் தொலைபேசி, தொலைநகல், மின்னஞ்சல் என்பன தற்போது வணிகத்தால் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

முன்னைய காலப்பகுதிகளின்போது வணிகர்கள் தமது விளம்பரங்களை அல்லது வேறு அறிவித்தல்களைத் தமது தபால் முகவரிகளினூடாக மேற்கொண்டார்கள். நிகழ்காலத்தில் தொலைபேசி இலக்கங்கள், தொலைநகல் இலக்கங்கள், மின் அஞ்சல் முகவரி போன்றவைகள் மூலம் மேற்கொள்ளப்படுவதுடன் மேலதிக விபரங்களுக்காக அவர்களது வலையமைப்பினுள் பிரவேசிக்குமாறும் அறிவுறுத்தல் வழங்கப்படுகின்றது.

கடந்த காலங்களின்போது ஏடுகளில் பேணப்பட்ட கணக்குப் பதிவுகள், நிகழ்காலத்தில் கணினிகள் மற்றும் தகவல் முறைமையைப் பயன்படுத்தி (information systems) மேற்கொள்ளப்படுகின்றன.

முன்னைய காலப்பகுதிகளில் மனித உழைப்பை மாத்திரம் பயன்படுத்தி மேற்கொள்ளப்பட்ட உற்பத்தி நடவடிக்கைகள் நிகழ்காலத்தின்போது கணினி மயப்படுத்தப்பட்ட இயந்திரங்கள் மூலம் மேற்கொள்ளப்படுகின்றன.

தொழினுட்பச் சூழலில் ஏற்படும் விரைவான மாற்றங்கள் காரணமாக வணிக உலகத்தில் உற்பத்தி செய்யப்படும் சில பொருள்கள் சேவைகள் மிக விரைவாகக் காலாவதியாகும் நிலைக்கு உட்படுவதன் காரணமாக தொழினுட்பச் சூழலில் ஏற்படும் மாற்றங்களுக்கமைய வணிகங்கள் தமது பொருள்கள் சேவைகளை நவீன மயப்படுத்துவது மிக இன்றியமையாததொன்றாகும்.

## பொருளாதாரச் சூழல்

வணிகத்தின் மீது தாக்கத்தை ஏற்படுத்தும் பொருளாதாரக் காரணிகளை உள்ளடக்கிய சூழலே பொருளாதாரச் சூழல் என்றழைக்கப்படும். நாட்டினது பொருளாதாரக் கொள்கைகளைத் தீர்மானிப்பதில் பிரதானமாக அரசு முன்னிலை வகிக்கின்றது. இலங்கையில் மத்திய வங்கியின் ஆலோசனையின் பிரகாரமே இப்பொருளாதாரக் கொள்கைகள் தீர்மானிக்கப்படுகின்றன.

**பொருளாதாரக் காரணிகள் சிலவற்றைப் பற்றி அறிந்து கொள்வோம்.**

| | |
|---|---|
| **வட்டி வீதங்கள்** | வங்கியால் வாடிக்கையாளரது வைப்பிற்காக வழங்கப்படுவதும், வங்கிக் கடனுக்காக வாடிக்கையாளர்களிடமிருந்து அறவிடப்படுவதுமான வட்டி வீதங்களைக் குறிக்கும். |
| **பணவீக்கம்** | பொருள்கள், சேவைகளது பொதுவிலை மட்டங்கள் தொடர்ச்சியாக அதிகரித்துச் செல்லல் பணவீக்கமாகும். |
| **வருமானப் பரம்பல்** | நாடொன்றின் தேசிய வருமானம் அந்நாட்டு மக்களிடையே பகிர்ந்தளிக்கப்பட்ட முறையைக் குறிப்பிடுவதாகும். |
| **நிறை தொழில் மட்டம்** | நாடொன்றில் வேலை வாய்ப்பை எதிர்பார்த்திருக்கும் அனைவரும் பொருத்தமான வேலைவாய்ப்பைப் பெறக் கூடியதாக இருப்பின் இந்நிலைமை நிறைதொழில் மட்டம் என அழைக்கப்படும். |
| **சர்வதேசத் தொடர்புகள்** | ஒரு நாடு ஏனைய நாடுகளுடன் பேணிக் கொள்ளும் தொடர்புகள் சர்வதேச தொடர்புகள் என அழைக்கப்படும். வணிக வலயங்கள், வணிக ஒப்பந்தங்கள் போன்றன மூலம் இவ்வாறான தொடர்புகள் ஏற்படும். |
| **அந்நியச் செலாவணிமாற்று வீதம்** | யாதேனும் நாடொன்றின் பண அலகுடன் மற்றோர் நாட்டின் பண அலகைப் பரிமாற்றம் செய்யும் விகிதத்தைக் குறிக்கும். |
| **சேமிப்புக்கள்** | தனி நபர்கள் வருமானத்திலிருந்து நுகர்விற்காகச் செலவிடாது வைத்திருக்கும் பகுதியே சேமிப்பாகும். நாடொன்றில் சேமிப்புகள் அதிகரிக்கும்போது முதலீட்டிற்காகப் பயன்படுத்தக் கூடிய பண அளவு உயரும். |

## 2.3 பூகோளமயச் சூழலும் வணிகச் செயற்பாடும்

உலக நாடுகளுக்கிடையே பொருளாதார, சமூக, கலாசாரம் எனும் வகையில் காணப்படும் நெருக்கமான தொடர்பே பூகோளமயமாதல் என அழைக்கப்படும். இப்பூகோளமயமாதலின் காரணமாக நாட்டின் அரசியல் எல்லைகள் மற்றும் ஏனைய தொடர்புகளுக்கு மட்டுமன்றி உலக நாடுகளுக்கிடையில் வணிக நடவடிக்கைகளைச் சுதந்திரமாக நடாத்திச் செல்வதற்குமான இயலுமை காணப்படுகின்றது. தகவல் தொடர்பாடல் தொழினுட்ப வளர்ச்சியின் காரணமாக இன்று முழு உலக நாடுகளும் அதிசயிக்கத்தக்க வகையில் ஒரே கிராமம் என்ற நிலைக்கு மாறியுள்ளன. அரசியல் எல்லைக்குட்பட்ட நாடுகளினூடாக மனிதர்களுக்கிடையில் காணப்பட்ட இடைவெளி நீக்கப்பட்டுள்ளதுடன் பொருள்கள், சேவைகள், உழைப்பு, மூலதனம் என்பன தடைகளின்றி நாடுகளுக்கிடையில் பரிமாற்றம்செய்துகொள்ளக்கூடிய நிலைமை உருவாகியுள்ளது. எனவே பூகோளமயச் சூழலில் காணப்படும் பல்வேறு காரணிகளிலான மாற்றங்கள் உள்நாட்டு வணிகங்களுக்குச் சாதகமானதைப்போன்று பாதகமான விளைவுகளையும் ஏற்படுத்தக் கூடியவையாகும்.

**உள்நாட்டு வணிகத்தில் பூகோளமயச் சூழலினால் ஏற்படும் சாதகமான விளைவுகள்**

- நவீன தொழினுட்பங்களைப் பெற்றுக்கொள்ள முடிதல்.
- தரமான வெளிநாட்டு மூலப்பொருள்களைப் பெற்றுக்கொள்ள முடிதல்
- வினைத்திறன் கொண்ட இயந்திரங்களைப் பெற்றுக்கொள்ள முடிதல்
- நாட்டினுள் வெளிநாட்டு மூலதனங்கள் உட்பாய்ச்சப்படல்.
- உள்நாட்டுப் பொருள்கள், சேவைகளுக்கான வெளிநாட்டுச் சந்தைகளைப் பெற்றுக்கொள்ள முடிதல்.

**உள்நாட்டு வணிகத்தில் பூகோளமயச் சூழலினால் ஏற்படும் பாதகமான விளைவுகள்**

- அதிக போட்டித் தன்மைகளுக்கு முகங்கொடுக்க வேண்டிய நிலை ஏற்படுதல்.
- பயிற்சி பெற்ற ஊழியர்கள் வெளிநாடுகளுக்குச் செல்லக்கூடிய நிலை ஏற்படுதல்.
- உள்நாட்டு வணிகங்களின் நீடித்த, நிலைப்புத் தன்மையற்ற நிலை உருவாகுதல்.
- உள்நாட்டுக் கலாசாரத்தில் பாதகமான மாற்றங்கள் ஏற்படுதல்.

### செயற்பாடு 01

இலங்கை ரூபாயானது வெளிநாட்டு நாணய வகைகளுடன் பரிமாற்றப்படும் விகிதங்கள் தொடர்பான தகவல்கள் அடங்கிய அட்டவணையொன்றைத் தயாரிக்கவும்.

| வெளிநாட்டு நாணய வகை | பரிமாற்று விகிதம் |
|---|---|
| அமெரிக்க டொலர் | ............................................................ |
| பிரித்தானியப் பவுண்ஸ் | ............................................................ |
| ஜப்பான் யென் | ............................................................ |
| இந்திய ரூபாய் | ............................................................ |
| யூரோ | ............................................................ |

### செயற்பாடு 02

அரசு மூலம் பல்வேறு வணிகங்களுக்காக வழங்கப்படும் ஊக்குவிப்புகள் தொடர்பாக பத்திரிகை மற்றும் செய்தி ஊடகங்களினூடாகத் தகவல்களைச் சேகரித்து அறிவித்தல் பலகையில் காட்சிப்படுத்துவதற்கான சுவர்ப் பத்திரிகை ஒன்றைத் தயாரிக்குக.

## 2.4 வணிகமொன்றின் சூழல்களைக் கற்பதன் முக்கியத்துவம்

மேற்குறிப்பிடப்பட்ட அனைத்து அக மற்றும் புறச் சூழல் காரணிகளும் சாதகமான அல்லது பாதகமான விளைவுகளை வணிகங்களுக்கு ஏற்படுத்தக்கூடியவையாகும். அந்நிலைமைகளை அறிந்து கொள்வதற்காகச் சூழலை இனங் காண்பதில் வணிகர்கள் அக்கறை செலுத்துதல் வேண்டும். வணிகமொன்றின் அகச்சூழலை அறிந்து கொள் வதினூடாக வணிகத்தின் பலங்கள் மற்றும் பலவீனங்களை இனங்காண முடியும். இதனால் அப்பலங்களை வணிகத்தின் வளர்ச்சிக்காகப் பயன்படுத்த முடிவதுடன் பல வீனங்களைத் தவிர்த்துக்கொள்வதற்கான நடவடிக்கைகளையும் மேற்கொள்ள முடியும்.

**வணிகமொன்றின் பலங்கள், பலவீனங்கள் என்பவற்றிற்கான உதாரணங்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.**

**பலம்**

- போதியளவான மூலதனம் காணப்படுதல்
- முகாமையாளர்களின் அனுபவங்கள்.
- பணியாளர்களின் விசேடமான திறன்களும் அர்ப்பணிப்பும்

- புதிய உற்பத்தி முறைகள்
- ஏற்றுக் கொள்ளப்பட்ட குறியீட்டு இலச்சினை ஒன்றிருத்தல்

**பலவீனம்**

- உரிமையாளர்களின் நிதிப்பலம் குறைவாயிருத்தல்
- பயிற்சி பெற்ற பணியாளர்கள் போதாமை
- நவீன தொழினுட்பங்களைப் பயன்படுத்தாமை
- பணியாளர்களின் எதிர்மறை மனப்பாங்கு
- வணிகத்தின் பொருத்தமற்ற புவியியல் இட அமைவு

வணிகமொன்றின் புறச்சூழலை அறிந்துகொள்வதனூடாக அவ்வணிகத்தில் காணப் படும் வாய்ப்புகளையும் அச்சுறுத்தல்களையும் இனங்கண்டுகொள்ள முடியும். வணிகங்களுக்கு அவ்வாய்ப்புக்களை வணிகத்தின் வளர்ச்சிக்காகப் பயன்படுத்திக் கொள்வதற்கும் அச்சுறுத்தல்களுக்கு வெற்றிகரமாக முகங்கொடுப்பதற்கும் முடியும்.

**வணிகமொன்றில் காணப்படும் வாய்ப்புகளுக்கும் அச்சுறுத்தல்களுக்குமான உதார ணங்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.**

**வாய்ப்புகள்**

- நுகர்வோரின் வாழ்க்கைப் பாங்கு மாற்றமடைதல்
- அரசு மூலம் குறைவான வட்டி வீதத்தில் கடன்முறைகளை அறிமுகப்படுத்தல்.
- வணிகத்திற்கு வரிச்சலுகைகளை வழங்குதல்.
- புதிய நகரங்களை உருவாக்கல்
- அதிவேக வீதிகளை நிர்மாணித்தல்

**அச்சுறுத்தல்கள்**

- சர்வதேச வர்த்தகக் கட்டுப்பாடுகளை விதித்தல்
- போட்டியாளர்கள் உருவாதல்
- இயற்கை அனர்த்தங்கள்
- புதிய தொழினுட்ப முறைகளிற்கு இயைபாக்கமடைவதில் காணப்படும் சிரமங்கள்

வெற்றிகரமான வணிகர்கள் தமது வணிகத்தின் அகச் சூழல், புறச் சூழல் தொடர்பாக மிக அவதானமாக இருப்பர். வணிகமொன்று வணிகச் சூழலில் இடம்பெறும் மாற்றங்கள் காரணமாக ஏற்படும் பலங்கள் மற்றும் வாய்ப்புகளை வணிகத்தின் வளர்ச்சிக்காகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். பலவீனங்கள் மற்றும் அச்சுறுத்தல்களுக்கு முகங் கொடுத்து அல்லது அவற்றைத் தடுத்து வணிகத்தின் எதிர்காலத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்குப் பொருத்தமான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

## செயற்பாடு 03

உங்களது பிரதேசத்தில் காணப்படும் வணிகமொன்றைக் கருத்திற் கொண்டு அதன் பலங்கள், பலவீனங்கள், வாய்ப்புகள், அச்சுறுத்தல்கள் என்பவற்றை இனங்கண்டு அட்டவணைப்படுத்துக.

.................................... வணிகம்

| பலங்கள் | பலவீனங்கள் | வாய்ப்புக்கள் | அச்சுறுத்தல்கள் |
|---|---|---|---|
| .................................... | .................................... | .................................... | .................................... |
| .................................... | .................................... | .................................... | .................................... |
| .................................... | .................................... | .................................... | .................................... |
| .................................... | .................................... | .................................... | .................................... |

## செயற்பாடு 04

வணிகங்களில் தாக்கத்தை ஏற்படுத்தும் உள்நாட்டு மற்றும் பூகோளமயமாற்றங்கள் ஐந்தினைத் தருக?

## செயற்பாடு 05

''வணிகச் சூழலை அறிந்து கொள்வதன் முக்கியத்துவம்'' என்ற தலைப்பில் பாடசாலையில் வணிகவியல் சஞ்சிகை ஒன்றிற்கு ஆக்கம் ஒன்றினைத் தயாரிக்குக.

# 3 வணிக அமைப்புகள்




இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்

3.1 வணிக அமைப்பு வகைகள் தொடர்பான அடிப்படைத் தகவல்கள்

- வணிக அமைப்புகளை வகைப்படுத்தல்
- வணிக அமைப்பு வகைகளும் அவற்றின் அடிப்படைப் பண்பு களும்

3.2 பொருத்தமான வணிக அமைப்பு முறையொன்றைத் தெரிவுசெய்தல்

- நோக்கத்தின் அடிப்படையில்
- பருமனின் அடிப்படையில்
- முகாமைத்துவ நடைமுறையின் அடிப்படையில்

3.3 தனியாள் உரிமை வணிகமொன்றைப் பதிவு செய்தல்

- பதிவு செய்வதற்குப் பின்பற்றப்படவேண்டிய படிமுறைகள்
- பதிவு செய்வதற்குத் தேவையான ஆவணங்கள்
- வணிகப் பெயரைப் பதிவு செய்வதன் மூலம் பெற்றுக் கொள்ளக்கூடிய அனுகூலங்கள்

## 3.1 வணிக அமைப்பு வகைகள் தொடர்பான அடிப்படைத் தகவல்கள்

ஒரு நாட்டின் சனத்தொகை அதிகரிப்பிற்கேற்பப் பொருள்கள், சேவைகளின் உற்பத்தியும் விநியோக நடவடிக்கைகளும் விரிவடைந்துள்ளன. இதனால், மனித தேவைகளையும் விருப்பங்களையும் பூர்த்தி செய்வதற்குப் பல்வேறு வணிக அமைப்புகள் தோற்றம் பெற்றுள்ளன. இவ்வாறு தேவை விருப்பங்களைப் பூர்த்திசெய்வதற்கு அவசியமான பொருள்களையும் சேவைகளையும் வழங்குவதற்கு தனி நபரோ அல்லது தனி நபர் குழுவினரோ ஒன்றிணைதல் வணிக அமைப்பொன்றாக அழைக்கப்படும்.

பல்வேறு தரப்பினர் வணிகத்தில் நிதியிடுவர். இவ்வாறு நிதியிட்டு அதன் நட்ட இடர்களை பொறுப்பேற்கும் தனி நபர்கள் வணிகத்தின் ''**உரிமையாளர்கள்**'' என அழைக்கப்படுவர். உரிமையை அடிப்படையாகக் கொண்டு தனியார், அரச துறைகளில் வணிக அமைப்பு வகைகள் பலவற்றை இனங்காண முடியும்.

அவ்வாறே வணிகர்கள் தமது பல்வேறு நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக வணிகங்களை நடாத்திச் செல்கின்றனர். இதற்கமைய சில வணிகங்கள் இலாப நோக்காக கொண்டு செயற்படும் அதே வேளை சில வணிகங்கள் சமூக நல நோக்கத்தினை அடிப்படையாகக் கொண்டு செயற்படுவதைக் காணக்கூடியதாகவுள்ளது.

வணிகரினால் வணிகத்தில் ஈடுபடுத்தக்கூடிய வளங்களின் அளவிற்கேற்ப சிற்றளவு அல்லது பேரளவு வணிகங்களை ஆரம்பிக்க முடியும். இவ்வாறு வணிக அமைப்பு வகைகளுள் தனக்குப் பொருத்தமான வணிகமொன்றைத் தெரிவுசெய்வதற்கு வணிகர்கள் திறமையுள்ளவர்களாக இருத்தல் வேண்டும்.

### வணிக அமைப்புக்களை வகைப்படுத்தல்

வணிக அமைப்புக்கள் பல்வேறு விதமாக உருவாக்கப்பட முடியும். இப்பல்வேறு வகைப்பட்ட வணிக அமைப்புக்களை வேறுபட்ட நியதிகளின் அடிப்படையில் பின்வருமாறு வகைப்படுத்த முடியும்.

- உரிமை அடிப்படையில்
- நோக்க அடிப்படையில்
- பருமன் / அளவு அடிப்படையில்

## உரிமையை அடிப்படையாகக் கொண்டு வணிக அமைப்புக்களை வகைப்படுத்தல்

வணிகத்துக்குத் தேவையான நிதியினை ஈடுபடுத்தி அதன் இடர்களைப் பொறுப் பேற்கும் நபர்கள் ''**உரிமையாளர்கள்**'' என அழைக்கப்படுவர். வணிகத்தில் பெற்றுக் கொள்ளப்படும் இலாபத்தையும் அதேவேளை நட்டத்தையும் ஏற்றுக் கொள்பவர் உரிமையாளரேயாவர். எனவே உடைமை அடிப்படையில் வணிக அமைப்புகளைப் பிரதானமாக இரண்டாக வகைப்படுத்தலாம்.

- தனியார் துறை வணிகம்
- பொதுத்துறை / அரசதுறை வணிகம்

உடைமை அடிப்படையில் வணிக அமைப்பை வகைப்படுத்தியுள்ள முறை கீழே காட்டப்பட்டுள்ளது.




உரிமையை அடிப்படையாகக் கொண்டு வணிக அமைப்புகளை வகைப்படுத்தல்

## தனியார் துறை வணிக அமைப்புகள்

வணிகத்தின் உரிமையானது தனி ஒரு நபருக்கோ அல்லது ஒரு தொகுதி நபர்களிற்கோ உரித்துடைய வணிகம் **"தனியார் துறை வணிகம்"** என அழைக்கப்படும். தனியார் துறையினை தனியாள் உரிமை வணிகம் (தனிநபர் வணிகம்), பங்குடைமை வணிகம், கூட்டிணைக்கப்பட்ட கம்பனி, கூட்டுறவுச் சங்க வணிகம், சங்க வகைகள் என்றவாறு மேலும் வகைப்படுத்த முடியும்.

## பொதுத் துறை வணிக அமைப்புகள்

அரசினால் மூலதனமிட்டு அரசுக்கு உடைமையாகவுள்ள வணிக அமைப்பு **"பொதுத் துறை வணிக"** அமைப்பாகும். இதன் கீழ் அரச திணைக்களங்கள், அரச கூட்டுத்தாபனங்கள், அரச கம்பனிகள், மாகாண சபை மற்றும் உள்ளூராட்சி மன்றத்தின் கீழ் இயங்கும் வணிகங்கள் என்பன பொதுத் துறையில் காணப்படுகின்றன.

## நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு வணிக அமைப்புகளை வகைப்படுத்தல்

பல்வேறு நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்வதற்காக பல்வேறு அமைப்புகள் இயங்கி வருகின்றன. வணிகர்களும் இவ்வாறு குறிப்பிட்ட நோக்கங்களை அடைவதற்காக வணிகத்தை நடாத்துகின்றார்கள். வணிகங்களை நோக்கத்தின் அடிப்படையில் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

- இலாப நோக்குள்ள வணிக அமைப்புகள்
- இலாப நோக்கற்ற வணிக அமைப்புகள்

கீழ் காணப்படும் பாய்ச்சற் கோட்டுப் படம் மூலம் மேலும் விரிவாக நோக்கலாம்.




நோக்க அடிப்படையில் வணிக அமைப்புகளை வகைப்படுத்தல்

## இலாப நோக்குள்ள வணிக அமைப்புகள்

இலாபம் பெறுவதை பிரதான நோக்கமாகக் கொண்ட வணிக அமைப்பு **''இலாப நோக்குள்ள வணிக அமைப்புகள்''** என அழைக்கப்படும். இவ்வகையான வணிக அமைப்பு வகைகள் தனியார் துறை மற்றும் அரச துறை அமைப்புக்களில் செயற்படுத்தப் படுகின்றன.

## இலாப நோக்கற்ற வணிக அமைப்புகள்

இவ்வகையான வணிக அமைப்புகளின் பிரதானமான நோக்கம் அங்கத்தவர்களினதும் சமூகத்தினதும் நலன்களை அடிப்படையாகக் கொண்டு இயங்குவதாகும். இலாப நோக்கற்ற வணிகங்கள் தனியார் துறை அமைப்பைப் போன்று அரச துறை அமைப்பிலும் செயற்படுத்தப்படுகின்றன.

## பருமன் / அளவு அடிப்படையில் வணிக அமைப்புக்களை வகைப்படுத்தல்

வணிக அமைப்புகளின் பருமனானது பல்வேறு நியதிகளின் அடிப்படையில் தீர்மானிக்கப்படுகின்றது. அவ்வாறு இனங்காணப்பட்ட அளவு ரீதியான நியதிகள் கீழே காட்டப்பட்டுள்ளன.

- வணிகத்தின் மூலதனத்தின் அளவு
- ஊழியர்களின் எண்ணிக்கை
- பயன்படுத்தும் வலுவின் (சக்தியின்) அளவு
- வணிகத்திற்காகக் காணப்படும் சந்தையின் அளவு (சந்தைப் பங்கு)

வணிக அமைப்புகளை பருமன் அடிப்படையில் பிரதானமாக இரண்டாக வகுத்து நோக்கலாம்.

- சிற்றளவு, நடுத்தர அளவிலான வணிகங்கள்
- பேரளவு வணிகங்கள் / பாரிய அளவிலான வணிகங்கள்




பருமன் / அளவு அடிப்படையில் வணிக அமைப்பை வகைப்படுத்தல்

### சிற்றளவும் நடுத்தர அளவிலானதுமான வணிக அமைப்புக்கள்

பல்வேறு நிறுவனங்கள் சிறிய, நடுத்தர அளவு வணிக வகைப்படுத்தலுக்காக பல்வேறு நியதிகளை முன் வைத்துள்ளன. அதன் அடிப்படையில் பாரிய அளவு வணிகத்துடன் ஒப்பீட்டளவில் நோக்கும்போது சிறிய அளவு முதலீட்டைக் கொண்டதும் குறைந்தளவு ஊழியரும் சந்தைப் பங்கு சிறியதுமான வணிகங்களை, **''சிறிய நடுத்தர அளவிலான வணிகங்கள்''** என அழைக்க முடியும்.



படம் 3.1

உதாரணம் :

சனத்தொகை புள்ளிவிபரத் திணைக்களமானது ஊழியர் தொகை 25 இற்கும் குறைந்த வணிகத்தை சிறிய, நடுத்தர வணிகங்கள் என அறிமுகப்படுத்தியுள்ளது.

### பாரியளவிலான வணிக அமைப்புக்கள்

அதிக மூலதனத்தை ஈடுபடுத்தியுள்ள, அதிக ஊழியர் பணிபுரிகின்ற, பரந்த சந்தை வாய்ப்பைப் பெற்றுள்ள, குறித்த கைத்தொழிலில் ஆதிக்கம் செலுத்தக் கூடிய வணிகங்களை **பாரியளவிலான வணிகங்கள்** என அழைக்க முடியும்.

உதாரணம் :

அதிக ஊழியர்களைக் கொண்ட கைத்தொழிற்சாலை



படம் 3.2

தொடர்ந்து கீழே காட்டப்படும் வணிக அமைப்பு வகைகள் பற்றி விரிவாக நோக்குவோம்.

| | சொத்துக்கள் | | = | உரிமை | + | பொறுப்பு |
|---|---|---|---|---|---|---|
| | தளபாடம் + | காசு | = | மூலதனம் | + | பொறுப்பு |
| | ரூ | ரூ | | ரூ | | ரூ |
| ஆரம்ப மீதி | ____ + | 800 000 | = | 800 000 | + | ____ |
| கொடுக்கல் வாங்கலால் ஏற்பட்ட மாற்றம் | 100 000 | (100 000) | = | ____ | + | ____ |
| **இறுதி மீதி** | 100 000 + | 700 000 | = | 800 000 | + | ____ |

**கொடுக்கல் வாங்கல்** 03 :- ரூ. 300 000இற்கான வங்கிக் கடனொன்று பெறப்பட்டது. இக்கொடுக்கல் வாங்கலின் காரணமாகக் கணக்கீட்டுச் சமன்பாடானது பின்வருமாறு மாற்றமடையும்.

| | சொத்துக்கள் | | = | உரிமை | + | பொறுப்பு |
|---|---|---|---|---|---|---|
| | தளபாடம் + | காசு | = | மூலதனம் | + | வங்கிக்கடன் |
| | ரூ | ரூ | | ரூ | | ரூ |
| ஆரம்ப மீதி | 100 000 + | 700 000 | = | 800 000 | + | ____ |
| கொடுக்கல் வாங்கலால் ஏற்பட்ட மாற்றம் | | 300 000 | = | ____ | + | 300 000 |
| இறுதி மீதி | 100 000 + | 1 000 000 | = | 800 000 | + | 300 000 |

**உதாரணம் :-**

கிருபாவினால் ஆரம்பிக்கபட்ட கணினி இயந்திரப் பழுதுபார்க்கும் வணிகத்தின் முதலாவது மாதத்திற்குரிய பின்வரும் கொடுக்கல் வாங்கல்கள் உங்களுக்குத் தரப்படுகின்றன.

1. உரிமையாளரால் மூலதனமாக இடப்பட்டது ரூ. 500 000
2. வங்கிக் கடன் ரூ. 200 000 பெறப்பட்டது.
3. நிலையான வைப்புக் கணக்கொன்றில் ரூ. 100 000 வைப்பிலிடப்பட்டது.
4. கணினி பழுது பார்த்தல் மூலம் பெற்ற வருமானம் ரூ. 60 000
5. வணிகத்தின் மாதாந்த வாடகை ரூ. 10 000 செலுத்தப்பட்டது.
6. தனது தனிப்பட்ட தேவை கருதி ரூ. 20 000 கிருபாவினால் வணிகத்திலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டது.

7. உபகரணம் ஒன்று ரூ. 100 000 செலுத்தி கொள்வனவு செய்யப்பட்டது.

8. மாதாந்தத் தொலைபேசிக் கட்டணம் ரூ. 5 000 செலுத்தப்பட்டது.

9. மேலதிக மூலதனமாக ரூ. 50 000 ஈடுபடுத்தப்பட்டது.

10. வங்கிக் கடனுக்காக மீளச் செலுத்திய தவணைக்கட்டணம் ரூ. 20 000

மேற்காட்டிய கொடுக்கல் வாங்கல்கள் கணக்கீட்டுச் சமன்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தும் முறையினைப் பின்வருமாறு காட்ட முடியும்.

| இலக்கம் | சொத்துக்கள் (ரூ) | | = | உரிமை + பொறுப்புக்கள் (ரூ) | |
|---|---|---|---|---|---|
| | **உபகரணம்** | **நிலையான வைப்பு** | **காசு** | **உரிமை** | **வங்கி கடன்** |
| 1. | | | + 500 000 | + 500 000 | |
| 2. | | | + 200 000 | | + 200 000 |
| 3. | | + 100 000 | - 100 000 | | |
| 4. | | | + 60 000 | + 60 000 | |
| 5. | | | - 10 000 | - 10 000 | |
| 6. | | | - 20 000 | - 20 000 | |
| 7. | + 100 000 | | - 100 000 | | |
| 8. | | | - 5 000 | - 5 000 | |
| 9. | | | + 50 000 | + 50 000 | |
| 10. | | | - 20 000 | | - 20 000 |
| **இறுதி மீதி** | 100 000 | + 100 000 | + 555 000 | = 575 000 | + 180 000 |

**உதாரணம் :-**

சாமுவேல் வணிகத்தின் 20XX.08.01 திகதியன்று பின்வரும் மீதிகளைக் காண முடிந்தது.

**சொத்துக்கள் :-**

| | ரூ |
|---|---|
| தளபாட உபகரணம் | 300 000 |
| சரக்கிருப்பு | 200 000 |
| கடன்பட்டோர் | 100 000 |
| காசு | 200 000 |

**பொறுப்பு :-**

| | |
|---|---|
| வங்கி கடன் | 300 000 |
| கடன் கொடுத்தோர் | 100 000 |

20XX ஆகஸ்ட் மாத முதலாம் வாரத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு.

1. விற்பனைக்காக ரூ. 100 000 பெறுமதியான பண்டங்கள் கொள்வனவு செய்யப்பட்டன.
2. ரூ. 100 000க்கு கொள்வனவு செய்யப்பட்ட பொருள் தொகுதியொன்று ரூ. 125 000 பெறுமதிக்கு உடன் காசுக்கு விற்பனை செய்யப்பட்டது.
3. வங்கிக் கடனில் ரூ. 50 000 மீளச்செலுத்தப்பட்டது.
4. சம்பளத்துக்காக ரூ. 10 000 கொடுக்கப்பட்டது.
5. வணிகத்தில் மீள் விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்த பொருள்களில் ரூ. 20 000 பெறுமதியான கிரயம் கொண்ட பொருள்களை சாமுவேல் தனது தனிப்பட்ட தேவைக்காகப் பற்றியுள்ளார்.
6. ரூ. 50 000 பெறுமதியான தளபாட உபகரணங்கள் காரியாலயப் பயன் பாட்டிற்காகக் கொள்வனவு செய்யப்பட்டன.
7. மீள் விற்பனை நோக்கம் கருதி ரூ. 200 000 பெறுமதியான பொருள்கள் கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டன.
8. ரூ. 60 000 இற்கு கொள்வனவு செய்யப்பட்ட பொருள் தொகுதியொன்று ரூ. 100 000 இற்கு கடனுக்கு விற்பனை செய்யப்பட்டது.
9. கடன்பட்டோரிடமிருந்து ரூ. 80 000 பெறப்பட்டது.
10. கடன்கொடுத்தோருக்கு ரூ. 50 000 செலுத்தப்பட்டது.

20XX.08.01 ஆம் திகதியன்று உரிமையாளரின் உரிமைப் பெறுமதியினைக் கணிப்பிடும் முறையைக் காட்டவும்.

20XX.08.01 இல் உள்ள உரிமை

உரிமை = மொத்த சொத்துக்கள் - பொறுப்புக்கள்

= (200 000 + 100 000 + 200 000 + 300 000) - (300 000 + 100 000)

= ரூ. 800 000 - ரூ. 400 000

= ரூ. 400 000

2. கொடுக்கல் வாங்கல்கள் கணக்கீட்டுச் சமன்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தும் முறை

| | சொத்துக்கள் ரூ | | | = | உரிமை + பொறுப்புக்கள் ரூ | | |
|---|---|---|---|---|---|---|---|
| | தளபாடம் | +சரக்கிருப்பு | + கடன் பட்டோர் | +காசு | உரிமை | +வங்கிக் கடன் | + கடன் கொடுத் தோர் |
| ஆரம்ப மீதி | 300 000 | +200 000 | +100 000 | +200 000 | +400 000 | +300 000 | +100 000 |
| 1. | | +100 000 | | -100 000 | | | |
| 2. | | -100 000 | | +125 000 | +25 000 | | |
| 3. | | | | -50 000 | | -50 000 | |
| 4. | | | | -10 000 | -10 000 | | |
| 5. | | -20 000 | | | -20 000 | | |
| 6. | +50 000 | | | -50 000 | | | |
| 7. | | +200 000 | | | | | +200 000 |
| 8. | | -60 000 | +100 000 | | +40 000 | | |
| 9. | | | -80 000 | +80 000 | | | |
| 10. | | | | -50 000 | | | -50 000 |
| இறுதி மீதி | 350 000 | +320 000 | +120 000 | +145 000 = | 435 000 | +250 000 | +250 000 |

**உதாரணம் :-**

ரூபன் வணிகத்தின் 20XX ஜீலை 01 ஆம் திகதி பின்வரும் மீதிகளைக் காணக்கூடியதாக இருந்தது.

| | ரூ. |
|---|---|
| மோட்டார் வாகனம் | 500 000 |
| சரக்கிருப்பு | 200 000 |
| காசு | 100 000 |
| வங்கிக் கடன் | 200 000 |
| கடன் கொடுத்தோர் | 100 000 |
| மூலதனம் | 500 000 |

**ஜூலை மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு காணப்பட்டன.**

1. உரிமையாளரினால் மேலதிக மூலதனமாக ரூ. 200 000 ஈடுபடுத்தப்பட்டது.

2. வட்டி ரூ. 2 000 உள்ளடங்கலாக வங்கித் தவணைக் கட்டணமாக ரூ. 20 000 செலுத்தப்பட்டது.

3. ரூ. 100 000 பெறுமதியான சரக்குகள் மீள் விற்பனை நோக்கம் கருதி கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டன.

4. கடன் கொடுத்தோருக்கு ரூ. 50 000 செலுத்தப்பட்டது.

5. ரூ. 200 000 பெறுமதியான உரிமையாளருக்குச் சொந்தமான மோட்டார் சைக்கிளை வணிகத்தின் தேவைக்கென வழங்கப்பட்டுள்ளது.

6. ரூ. 100 000 பெறுமதியான சரக்குகள் ரூ. 150 000த்திற்கு கடனுக்கு விற்பனை செய்யப்பட்டன.

7. காப்புறுதிக் கட்டணமாக ரூ. 10 000 செலுத்தப்பட்டது.

8. கடன்பட்டோரிடமிருந்து ரூ. 70 000 பெறப்பட்டது.

9. வணிகத்திலிருந்து உரிமையாளரின் வீட்டு மின்சாரக் கட்டணமாக ரூ. 5 000 செலுத்தப்பட்டது.

10. விற்பனைத் தரகு வருமானமாக ரூ. 10 000 கிடைக்கப் பெற்றது.

மேற்காட்டிய கொடுக்கல் வாங்கல்களினைக் கணக்கீட்டுச் சமன்பாட்டின் கீழ் காட்டுதல்.

| | சொத்துக்கள். ரூ. | | | | = உரிமை + பொறுப்புக்கள் ரூ. | | |
|---|---|---|---|---|---|---|---|
| | மோட்டார் | +சரக் கிருப்பு | + கடன் பட்டோர் | + காசு | உரிமை | + வங்கி கடன் | + கடன் கொடுத்தோர் |
| **ஆரம்ப மீதி** | 500 000 | +200 000 | | +100 000 | +500 000 | +200 000 | +100 000 |
| 1. | | | | +200 000 | +200 000 | | |
| 2. | | | | -20 000 | -2 000 | -18 000 | |
| 3. | | +100 000 | | | | | +100 000 |
| 4. | | | | -50 000 | | | -50 000 |
| 5. | +200 000 | | | | +200 000 | | |
| 6. | | -100 000 | +150 000 | | +50 000 | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 7. | | | | -10 000 | -10 000 | | |
| 8. | | | -70 000 | +70 000 | | | |
| 9. | | | | -5 000 | -5 000 | | |
| 10. | | | | +10 000 | +10 000 | | |
| இறுதி மீதி | 700 000 | +200 000 | +80 000 | +295 000 | = 943 000 | +182 000 | +150 000 |

வணிகமொன்றில் நிகழ்ந்த கொடுக்கல் வாங்கல்களது விளைவுகள் கணக்கீட்டுச் சமன்பாட்டினூடாகச் சமர்ப்பிக்கப்பட்டுள்ளபோது, அத்தகைய ஒவ்வொரு சந்தர்ப்பத்தின்போதும் இடம்பெற்றுள்ள கொடுக்கல் வாங்கல்கள் எவை என்பதை இனங்காணுதலும் முக்கியமமானதாகும்.

பின்வரும் உதாரணம் மூலம் இதனை அறிந்து கொள்வோம்.

உதாரணம் :-

*அழகர் வணிகத்தில் ஜனவரி மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்களினால் கணக்கீட்டுச் சமன்பாட்டில் ஏற்பட்ட தாக்கங்கள் பின்வருமாறு சுட்டிக்காட்டடப்பட்டுள்ளன.*

| | சொத்துக்கள் ரூ. | | | | = உரிமை + பொறுப்புக்கள் ரூ. | | |
|---|---|---|---|---|---|---|---|
| | காணி கட்டடம் | + சரக் கிருப்பு | + கடன் பட்டோர் | + காசு | உரிமை | + வங்கி கடன் | + கடன் கொடுத்தோர் |
| ஜனவரி 01 ஆ/மீ | 1000 000 | +300 000 | +200 000 | +300 000 | 1200 000 | +500 000 | +100 000 |
| 01.03 | | +200 000 | | -100 000 | | | +100 000 |
| 01.07 | | | | -20 000 | -20 000 | | |
| 01.10 | | | | -60 000 | -10 000 | -50 000 | |
| 01.14 | | -200 000 | +300 000 | | +100 000 | | |
| 01.18 | | | | +300 000 | +300 000 | | |
| 01.21 | | | | -100 000 | | | -100 000 |
| 01.25 | | | -400 000 | +400 000 | | | |

இவ்வணிகத்தின் உரிமையாளரால் இம்மாதத்தில் எவ்வித பற்றும் மேற்கொள்ளப்படவில்லை.

ஒவ்வொரு தினத்திலும் இடம்பெற்றதாகக் கருதக்கூடிய கொடுக்கல் வாங்கல்களை பெறுமானங்களுடன் பின்வருமாறு முன்வைக்க முடியும்.

ஜன. 03 ரூ. 100 000 பெறுமதியான பொருள்கள் உடன் காசுக்கும் ரூ. 100 000 பெறுமதியான பொருள்கள் கடன் அடிப்படையிலும் கொள்வனவு செய்யப்பட்டன.

ஜன. 07 வணிகத்தின் செயற்பாட்டுச் செலவொன்றிற்காக ரூ. 20 000 காசாகச் செலுத்தப்பட்டது.

ஜன. 10 வட்டி ரூ. 10 000 உட்பட வங்கித் தவணைக்கட்டணமாக ரூ. 60 000 செலுத்தப்பட்டது.

ஜன. 14 ரூ. 200 000 கிரயம் கொண்ட பொருள்கள் ரூ. 300 000 இற்குக் கடனுக்கு விற்பனை செய்யப்பட்டன.

ஜன. 18 மேலதிக மூலதனமாக ரூ. 300 000 இடப்பட்டது.

ஜன. 21 கடன் கொடுத்தோருக்கு ரூ. 100 000 கொடுத்துத் தீர்க்கப்பட்டது.

ஜன. 25 கடன்பட்டோரிடமிருந்து ரூ. 400 000 பெறப்பட்டது.

## 5.4 உரிமை மாற்றமடையும் சந்தர்ப்பங்கள்

மேற்காட்டிய விடயங்களைப் பற்றிய விளக்கத்தினைப் பெற்றதன் பின்னர் உங்களுக்கு வணிக உரிமையாளரின் உரிமையில் அதிகரிப்பையும் குறைவையும் ஏற்படுத்திய கொடுக்கல் வாங்கல்களை இனங்காணக் கூடியதாக இருந்திருக்கும். வணிகமொன்றில் உரிமை மாற்றமடைவதில் பின்வரும் கொடுக்கல் வாங்கல்கள் செல்வாக்குச் செலுத்தக் கூடியவையாகும்.

- **மேலதிக மூலதனமிடல்**
- **வருமானங்கள்**
- **பற்றுதல்கள்**
- **செலவினங்கள்**

வணிகத்தை நடாத்திச் செல்லும்போது அதனது தேவைக்கமைய காசு அல்லது ஏனைய சொத்துக்களை உரிமையாளர்களால் மேலதிக மூலதனமாக ஈடுபடுத்த முடியும். இந்நடவடிக்கையானது உரிமையில் அதிகரிப்பை ஏற்படுத்தும்.

வணிகத்தின் உரிமையாளர் தனது சொந்தப்பயன்பாடு கருதி வணிகத்திலிருந்து காசு அல்லது ஏனைய சொத்துக்களை எடுத்துக் கொள்ள முடியும். இவற்றை ''பற்றுக்கள்'' என இனங்காட்டுவதுடன், இவற்றினால் உரிமையாளரின் உரிமையில் குறைவு ஏற்படும்.

வணிகத்தினால் பெறப்படும் வருமானங்களினால் உரிமை அதிகரிக்கும். அதே வேளை செலவினங்களினால் உரிமையில் குறைவு ஏற்படும்.

உதாரணம் :-

அகில் வணிகத்தில் 20xx ஆம் வருடத்திற்கான தகவல்களுள் சில பின்வருமாறு :

| | ரூ. |
|---|---|
| மூலதனம் (20xx.01.01 இல்) | 358 500 |
| நிதியாண்டுச் செலவுகள் | 128 300 |
| நிதியாண்டு வருமானங்கள் | 254 620 |

ஜுன் 30 ஆம் திகதியில் உரிமையாளரினால் இடப்பட்ட மூலதனம் ரூ. 75 000 20xx-டிசெம்பர் 31 ஆம் திகதியில் உரிமையாளரின் உரிமையைப் பின்வருமாறு கணிப்பிட முடியும்.

| | | ரூ. |
|---|---|---|
| மூலதனம் | 20xx.01.01 | 358 500 |
| கூட்டு : வருமானங்கள் | | 254 620 |
| மேலதிக மூலதனம் | | 75 000 |
| | | 688 120 |
| கழி : செலவினங்கள் | | (128 300) |
| 20xx 12 31ஆம் திகதியன்று உரிமை | | 559 820 |



**செயற்பாடு 01**

அனந்தா வணிகத்தின் கீழ்வரும் கணக்கீட்டுச் சமன்பாடு 20xx ஏப்ரல் மாதத்தில் நிகழ்ந்த கொடுக்கல் வாங்கல்களின் தாக்கங்களைக் காட்டுகின்றது.

| | சொத்துக்கள் ரூ. | | | = | உரிமை ரூ. | + பொறுப்புக்கள் |
|---|---|---|---|---|---|---|
| | மோட்டார் வாகனம் | + சரக் கிருப்பு | + கடன் பட்டோர் | + காசு | உரிமை | + கடன் கொடுத்தோர் |
| 4.1 **மீதி** | 500 000 | +200 000 | | +200 000 | +700 000 | +200 000 |
| 04.03 | | | | +300 000 | +300 000 | |
| 04.05 | | +100 000 | | | | +100 000 |
| 04.08 | | | | -50 000 | | -50 000 |
| 04.10 | | | | -10 000 | -10 000 | |
| 04.11 | | -60 000 | +100 000 | | +40 000 | |
| 04.17 | +200 000 | | | | +200 000 | |
| 04.19 | | -20 000 | | | -20 000 | |
| 04.23 | | | -20 000 | +20 000 | | |
| 04.28 | | -5 000 | | | -5 000 | |
| 04.30 | | | | | +50 000 | -50 000 |
| **இறுதி மீதி** | 700 000 | 215 000 | 80 000 | 460 000 | 1255 000 | 200 000 |

**குறிப்பு :-**

இம் மாதத்தில் உரிமையாளரினால் எவ்விதப் பற்றும் மேற்கொள்ளப்படவில்லை.

மேற்குறிப்பிட்ட கணக்கீட்டுச் சமன்பாட்டுத் தாக்க விளைவுகளிற்குரிய கொடுக்கல் வாங்கல்களை எழுதுக.

## செயற்பாடு 02

நிசாந்தன் வணிகத்தின் ஜனவரி மாதத்திற்குரிய கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு.

ஜனவரி 01. மூலதனமாக ரூ. 300 000 ஈடுபடுத்தப்பட்டது.

04. ரூ. 50 000 கிரயம் கொண்ட பொருள்கள் கொள்வனவு செய்யப்பட்டன.

09. மாதாந்த வணிக நிலைய வாடகையாக ரூ.10 000 செலுத்தப்பட்டது.

13. ரூ. 40 000 பெறுமதியான பொருள்கள் ரூ. 60 000 இற்கு விற்பனை செய்தல்.

19. வங்கிக் கடனாக ரூ. 300 000 பெறப்பட்டது.

21. வணிகத்திலிருந்து நிசாந்தனின் வீட்டுத் தொலைபேசிக் கட்டணமான ரூ. 10 000 செலுத்தப்பட்டது.

28. கடன்பட்டோரிடமிருந்து ரூ. 30 000 பெறப்பட்டது.

30. வங்கிக் கடனுக்கான மாதாந்த வட்டி ரூ. 5000 செலுத்தப்பட்டது.

31. வணிகத்தின் மின்சாரக் கட்டணம் ரூ. 5000 செலுத்தப்பட்டது.

மேற்காட்டிய ஒவ்வொரு கொடுக்கல் வாங்கல்களின் மூலமும் கணக்கீட்டுச் சமன்பாட்டில் ஏற்படும் தாக்கங்களைப் பெறுமானங்களுடன் காட்டுக.

## செயற்பாடு 03

கபிலன் வணிகத்தின் 20xx ஆண்டுக்குரிய தகவல்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.

| | ரூ. |
|---|---|
| (20xx.01.01 இல்) மூலதனம் | 415 000 |
| நிதியாண்டு வருமானங்கள் | 210 300 |
| நிதியாண்டு செலவினங்கள் | 122 000 |
| வருடத்தில் இடப்பட்ட மேலதிக மூலதனம் | 50 000 |

20xx டிசெம்பர் 31 ஆம் திகதியில் உரிமையாளரின் உரிமையைக் கணிப்பிடுக.

## செயற்பாடு 04

வணிகமொன்றில் நிகழ்ந்த கொடுக்கல் வாங்கல்களினால் கணக்கீட்டுச் சமன்பாட்டில் ஏற்பட்ட தாக்கங்கள் கீழ்க்காட்டப்பட்டுள்ளன.

| திகதி | சொத்துக்கள் | = | உரிமை | + | பொறுப்புக்கள் |
|---|---|---|---|---|---|
| ஜுன் 1 | அதிகரித்தல்<br>குறைதல் | | | | |
| ஜுன் 2 | குறைதல் | = | குறைதல் | | |
| ஜுன் 3 | அதிகரித்தல் | = | | | அதிகரித்தல் |
| ஜுன் 4 | அதிகரித்தல் | = | அதிகரித்தல் | | |
| ஜுன் 5 | குறைதல் | = | | | குறைதல் |

மேற்காட்டிய அட்டவணைக்கேற்ப ஒவ்வொரு தினத்திலும் நிகழ்ந்த இரு சாத்தியமான கொடுக்கல் வாங்கல்களை எழுதுக.

# 6 கொடுக்கல் வாங்கல்களின் இரட்டை விளைவு




இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.

6.1 கொடுக்கல் வாங்கல்களின் இரட்டை விளைவுகளுக்கான அறிமுகம்

6.2 இரட்டைப்பதிவு முறைமை

6.3 கணக்கு

6.4 கணக்கு வகைகள்

6.5 கொடுக்கல் வாங்கல்களைக் கணக்குகளில் பதிவு செய்தல்

## 6.1 கொடுக்கல் வாங்கல்களின் இரட்டை விளைவுகளுக்கான அறிமுகம்

வணிகமொன்றில் நாளாந்தம் பல்வேறு கொடுக்கல் வாங்கல்கள் நிகழ்கின்றன. இவற்றின் பெறுபேறாக சொத்துக்கள், பொறுப்புக்கள், உரிமை, வருமானம், செலவினங்கள் என்பவற்றின் பெறுமானங்கள் மாற்றமடைகின்றன. இத்தகைய மாற்றங்களே கணக்கீட்டில் கொடுக்கல் வாங்கலின் இரட்டை விளைவாக இனங்காணப்படுகின்றன. முன்னர் விளக்கியவாறு ஒவ்வொரு கொடுக்கல் வாங்கலின் காரணமாகக் கணக்கீட்டுச் சமன்பாட்டின் இரு உருப்படிகளில் மாற்றம் ஏற்படுகின்றன. இவை கொடுக்கல் வாங்கல்களின் இரட்டை விளைவு எனப்படும்.

உதாரணம் :-

| | | |
|---|---|---|
| மூலதனமிடுவதன் மூலம் | காசு அதிகரிக்கும் | மூலதனம் அதிகரிக்கும் |
| தளபாடக் கொள்வனவு மூலம் | தளபாடம் அதிகரிக்கும் | காசு குறைவடையும் |
| சம்பளம் கொடுப்பதன் மூலம் | காசு குறையும் | உரிமை குறையும் |

இவ்வாறு அனைத்துக் கொடுக்கல் வாங்கல்களும் சமன்பாட்டில் இரட்டை விளைவை ஏற்படுத்துவதனால் அனைத்துக் கொடுக்கல் வாங்கல்களிலுமான பெறுமானங்களை இரு இடங்களிலும் எழுதுதல் வேண்டும். அதாவது, எல்லாக் கொடுக்கல் வாங்கல்களுக்கும் இரு பதிவுகள் மேற்கொள்ளப்படுதல் வேண்டும். வணிகமொன்று விரிவடைகின்றபோது அதிகமான கொடுக்கல் வாங்கல்கள் இடம்பெறுவதனால் அவற்றைக் கணக்கீட்டுச் சமன்பாட்டு வடிவில் பேணுவது பிரயோக ரீதியில் முடியாத காரியமாகும். அவ்வாறு பதிவு செய்யப்பட்டாலும் வணிகம் தொடர்பான தெளிவான விளக்கங்களைப் பெறுவது சிரமமானதாகும். எனவே, அக்கொடுக்கல் வாங்கல்களின் இரட்டை விளைவினை கணக்கீட்டில் இரட்டைப் பதிவு முறைமைக்கமையப் பதிவு செய்யப்படும்.

## 6.2 இரட்டைப் பதிவு முறைமை

அனைத்துக் கொடுக்கல் வாங்கல்களினாலும் கணக்கீட்டுச் சமன்பாட்டில் இரட்டை விளைவு ஏற்படும் எனவும், அவ்விளைவுகள் கணக்குகளிலே பதிவு செய்யப்படும் என்பதனையும் அறிந்துள்ளோம். அவ்வாறு கொடுக்கல் வாங்கலொன்றின் இரட்டை விளைவினைப் பதிவு செய்யும்போது ஒரே பெறுமானத்தை வெவ்வேறான இரு கணக்குகளில் பதிவு செய்ய வேண்டியேற்படும். எல்லாக் கணக்குகளிலும் வரவு, செலவு என இரு பக்கங்கள் காணப்படும். யாதேனும் கொடுக்கல் வாங்கலொன்றின் பெறுமானத்தை ஒரு கணக்கின் வரவுப் பக்கத்திலும் தொடர்புடைய மற்றைய கணக்கின் செலவுப் பக்கத்திலும் பதிவுசெய்ய வேண்டும். இவ்வாறு கொடுக்கல் வாங்கலொன்றின் இரட்டை விளைவினைக் காட்டுவதற்காக ஒரே பெறுமானம் சார்பாக வரவு, செலவு எனும் பதிவுகள் இடம்பெறும் வகையில் கணக்கு வைக்கும் முறைமையினை ''இரட்டைப் பதிவு முறைமை'' என அழைப்பர்.

## 6.3 கணக்கு

குறித்த காலப்பகுதியினுள் சொத்து, உரிமை, பொறுப்பு, வருமானம், செலவு என்பவைகளில் இடம்பெறும் மாற்றங்களைப் (அதிகரித்தல் அல்லது குறைதல்) பதிவதற்குப் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட மாதிரி அமைப்பொன்றே கணக்காகும். கணக்கொன்றைப் பின்வரும் முறையில் தயாரிக்க முடியும்.

வரவு ........................ கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப. | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |

(1), (5) என்பன கொடுக்கல்வாங்கல்கள் இடம்பெற்ற திகதியைக் குறிக்கும்.

(2), (6) இரட்டை பதிவின் மற்றைய பதிவினைப் பதிந்த கணக்கின் பெயர் எழுதப்படும்.

பொதுவாக, கணக்கொன்றின் வரவுப் பக்க விபர நிரலில் குறித்த பெறுமானம் செலவு வைக்கப்படும் கணக்கின் பெயரே எழுதப்படும்.

கணக்கொன்றின் செலவுப்பக்க நிரலில் குறித்த பெறுமானம் வரவு வைக்கப்படும் கணக்கின் பெயரே எழுதப்படும்.

(3), (7) கொடுக்கல் வாங்கலின் மற்றைய பதிவு காட்டப்படும் கணக்கானது உள்ளடக் கப்பட்டுள்ள பேரேட்டின் பக்க இலக்கம்.

(4), (8) என்பவற்றில் கொடுக்கல் வாங்கல்களின் பெறுமானங்கள் எழுதப்படும்.

## 6.4 கணக்கு வகைகள்

வணிகக் கொடுக்கல் வாங்கல்கள் காரணமாக சொத்துக்கள், உரிமை, பொறுப்புக்கள், வருமானங்கள், செலவினங்கள் உருவாகின்றன என்பதை நாம் இதற்கு முன்னர் கலந்துரையாடியுள்ளோம். கொடுக்கல் வாங்கல்கள் தொடர்பாக இவ்வுருப்படிகளில் ஏற்படும் மாற்றங்களை அறிக்கைப்படுத்துவதற்குக் கணக்குகள் பயன்படுத்தப்படும். இதற்கமைய கணக்குகளை ஐந்தாக வகைப்படுத்த முடியும்.

1. சொத்துக் கணக்குகள்

உதாரணம் :-

கட்டடக் கணக்கு, கடன்பட்டோர் கணக்கு, காசுக் கணக்கு

2. பொறுப்புக் கணக்குகள்

உதாரணம் :-

வங்கிக்கடன் கணக்கு, கடன்கொடுத்தோர் கணக்கு, செலுத்த வேண்டிய மின்சாரக் கட்டணக் கணக்கு

3. உரிமைக் கணக்குகள்

உதாரணம் :-

மூலதனக் கணக்கு, பற்றுக் கணக்கு

4. வருமானக் கணக்குகள்

உதாரணம் :-

விற்பனைக் கணக்கு, தரகு வருமானக் கணக்கு, வட்டி வருமானக் கணக்கு

5. செலவினக் கணக்குகள்

உதாரணம் :-

சம்பளக் கணக்கு,காப்புறுதிக் கட்டணக் கணக்கு, மின்சாரக் கட்டணக் கணக்கு




படம் 6.1

வணிகக் கொடுக்கல் வாங்கல்களைக் கணக்குகளில் பதிவு செய்யும்போது கொடுக்கல் வாங்கல்களுக்குரிய பெறுமானங்களைக் குறித்த கணக்குகளில் வரவு அல்லது செலவுப் பக்கத்தில் பதிவுசெய்யப்படல் வேண்டும்.அவ்வாறு பதிவுசெய்யப்படும் முறை தொடர்பாக அவதானிப்போம்.

## 6.5 கொடுக்கல் வாங்கல்களைக் கணக்குகளில் பதிவு செய்தல்

சொத்து, உரிமை, பொறுப்பு, வருமானம், செலவினங்களின் அதிகரித்தல் அல்லது குறைதல் ஆகிய நிலைமைகள் கணக்குகளில் பதிவு செய்யப்படும். எவ்வாறாயினும், கணக்கொன்றில் வரவு வைக்கப்படுதலானது அதிகரிப்பொன்றைக் காட்டுவதாக மட்டும் கருதக்கூடாது. சில கணக்குகளில் அதிகரிப்பொன்றைக் காட்டுவதற்காக வரவு வைக்கப்படுவதுடன், வேறு சில கணக்குகளில் குறைவொன்றைக் காட்டுவதற்காக வரவு வைக்கப்படும். செலவு வைக்கப்படுதல் தொடர்பாகவும் மேற்கூறிய நிலைமையே காணப்படும். இதற்கமையக் குறைதல், அதிகரித்தல் என்பவற்றைக் காட்டுவதற்காக வரவு, செலவு வைக்கப்படுவது எவ்வாறு என்பது தொடர்பாகப் பிரச்சினையொன்று எழுகின்றது. இப்பிரச்சனைக்குத் தீர்வொன்றாகப் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட

விதிகள் காணப்படுகின்றன. இதனையே இரட்டை பதிவு விதி அல்லது இரட்டைப் பதிவுத் தத்துவம் என அழைப்பர். ஐவகைக் கணக்குகள் தொடர்பான இரட்டைப் பதிவு விதிகள் காணப்படுகின்றன. அவை பின்வரும் அட்டவணையில் தரப்பட்டுள்ளன.




| கணக்கு வகைகள் | அதிகரித்தல் | குறைதல் |
|---|---|---|
| சொத்துக் கணக்கு | வரவு | செலவு |
| செலவினக் கணக்கு. | வரவு | செலவு |
| பொறுப்புக் கணக்கு | செலவு | வரவு |
| உரிமைக் கணக்கு | செலவு | வரவு |
| வருமானக் கணக்கு | செலவு | வரவு |




படம் 6.2

உதாரணம் :- 20XX.01.03 ரூ. 500 000 செலுத்தி இயந்திரமொன்று கொள்வனவு செய்யப்பட்டது.

இரட்டைப்பதிவு :- இயந்திரக் கணக்கு (சொத்து அதிகரிப்பு) வரவு ரூ. 500 000
காசுக் கணக்கு (சொத்துக் குறைதல்) செலவு ரூ. 500 000

வரவு இயந்திரக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.01.03 | காசுக் கணக்கு | | 500 000 | | | | |

வரவு காசுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.01.03 | இயந்திரக் கணக்கு | | 500 000 |

உதாரணம் :- 20XX.01.04 வங்கிக் கடனாக ரூ. 200 000 பெறப்பட்டது.

இரட்டைபதிவு :-

காசுக் கணக்கு (சொத்து அதிகரிப்பு) வரவு ரூ. 200 000
வங்கிக் கடன் கணக்கு (பொறுப்பு அதிகரிப்பு) செலவு ரூ. 200 000

| வரவு | | | காசுக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| 20XX.01.03 | வங்கிக் கடன் கணக்கு | | 200 000 | | | | |

| வரவு | | | வங்கிக் கடன் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| | | | | 20XX.01.03 | காசுக் கணக்கு | | 200 000 |

உதாரணம் :- 20XX.01.05 உரிமையாளர் மூலதனமாக வணிகத்திற்கு ரூ.300 000 ஈடுபடுத்தினார்.

இரட்டைப் பதிவு :-

காசுக் கணக்கு (சொத்து அதிகரிப்பு) வரவு ரூ. 300 000
மூலதனக் கணக்கு (உரிமை அதிகரிப்பு) செலவு ரூ. 300 000

| வரவு | | | காசுக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| 20XX.01.05 | மூலதனக் கணக்கு | | 300 000 | | | | |

| வரவு | | | மூலதனக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| | | | | 20XX.01.05 | காசுக் கணக்கு | | 300 000 |

உதாரணம் :- 20XX.01.05 வட்டி வருமானமாக ரூ. 20 000 பெறப்பட்டது.

இரட்டைப் பதிவு :-

காசுக் கணக்கு (சொத்து அதிகரிப்பு) வரவு ரூ. 20 000
வட்டி வருமானக் கணக்கு (உரிமை அதிகரிப்பு) செலவு ரூ. 20 000

| வரவு | | | காசுக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப. | தொகை ரூ. |
| 20XX.01.05 | பெற்ற வட்டிக் கணக்கு | | 20 000 | | | | |

| வரவு | | | பெற்ற வட்டிக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப. | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| | | | | 20XX.01.05 | காசுக் கணக்கு | | 20 000 |

உதாரணம் :- 20XX.01.06 ரூ. 20 000 சம்பளமாகச் செலுத்தப்பட்டது. இதன்

இரட்டைப் பதிவு :- சம்பளக் கணக்கு (செலவு அதிகரித்தல்) வரவு ரூ. 20 000
காசுக் கணக்கு (சொத்துக் குறைதல்) செலவு ரூ.20 000

| வரவு | | | சம்பளக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| 20XX.01.06 | காசுக் கணக்கு | | 20 000 | | | | |

| வரவு | | | காசுக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| | | | | 20XX.01.06 | சம்பளக் கணக்கு | | 20 000 |

## பேரேடு

வணிகமொன்றின் ஒவ்வொரு சொத்துவகை சார்பாகவும் தனித்தனிக் கணக்குகள் பேணப் படுதல் வேண்டும். இதற்கமைய மோட்டார் வாகனக் கணக்கு, தளபாடக் கணக்கு, காசுக் கணக்கு எனும் வகையில் எண்ணிலடங்காத சொத்துக் கணக்குகள் காணப்பட முடியும். இவ்வாறே உரிமை, பொறுப்பு, செலவினங்கள் என்பனவற்றிற்கும் தனித்தனியாகப் பல கணக்குகள் காணப்பட முடியும். இக்கணக்கு கள் அனைத்தினையும் உள்ளடக்கிய ஏடே பேரேடு என்றழைக்கப்படும். எனவே வணிகக் கொடுக்கல் வாங்கல்களைக் கணக்குகளில் பதிவு செய்வதனை வணிகக் கொடுக்கல் வாங்கல்களைப் பேரேடுகளில் பதிவுசெய்தல் எனவும் அழைக்க முடியும்.



படம் 6.3

### செயற்பாடு 01

இரட்டைப் பதிவுத் தத்துவத்திற்கமைய கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு கணக்குகளின் பெறுமானங்களில் அதிகரித்தல் அல்லது குறைதல் வரவு பக்கத்திலா அல்லது செலவு பக்கத்திலா பதிவுசெய்யப்படும் என்பதனைக் குறித்துக் காட்டவும்.

| தொடர் இலக்கம் | கணக்கின் பெயர் | அதிகரித்தல் | குறைதல் |
|---|---|---|---|
| 1 | கட்டடக் கணக்கு | | |
| 2 | வங்கிக் கடன் கணக்கு. | | |
| 3 | விற்பனைக் கணக்கு | | |
| 4 | மின்சாரக் கணக்கு | | |
| 5 | பெற்ற கடன் கணக்கு | | |
| 6 | மோட்டார் வாகனக் கணக்கு | | |
| 7 | கொள்வனவுக் கணக்கு | | |
| 8 | மூலதனக் கணக்கு | | |
| 9 | பற்றுக் கணக்கு | | |
| 10 | கடன்பட்டோர் கணக்கு | | |

### செயற்பாடு 02

பிரியா வணிகத்தில் 20XX மார்ச் மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் கீழே தரப்பட்டுள்ளன. அவ்வொவ்வொரு கொடுக்கல் வாங்கல்களுக்கும் உரிய இரட்டைப் பதிவினை எழுதிக் காட்டுக

மார்ச் 01 உரிமையாளர் ரூ. 200 000 மூலதனமாக ஈடுபடுத்தினார்.

02 ரூ. 50 000 பெறுமதியான பொருள்தொகுதியொன்று உடன் காசுக்குக் கொள்வனவு செய்யப்பட்டது.

03 வணிகத்தின் மாதாந்த வாடகை ரூ.1000 செலுத்தப்பட்டது.

04 ரூ.70 000 பெறுமதியான பொருள்கள் உடன் காசுக்கு விற்பனை செய்யப்பட்டன.

05 ரூ. 80 000 பெறுமதியான பொருள்கள் கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டது.

06 உரிமையாளரின் சொந்தத் தேவை கருதி ரூ.10 000 வணிகத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.

07 மாதச் சம்பளமாக ரூ. 20 000 செலுத்தப்பட்டது.

08 வங்கிக் கடனாக ரூ. 200 000 பெறப்பட்டது.

09 ரூ. 10 000 இட்டு நிலையான வைப்புக் கணக்கொன்று ஆரம்பிக்கப் பட்டது.

10 கடனுக்கு விற்பனை ரூ. 60 000



செயற்பாடு 03

நளினியின் வணிகத்தின் 20XX ஜனவரி மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் அடங்கிய பட்டியலொன்று கீழே தரப்பட்டுள்ளது.

ஜனவரி 01 மூலதனமாக ரூ. 300 000 ஈடுபடுத்தப்பட்டது.

02 வணிகப் பயன்பாட்டிற்காக ரூ. 500 000 உபகரணங்கள் கொள்வனவு செய்யப்பட்டன.

03 ரூ. 80 000 பெறுமதியான சரக்குகள் கடனுக்கு கொள்வனவு செய்யப் பட்டன.

04 உரிமையாளரின் வீட்டுத் தொலைபேசிக் கட்டணமான ரூ. 5 000 வணிகத்திலிருந்து செலுத்தப்பட்டது.

05 உடன் காசுக்கு விற்பனை ரூ. 50 000 இடம்பெற்றது.

06 காப்புறுதிக் கட்டணமாக ரூ. 7 000 செலுத்தப்பட்டது.

07 ரூ. 40 000 இற்கு சரக்குகள் கொள்வனவு செய்யப்பட்டன.

08 கடன் கொடுத்தோருக்கு ரூ. 20 000 செலுத்தப்பட்டது.

மேற்கூறிய கொடுக்கல் வாங்கல்களைக் கணக்குகளில் பதிவு செய்யவும்.



## செயற்பாடு 04

நிப்ராஸ் வணிகத்தின் கணக்கீட்டு லிகிதர் மூலம் 20XX ஜனவரி மாதத்தில் நிகழ்ந்த கொடுக்கல் வாங்கல்கள் உள்ளடக்கப்பட்டு பின்வரும் காசுக் கணக்கு தயாரிக்கப்பட்டுள்ளது.

வரவு — காசுக் கணக்கு — செலவு

| திகதி | விபரம் | பே. ப. | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப. | தொகை ரூ. . |
|---|---|---|---|---|---|---|---|
| ஜன.01 | மூலதனக் கணக்கு | | 80 000 | ஜன.09 | கொள்வனவுக் கணக்கு | | 50 000 |
| 06 | விற்பனைக் கணக்கு | | 60 000 | 12 | உபகரணக் கணக்கு | | 80 000 |
| 07 | வங்கிக்கடன் கணக்கு | | 100 000 | 15 | மின்சாரக்கட்டணக் கணக்கு | | 10 000 |
| 27 | வட்டி வருமானக் கணக்கு | | 12 000 | 18 | முதலீட்டுக் கணக்கு | | 40 000 |
| 30 | கடன்பட்டோர் கணக்கு | | 4 000 | 22 | வங்கிகடன் வட்டிக் கணக்கு | | 10 000 |
| | | | | 25 | கடன் கொடுத்தோர் கணக்கு | | 5 000 |

1. மேலே காட்டப்பட்ட காசுக் கணக்கில் பதியப்பட்டுள்ள கொடுக்கல் வாங்கல்களைத் திகதி ஒழுங்கின்படி விபரிக்கவும்.

2. மேற்காட்டிய கொடுக்கல் வாங்கல்களுக்குரிய ஏனைய பதிவுகள் நிப்ராஸ் வணிகத்தின் பேரேட்டுக் கணக்குகளில் பதிவு செய்யப்பட்டுள்ள முறையினைச் சுட்டிக்காட்டுங்கள்.

# 7 மூல ஏடுகள்




இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.

7.1 மூல ஏடுகள் பற்றிய அறிமுகம்

7.2 மூல ஏடுகளின் அவசியம்

7.3 மூல ஆவணங்கள்

7.4 மூல ஆவணங்களின் பயன்பாடுகள்

## 7.1 மூல ஏடுகள் பற்றிய அறிமுகம்

வணிகக் கொடுக்கல் வாங்கல்களை நேரடியாகப் பேரேட்டுக் கணக்குகளில் பதிவு செய்யும்போது பிரச்சினைகள் பல ஏற்படலாம். அதனால், வணிகக் கொடுக்கல் வாங்கல்களைப் பேரேட்டுக் கணக்குகளில் பதிவு செய்வதற்கு முன்னர் ''மூல ஏடுகள் '' என அழைக்கப்படும் ஏடுகளில் பதிவு செய்யப்படும்.

இதனடிப்படையில் வணிகத்தினால் மேற்கொள்ளப்படும் சகல வணிகக் கொடுக்கல் வாங்கல்களும் பேரேட்டுக் கணக்குகளில் பதிவதற்கு முன்னர் அந்தக் கொடுக்கல் வாங்கல்கள் இடம்பெற்ற ஒழுங்கின் அடிப்படையில் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட முறையில் முதன்முதலில் பதியும் ஏடுகள் ''மூல ஏடுகள்'' என அழைக்கப்படும்.

மூல ஏடுகளானவை நாட்குறிப்புக்கள், துணையேடுகள், தினசேரி போன்ற பெயர்களிலும் அழைக்கப்படுகின்றன.

வணிகத்தினால் மேற்கொள்ளப்படும் சகல கொடுக்கல் வாங்கல்களையும் ஒரே மூல ஏட்டில் பதிவது பொருத்தமானதல்ல. கணக்கீட்டில் பதியும்போது வணிகத்தின் தன்மை, ஏனைய பொதுவான பண்புகள் எனும் அடிப்படைகளில் அவற்றை வகைப்படுத்திப் பதிவு செய்தல் அவசியமாகும். மீண்டும் மீண்டும் நடைபெறும் ஒரே வகையான கொடுக்கல் வாங்கல்களைப் பதிவதற்குப் பொருத்தமான முறையில் மூல ஏடுகள் பயன்படுத்தப்பட முடியும்.

பின்வரும் அட்டவணையில் காட்டப்படுவது வெவ்வேறு வகையான கொடுக்கல் வாங்கல்களும் அவற்றிற்கான மூல ஏடுகளுமாகும்.

| கொடுக்கல் வாங்கல் வகைகள் | மூலப் பதிவு ஏடுகள் |
|---|---|
| காசுப் பெறுவனவுகள், கொடுப்பனவுகள் | காசேடு/காசுக்கணக்கு |
| வங்கியின் நடைமுறைக்கணக்கினூடாக நடைபெறும் கொடுக்கல் வாங்கல்கள் | வங்கிக் கணக்கு |
| சில்லறைக் காசுக் கொடுக்கல் வாங்கல்கள் | சில்லறைக் காசேடு |
| மீள் விற்பனைப் பொருள்கள் கடனுக்குக் கொள்வனவு செய்யப்படுதல். | கொள்வனவு நாளேடு/ கொள்வனவு நாட்குறிப்பு |
| மீள் விற்பனைப் பொருள்களைக் கடனுக்கு விற்பனை செய்தல் | விற்பனை நாளேடு/ விற்பனை நாட்குறிப்பு |
| ஏனைய கொடுக்கல் வாங்கல்கள் | பொதுநாட்குறிப்பேடு/ பொதுத் தினசேரி |

*அட்டவணை 7.1 ஒவ்வொரு கொடுக்கல் வாங்கல்கள் சார்பாகவும் தயாரிக்கப்படும் மூல ஏடுகள்*

## 7.2 மூல ஏடுகளின் அவசியம்

கணக்கீட்டுச் செயற்பாடுகளின்போது வணிகக் கொடுக்கல் வாங்கல்கள்களை மூல ஏடுகளில் பதிவு செய்யவேண்டியது பின்வரும் காரணங்களினாலாகும்.

- குறிப்பிட்ட காலத்தில் நிகழும் ஒரே வகையான கொடுக்கல் வாங்கல்களை வகைப்படுத்திப் பதிவு செய்வது அவசியமாயிருத்தல்.
- மூல ஏடுகளில் கொடுக்கல் வாங்கல்களைப் பதிந்த பின்னர் அவை பேரேட்டுக் கணக்குகளில் முறையாகப் பதிவு செய்தல் இலகுவாகவிருத்தல்.
- ஒவ்வொரு மூல ஏடுகளையும் தயாரிக்கும் பொறுப்பு வெவ்வேறு நபர்களால் மேற்கொள்ளப்படுவதற்கும், இதன் காரணமாக நிகழக்கூடிய மோசடிகள், தவறுகளைக் குறைத்துக் கொள்ளக் கூடியதாயிருத்தல்
- மூல ஏடுகளில் பதியப்பட்ட பெறுமதிகளின் கூட்டுத்தொகை கணக்குகளுக்கு தாக்கல் செய்யப்படுவதால் பேரேட்டில் பதிவு செய்ய வேண்டிய பதிவுகளின் எண்ணிக்கை குறைக்கப்படும். இதனால், பேரேட்டை இலகுவாகப் பேணிக் கொள்ள முடிதல்.
- கணக்குப் பதிவுகளில் ஏற்படக்கூடிய தவறுகள் குறைவடையும், தவறுகளை இனங்காண்பதுவும் இலகுவாகவிருக்கும்.

மூல ஏடுகளில் வணிகக் கொடுக்கல் வாங்கல்களைப் பதியும்போது அவற்றிற்குரிய தகவல்கள் மூல ஆவணங்களிலிருந்து பெற்றுக் கொள்ளப்படும். இதனால், மூல ஆவணங்களுக்கும் மூலப் பதிவேடுகளுக்கும் இடையிலான தொடர்பு பற்றி அறிய வேண்டியது அவசியமாகும்.

## 7.3 மூல ஆவணங்கள்

வணிகத்தில் கொடுக்கல் வாங்கல்கள் நடைபெறும்போது அக்கொடுக்கல் வாங்கல்கள் தொடர்பான சகல விபரங்களையும் உள்ளடக்கித் தயாரிக்கப்பட்டு அப்பிரிவினது பொறுப்பு வாய்ந்த அதிகாரியினால் கையொப்பமிட்டுப் பேணப்படும் ஆவணம் மூல ஆவணம் எனப்படும்.

வணிகம் தயாரிக்கும் அனைத்து மூல ஆவணத்திற்கும் தொடரிலக்கம் பயன்படுத்தப் படும். மூல ஏடுகளில் வணிகக் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்வதற்கு மூல ஆவணங்கள் அடிப்படையாகக் கொள்ளப்படுகின்றன.

மூல ஆவணங்களில் பொதுவாகப் பின்வரும் விடயங்கள் உள்ளடக்கப்பட்டிருக்கும்.

- வணிகத்தின் பெயரும் முகவரியும்
- மூல ஆவணத்தின் தொடர் இலக்கம்
- கொடுக்கல் வாங்கல் இடம் பெற்ற திகதி
- கொடுக்கல் வாங்கலுடன் தொடர்புடைய மற்றைய நபர் / நிறுவனம்

- கொடுக்கல் வாங்கல் தொடர்பான விபரம்
- கொடுக்கல் வாங்கலின் பணப் பெறுமதி
- கொடுக்கல் வாங்கல் தொடர்பாகப் பொறுப்பு வாய்ந்த அதிகாரியின் கையொப்பம்

பின்வரும் அட்டவணையில் ஒவ்வொரு மூல ஏடுகளிலும் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்யும்போது பயன்படுத்தப்படும் மூல ஆவணங்களிற்கான உதாரணங்கள் காட்டப்பட்டுள்ளன.

| மூல ஏடுகள் | மூல ஆவணங்கள் |
|---|---|
| காசேடு | பற்றுச்சீட்டு, கொடுப்பனவுக் கைச்சாத்து |
| வங்கிக் கணக்கு | வைப்புச்சீட்டு, கொடுப்பனவு கைச்சாத்து , வங்கிக் கூற்று, மறுக்கப்பட்ட காசோலைகள் தொடர்பான அறிவித்தல். |
| சில்லறைக் காசேடு | சில்லறைக் காசேட்டுக் கைச்சாத்து |
| கொள்வனவு நாட் குறிப்பு | கொள்வனவுப் பட்டியல் |
| விற்பனை நாட் குறிப்பு | விற்பனைப் பட்டியல் |
| பொது நாட்குறிப்பேடு | நாட்குறிப்புக் கைச்சாத்து |

*அட்டவணை 7.2 மூல ஏடுகளின் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்யும்போது பயன்படுத்தப்படும் மூல ஆவணங்களிற்கான உதாரணங்கள்*

## 7.4 மூல ஆவணங்களின் பயன்பாடுகள்

- கொடுக்கல் வாங்கல்களுக்குரிய ஆரம்ப ஆவணமாகப் பயன்படுத்த முடியும்.
- கொடுக்கல் வாங்கல்களை உறுதிப்படுத்தும் எழுத்து மூலமான ஆதாரமாகப் பயன்படுத்த முடியும்.
- கொடுக்கல் வாங்கல் தொடர்பாக மேலதிக விபரங்களைப் பெற்றுக் கொள்ள முடியும்.
- கொடுக்கல் வாங்கல்களை மூல ஏடுகளில் பதிவதற்கு அடிப்படையாகக் கொள்ள முடியும்.
- பொறுப்பு வாய்ந்த அதிகாரி கையொப்பமிட்டுள்ளதால் அவர் வகை கூறலைப் பொறுப்பேற்பதை உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

ஒவ்வொரு மூல ஏடு தொடர்பாகவும் அடுத்த அத்தியாயத்தில் விரிவாக ஆராயலாம்.

## செயற்பாடு 01

மூல ஏடுகள் தொடர்பாகப் பின்வரும் கூற்றுக்களை நன்கு வாசித்து அவை உண்மை/தவறு எனக் கூறுக.

1. வணிகத்தின் கொடுக்கல் வாங்கல்கள் அவற்றின் தன்மை, பொதுப் பண்புகள் அடிப்படையில் வகைப்படுத்திப் பதிவதற்கு மூல ஏடுகள் பயன்படுத்தப்படும்.
2. மூல ஏடுகள் பயன்படுத்தப்படுவது பேரேட்டுக் கணக்குகளை ஒழுங்கு முறைப்படுத்துவதற்கு ஆகும்.
3. மீள் விற்பனைப் பொருள்களைக் கடனுக்குக் கொள்வனவு செய்தல் தொடர்பாகப் பயன்படுத்தும் மூல ஏடு விற்பனை நாளேடாகும்.
4. வணிகத்தினால் மேற்கொள்ளப்படும் சகல கொடுக்கல் வாங்கல்களும் முதலாவதாக மூல ஏடுகளில் பதிவு செய்யப்படல் வேண்டும்.
5. மூல ஆவணங்களைப் பயன்படுத்தியே மூல ஏடுகளில் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவுசெய்தல் வேண்டும்.
6. மூல ஏடானது நாட்குறிப்புக்கள், தினசேரிகள் எனும் பெயர்களாலும் அழைக்கப்படும்.
7. மூல ஏட்டில் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவுசெய்தபின்னர் அவை பேரேட்டுக் கணக்குகளிற்கு மாற்றப்பட வேண்டும்.
8. மூல ஆவணம் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக அமைவதற்கு அவை பொறுப்புள்ள அலுவலரால் உறுதிப்படுத்தப்பட்டிருக்க வேண்டும்.

## செயற்பாடு 02

மூல ஏட்டில் பொதுவாக உள்ளடக்கப்படும் விடயங்கள் 6 ஐக் குறிப்பிடுக.

## செயற்பாடு 03

கீழே காட்டப்படும் ஒவ்வொரு மூல ஏட்டிலும் இடம்பெறும் கொடுக்கல் வாங்கல்களைக் குறிப்பிடுக.

| மூல ஏடுகள் | கொடுக்கல் வாங்கல்களிற்கான உதாரணங்கள் |
|---|---|
| சில்லறைக் காசேடு | |
| பொது நாட்குறிப்பேடு | |
| விற்பனை நாட்குறிப்பு | |
| வங்கிக் கணக்கு | |
| காசேடு | |
| கொள்வனவு நாட்குறிப்பு | |

## செயற்பாடு 04

கீழே A நிரலில் மூல ஏடுகள் தரப்பட்டுள்ளன. B நிரலில் கொடுக்கல் வாங்கலின் மூல ஆவணங்கள் தரப்பட்டுள்ளன. A நிரலுக்கு பொருத்தமானதை B நிரலிலிருந்து தெரிவுசெய்க.

| மூல ஏடுகள்<br>A | மூல ஆவணங்கள்<br>B |
|---|---|
| காசேடு | கொள்வனவுப் பட்டியல் |
| வங்கிக் கணக்கு | நாட்குறிப்புக் கைச்சாத்து |
| சில்லறை காசேடு | வரவுத்தாள் / வரவுக்குறிப்பு |
| கொள்வனவு நாட்குறிப்பு | விற்பனைப் பட்டியல் |
| விற்பனை நாட்குறிப்பு | கைச்சாத்து, பற்றுச்சீட்டு |
| பொது தினசேரி/ பொது நாட்குறிப்பு | சில்லறைக் கொடுப்பனவு கைச்சாத்து |
| | செலவுத்தாள் / செலவுக் குறிப்பு |
| | வைப்புச்சீட்டு |

# 8 காசேடும் சில்லறைக் காசேடும்



இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.

8.1 காசேடு

- காசேடு - அறிமுகம்
- காசேட்டின் இரட்டைத் தொழிற்பாடு
- காசேட்டில் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்தல்
- காசேட்டினையும் ஏனைய கணக்குகளையும் சமப்படுத்தல்
- காசுக் கழிவுகளுடன் தொடர்புடைய கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்தல்

8.2 சில்லறைக் காசேடு

- சில்லறைக் காசுக் கட்டுநிதி
- பகுப்பாய்வு நிரல்களுடனான சில்லறைக் காசேட்டைத் தயாரித்தல்

## 8.1 காசேடு

வணிகக் கொடுக்கல் வாங்கல்களுடன் தொடர்புடைய காசுப்பெறுவனவுகளையும் காசுக் கொடுப்பனவுகளையும் பதிவதற்கான முதற்பதிவேடு காசேடாகும்.

வணிகத்திற்குக் காசு கிடைக்கும் மூலங்களும் வணிகத்தினால் காசுக் கொடுப்பனவு செய்யப்படும் வழிகளும் பல வகைப்பட்டவையாகும்.

**வணிகத்தினது காசுக் கிடைப்பனவிற்குரிய மூலங்களுக்கான சில உதாரணங்கள்**

- உரிமையாளரது மூலதனம்
- காசு விற்பனைகள்
- கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசு
- கடனாகப் பெறும் காசு
- வாடகை, வட்டி, தரகு போன்ற வருமானங்கள் மூலம் பெறப்பட்ட காசு

**வணிகத்தால் மேற்கொள்ளப்படும் காசுக் கொடுப்பனவுகளுக்கான சில உதாரணங்கள்**

- கடன்களை மீளச் செலுத்துதல்
- காசுக் கொள்வனவுகள்
- கடன்கொடுத்தோருக்குச் செலுத்திய காசு
- ஊழியர் சம்பளம், மின்சாரம் போன்ற கொடுப்பனவுகளிற்குச் செலுத்திய காசு.
- தளபாடங்கள், உபகரணங்கள், இயந்திரங்கள் போன்ற நடைமுறையல்லாச் சொத்துக் கொள்வனவுக்காக வழங்கப்பட்ட காசு.
- உரிமையாளர் தமது சொந்தத் தேவைக்காக வணிகத்திலிருந்து பெற்றுக் கொண்ட காசு.

காசேட்டில் காசு பெறுவனவு நடவடிக்கைகளுக்குப் **பற்றுச்சீட்டும்** காசுக் கொடுப்பனவு நடவடிக்கைகளுக்குக் **கைச்சாத்தும்** மூல ஆவணமாகப் பயன்படுத்தப்படும்.

### பற்றுச்சீட்டு

வணிகருக்கு யாதாயினுமொரு முறையில் காசு கிடைக்குமிடத்து அக்காசுப் பெறுவனவை உறுதிப்படுத்தி வணிகத்தினால் காசு கொடுத்த நபருக்குக் கொடுக்கும் ஆதாரமே ''**பற்றுச்சீட்டு**'' என அழைக்கப்படும்.

இதில் தொடரிலக்கம் அச்சிடப்பட்டிருக்கும். காசு கிடைத்த திகதி, கிடைத்தமைக்கான காரணம், கிடைத்த பெறுமானம் போன்ற விபரங்கள் உள்ளடக்கப்பட்டு காசு பெற்றுக் கொண்ட நபரினால் (காசாளரினால்) கையொப்பமிட்டு பற்றுச்சீட்டு வழங்கப்படும். காசுப் பற்றுச்சீட்டு என்பது றொக்கச்சீட்டு அல்லது காசு மெமோ (Memo) எனும் பெயர்களிலும் அழைக்கப்படும். பற்றுச்சீட்டானது வணிகத்திற்குக் காசு கிடைத்தமை பற்றிய எழுத்து வடிவிலான ஆதாரமாகும்.

பற்றுச்சீட்டின் பிரதியொன்று கணக்கீட்டுப் பகுதிக்குக் கிடைக்கச் செய்ய வேண்டியதுடன் அதனை மூல ஆவணமாகக் கொண்டு காசு கிடைத்தமையைக் காசேட்டில் பதிவு செய்தல் வேண்டும். பற்றுச்சீட்டானது வணிகத்தின் தன்மைக்கேற்பவும் பல்வேறு தேவைகளுக்கேற்பவும் வேறுப்பட்ட வடிவங்களில் தயாரிக்கப்பட முடியும். இது தொடர்பாக நிலையான வடிவமைப்பொன்றில்லை. பொதுவாக வணிகமொன்றினால் பின்வரும் மாதிரி அமைப்பிற்கேற்பப் பற்றுச்சீட்டினைப் பயன்படுத்த முடியும். அவற்றில் கவனஞ் செலுத்தவும்.

பற்றுச்சீட்டு

தொடர் இலக்கம் :- 20513

மாலினி புத்தகசாலை,
82, யோர்க் வீதி
கொழும்பு
தொ.பே. :- 0112030278
திகதி .........................

.....................................................................................................................................

இலக்க .................... பட்டியல் தொடர்பாகக் கிடைக்கவேண்டிய ரூ. ................................. .................................................. தொகையினை காசோலையாக/பணமாகப் பெற்றுக் கொண்டேன்.

ரூ. .................. ............................ ........................ .............................

தயாரித்தவர் பரிசீலனை செய்தவர் உறுதிப்படுத்துபவரின் கையொப்பம்

பண உறுதிச் சீட்டு CASH MEMO
(ரொக்கச் சீட்டு) தொடர் இலக்கம் :- 4856

துமிந்த என்டபிரைஸ்
**245,**சகன மாவத்தை
மகரகம
011-2266782 திகதி......................

| பெயர் |
| --- |

| உருப் படிகளின் இல | விபரம் | அளவு | அலகு விலை ரூ. | மொத்தப் பெறுமதி ரூ. |
| --- | --- | --- | --- | --- |
| | | | | |
| | மொத்தம் | | | |

தயாரித்தவர் ...................... ............................................
பரிசீலனை செய்தவர்........................ அதிகாரம் பெற்ற உத்தியோகத்தரின் கையொப்பம்



## செயற்பாடு 01

நீங்கள் அல்லது உங்கள் குடும்பத்தின் அங்கத்தவர்கள் பொருள்களைக் கொள்வனவு செய்து பணக் கொடுப்பனவு செய்யும்பொழுது பல்வேறு வணிகங்களால் வழங்கப்பட்ட பற்றுச்சீட்டுகள் பல வடிவங்களில் காணப்படுவதை அவதானித் திருப்பீர்கள்.

1. அவ்வாறான பற்றுச் சீட்டுகளை ஒன்று திரட்டுங்கள்.
2. பற்றுச்சீட்டொன்றில் உள்ளடக்கப்பட்டுள்ள விபரங்கள் அவற்றில் உள்ளடங்கியுள்ளதா எனப் பரிசீலனை செய்யுங்கள்.

## கொடுப்பனவுக் கைச்சாத்து

வணிகத்தால் மேற்கொள்ளப்படும் சகல பணக் கொடுப்பனவுகளின்போதும் அவை தொடர்பான தகவல்களை உள்ளடக்கி , பொறுப்பு வாய்ந்தவரால் கையொப்பமிட்டு, கொடுப்பனவை உறுதிப்படுத்துவதற்காகத் தயாரிக்கப்படும் மூல ஆவணம் **கொடுப்பனவுக் கைச்சாத்து** எனப்படும்.

சகல கொடுப்பனவுக் கைச்சாத்துக்களிலும் தொடரிலக்கம் பயன்படுத்தப்படும். பணக்கொடுப்பனவின்போது பொறுப்பு வாய்ந்தவரால் கையொப்பமிடப்பட்டுள்ளதால், இது பணக் கொடுப்பனவு செய்யப்பட்டுள்ளது என்பதற்கு எழுத்து மூல ஆதாரமாகப் பயன்படுத்த முடியும்.

கொடுப்பனவுக் கைச்சாத்துத் தொடர்பாக நிலையான மாதிரி வடிவம் இல்லையாயினும் பொதுவாகப் பின்வரும் அமைப்பில் அவற்றைத் தயாரித்துக் கொள்ள முடியும்.

வரையறுத்த பிரியங்கா கம்பனி
வவுனியா

தொடர் இலக்கம் :- ................ திகதி ..................

........................................................................................................ க்குக் கொடுப்பனவு

| விபரம் | செலுத்திய பணம் |
|---|---|
| | |

காசோலை இலக்கம் :- ..........................

| | | |
|---|---|---|
| .......................................... | .......................................... | .......................................... |
| தயாரித்தவரின் கையொப்பம் | கொடுப்பனவை அனுமதிக்கும் அதிகாரியின் கையொப்பம் | கொடுப்பனவை உறுதிப்படுத்தும் அதிகாரியின் கையொப்பம் |

## காசேட்டின் இரட்டைத் தொழிற்பாடு

காசுப் பெறுவனவுகள், காசுக் கொடுப்பனவுகளை முறையே பற்றுச்சீட்டு, கைச் சாத்து எனும் மூல ஆவணங்களைப் பயன்படுத்தி ஒழுங்குமுறையாகக் காசேட்டில் முதற்பதிவு இடம்பெறுவதால் மூல ஏடு எனும் தொழிற்பாட்டைக் காசேடு நிறை வேற்றுகின்றது. அதே போன்று காசேடானது வரவு, செலவு எனும் இருபக்கங்களைக் கொண்டுள்ளதன் காரணமாக அது பேரேட்டுக் கணக்கொன்றின் தொழிற்பாட்டினையும் நிறைவேற்றுகின்றது.

இதற்கமைய காசேட்டினூடாகப் பின்வரும் இரு தொழிற்பாடுகள் நிறைவேற்றப் படுகின்றன.

- மூல ஏட்டின் தொழிற்பாடு
- பேரேட்டுக் கணக்கொன்றின் தொழிற்பாடு

## காசுக் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்தல்

காசு என்பது வணிகத்தின் சொத்தாகும். காசு பெறப்படுவதனால் சொத்து அதிகரிக்கும் அதே வேளை காசுக் கொடுப்பனவின் காரணமாகச் சொத்துக்கள் குறைவடையும். இதனால் காசேட்டில் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவுசெய்யும்போது சொத்துக் கணக்கிற்குரிய இரட்டைப் பதிவு விதி பயன்படுத்தப்படல் வேண்டும்.

காசுப் பெறுவனவுகள் காசேட்டில் வரவு வைக்கப்படும்.
(சொத்து அதிகரித்தலானது வரவு விதியின் அடிப்படையிலாகும்)

காசுக் கொடுப்பனவுகள் காசேட்டில் செலவு வைக்கப்படும்.
(சொத்துக் குறைதலானது செலவு விதியின் அடிப்படையிலாகும்)

இதற்கமைய பணப்பெறுவனவுகள் காசேட்டில் வரவு வைக்கப்படுவதோடு, பணக் கொடுப்பனவுகள் காசேட்டில் செலவு வைக்கப்படும்.

காசேடானது கணக்கொன்றாகவும் தொழிற்படுவதனால் காசுப் பெறுவனவுகளைக் காசேட்டில் வரவு வைக்கும்போது இரட்டைப் பதிவின் வரவுப் பதிவு நிறைவு பெறுகின்றது. பேரேட்டில் அதற்கான செலவுப் பதிவை மட்டுமே பதிவு செய்ய வேண்டியுள்ளது. அவ்வாறே காசுக்கொடுப்பனவுகளைக் காசேட்டில் செலவு வைக்கும் போது இரட்டைப் பதிவின் செலவுப் பதிவு காசேட்டில் நிறைவு பெறுகின்றது. பேரேட்டில் இதற்காக உரிய கணக்கில் வரவுப் பதிவை மட்டுமே பதிவுசெய்ய வேண்டும்.

- காசேட்டில் வரவு வைக்கப்பட்ட பெறுமானங்கள் பேரேட்டில் உரிய கணக்குகளில் செலவு வைக்கப்பட வேண்டும்.

- காசேட்டில் செலவு வைக்கப்பட்ட பெறுமானங்கள் பேரேட்டில் உரிய கணக்குகளில் வரவு வைக்கப்பட வேண்டும்.

இவ்வாறு பதிவுசெய்யும்போது குறித்த வணிக கொடுக்கல் வாங்கலின் இரட்டைப் பதிவு பூரணமடைகின்றது.

உதாரணம் :-

20XX-.01-.01 திகதியில் கமலாவினால் ஆரம்பிக்கப்பட்ட வணிகத்தின் ஜனவரி மாதத்தின் காசுக்கொடுக்கல் வாங்கல்களுக்குரிய தகவல்கள் பின்வருமாறு.

| திகதி | பற்றுச் சீட்டு இலக்கம் | கைச் சாத்து இலக்கம் | நிகழ்வுகள் |
|---|---|---|---|
| 20XX.01.01 | 01 | | மூலதனமாக ரூ. 80 000 இடப்பட்டது. |
| 01.02 | | 001 | ரூ. 45 000 இற்கு பொருள் கொள்வனவு செய்யப் பட்டது |
| 01.04 | 02 | | வங்கியிலிருந்து ரூ. 50 000 கடன் பெறப்பட்டது |
| 01.08 | | 002 | ரூ. 8 000 இற்கு தளபாடம் கொள்வனவு செய்யப் பட்டது. |
| 01.15 | | 003 | வாடகையாக ரூ. 6 000 செலுத்தப்பட்டது |
| 01.18 | 03 | | விற்பனை மூலம் ரூ. 40 000 பெறப்பட்டது. |
| 01.20 | 04 | | கடன்பட்டோரான விஜயனிடமிருந்து ரூ. 30 000 பெறப்பட்டது. |
| 01.24 | | 004 | கடன் கொடுத்தோரான அன்வருக்கு ரூ. 34 000 செலுத்தப்பட்டது. |
| 01.25 | | 005 | காசாக ரூ. 5 000 சொந்த தேவை கருதி எடுக்கப் பட்டது. |
| 01.26 | 05 | | வட்டி வருமானமாக ரூ. 3 000 பெறப்பட்டது. |
| 01.28 | | 006 | வங்கிக் கடன் ரூ. 6 000 திருப்பிச் செலுத்தப் பட்டது. |

மேற்காட்டிய உதாரணத்தில் குறிப்பிடப்பட்ட கொடுக்கல் வாங்கல்கள் கமலாவின் வணிகத்தின் காசேடு (காசுக் கணக்கு), பேரேட்டுக் கணக்குகளில் பின்வருமாறு பதியப்படும்.

| வரவு | | | காசுக் கணக்கு | | | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| திகதி | பற்றுச் சீட்டு இல | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | கைச் சாத்து இல. | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| 20XX.01.01 | 01 | மூலதனம் | | 80 000 | 20XX.01.02 | 001 | கொள்வனவு | | 45 000 |
| 01.04 | 02 | வங்கிக்கடன் | | 50 000 | 01.08 | 002 | தளபாடம் | | 8 000 |
| 01.18 | 03 | விற்பனை | | 40 000 | 01.15 | 003 | வாடகை | | 6 000 |
| 01.20 | 04 | விஜயன் (க.ப) | | 30 000 | 01.24 | 004 | அன்வர்(க.கொ) | | 34 000 |
| 01.26 | 05 | வட்டிவருமானம் | | 3 000 | 01.25 | 005 | பற்று காசு | | 5 000 |
| | | | | | 01.28 | 006 | வங்கிக்கடன் | | 6 000 |

| வரவு | | | மூலதனக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| | | | | 20XX.01.01 | காசு | | 80 000 |

| வரவு | | | கொள்வனவுக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| 20xx.01.02 | காசு | | 45 000 | | | | |

| வரவு | | | வங்கிக்கடன் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| 20XX.01.28 | காசு | | 6 000 | 20XX.01.04 | காசு | | 50 000 |

| வரவு | | | தளபாடக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| 20XX.01.08 | காசு | | 8 000 | | | | |

| வரவு | | | கொடுத்த வாடகைக் கணக்கு | | | | செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
| 20XX.01.15 | காசு | | 6 000 | | | | |

வரவு விற்பனைக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.01.18 | காசு | | 40 000 |

வரவு விஜயன் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.01.20 | காசு | | 30 000 |

வரவு அன்வர் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.01.24 | காசு | | 34 000 | | | | |

வரவு பற்றுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.01.25 | காசு | | 5 000 | | | | |

வரவு வட்டி வருமானக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.01.26 | காசு | | 3 000 |

### கணக்கைச் சமப்படுத்தல்

கொடுக்கல் வாங்கல்களின் பெறுமதிகளைக் கணக்குகளில் பதிவு செய்யும்போது இரட்டைப் பதிவுத் தத்துவத்திற்கமைய ஒரு கணக்கில் வரவிலும் இன்னொரு கணக்கில் செலவிலும் பதிவு செய்யப்படும். குறிப்பிட்ட கால முடிவில் வரவு, செலவு பதிவுகளின் மொத்தப் பெறுமானங்களுக்கிடையிலான வேறுபாட்டுத் தொகை கணிக்கப்படல் வேண்டும். அவ்வேறுபாட்டுத் தொகை "**கணக்கின் மீதி**" என அழைக்கப்படும். கணக்கின் மீதியை அறிந்து கொள்வதற்குக் கணக்கினைச் சமப்படுத்தல் வேண்டும்.

உதாரணம் :-

குறிப்பிட்ட காலப்பகுதியில் காசுப் பெறுவனவுகளின் மொத்தத் தொகை ரூ. 50 000 ஆகும். கொடுப்பனவுகளின் மொத்த தொகை ரூ. 33 000 ஆகும்.

எனவே மொத்த தொகைகளுக்கிடையிலான வேறுபாட்டுத் தொகை ரூ. 17 000 ஆகும். இப்பெறுமானமே காசேட்டின் இறுதி மீதியாகக் கருதப்படும்.

பின்வரும் கணக்குகள் சமப்படுத்தப்பட்டுள்ள முறையினை அவதானியுங்கள்

வரவு மூலதனக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.01.31 | மீதி கீழ் கொ. செ * | | 80 000 | 20XX.01.01 | காசு | | 80 000 |
| | | | 80 000 | | | | 80 000 |
| | | | | 20XX.02.01 | மீதி கீழ் கொ.வ * | | 80 000 |

* மீதி கீழ் கொண்டு சென்றது * மீதி கீழ் கொண்டு வந்தது

வரவு வாடகைக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.01.15 | காசு | | 6 000 | 20XX.01.31 | மீதி கீழ் கொ. செ | | 6 000 |
| | | | 6 000 | | | | 6 000 |
| 20XX.02.01 | மீதி கீழ் கொ.வ | | 6 000 | | | | |

வரவு காசுக் கணக்கு செலவு

| திகதி | பற்றுச் சீ. இ. | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | கைச் சாத்து இல | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 20XX.01.01 | 01 | மூலதனம் | | 80 000 | 20XX.01.02 | 001 | கொள்வனவுகள் | | 45 000 |
| 01.04 | 02 | வங்கிக் கடன் | | 50 000 | 01.08 | 002 | தளபாடம் | | 8 000 |
| 01.18 | 03 | விற்பனை | | 40 000 | 01.15 | 003 | வாடகை | | 6 000 |
| 01.20 | 04 | சுபா (கடன்பட்டோர்) | | 30 000 | 01.24 | 004 | சுரேஸ் (க.கொ) | | 34 000 |
| 01.26 | 05 | வட்டி வருமானம் | | 3 000 | 01.25 | 005 | பற்று | | 5 000 |
| | | | | | 01.28 | 006 | வங்கிக் கடன் | | 6 000 |
| | | | | | 01.31 | | மீ/கீ/கொ/செ. | | 99 000 |
| | | | | 203 000 | | | | | 203 000 |
| 20XX.02.01 | | மீ/கீ/கொ/வ | | 99 000 | | | | | |

இதற்கமைய

- கணக்கின் வரவுப்பக்கமானது செலவுப்பக்கத்தை விட அதிக மாகக் காணப்படுமாயின் கிடைக்கும் மீதி வரவு மீதியாகக் காணப்படும் எனவும்
- கணக்கின் வரவுப்பக்கத்தை விடச் செலவுப்பக்கம் அதிகமாக காணப்படுமாயின் கிடைக்கும் மீதி செலவு மீதியாகக் காணப் படும் என்பதுவும் உங்களுக்கு விளங்கியிருக்கும்



## செயற்பாடு 02

20XX-05-01 அன்று குமரன் தாபனம் ஆரம்பிக்கப்பட்டு 20XX.5.31 ல் முடிவடைந்த மாதத்தின் காசுக் கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு தரப்பட்டுள்ளன.

| திகதி | பற்றுச் சீட்டு இலக்கம். | கைச் சாத்து இலக்கம். | விபரம் |
|---|---|---|---|
| 20XX.05.01 | 001 | | மூலதனமாக ரூ. 60 000 இட்டு வணிகம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. |
| 05.02 | | 01 | ரூ. 35 000க்கு பொருள்கள் கொள்வனவு செய்யப்பட்டன. |
| 05.04 | 002 | | வங்கியில் ரூ. 40 000 கடனாகப் பெறப்பட்டது. |
| 05.08 | 003 | | காசுக்கு விற்பனை ரூ. 13 000 |
| 05.12 | | 02 | ஊழியர் சம்பளமாக ரூ. 5 000 செலுத்தப்பட்டது. |
| 05.15 | | 03 | ரூ. 12 000க்கு உபகரணங்கள் நிறுவன பாவனைக்காகக் கொள்வனவு செய்யப்பட்டன. |
| 05.20 | 004 | | பெற்ற வாடகை ரூ. 6 000 |
| 05.22 | 005 | | காசுக்கு விற்பனை ரூ. 18 000 |
| 05.25 | | 04 | வங்கிக் கடனில் ஒரு பகுதி மீளச் செலுத்தியது ரூ. 5 000 |
| 05.30 | 006 | | பெற்ற தரகுப் பணம் ரூ. 14 000 |

மேற்காட்டிய கொடுக்கல் வாங்கல்களைக் குமரன் தாபனத்தின் காசேடு, பேரேட்டுக் கணக்குகளில் பதிவு செய்க.

## கழிவுகள்

யாதேனும் கொடுக்கல் வாங்கலொன்று நிகழும்போது, அக்கொடுக்கல் வாங்கலின் தொகையிலிருந்து குறைத்துக்கொள்ளக்கூடிய தொகை ''கழிவு'' எனச் சுருக்கமாக அழைக்கலாம். கழிவினை வியாபாரக் கழிவு, காசுக்கழிவு எனப் பிரதானமாக இரண்டு முறைகளாக வகைப்படுத்த முடியும். இவ்விரு வகைக் கழிவுகளையும் பெற்ற கழிவு அல்லது கொடுத்த கழிவு என மேலும் வகைப்படுத்த முடியும்.



## வியாபாரக் கழிவுகள்

அநேகமான வணிகங்களில் பொருள்களின் பட்டியல் விலையிலிருந்து யாதேனுமொரு தொகையைக் குறைத்து விற்பனை செய்வதுண்டு. இவ்வாறு பட்டியல் விலையிலிருந்து குறைக்கப்படும் பெறுமானத்தினை வியாபாரக் கழிவு என அழைக்கலாம். இவ்வாறு குறைக்கப்படும் பெறுமானம் விற்பனையாளருக்குக் கொடுத்த வியாபாரக் கழிவாகவும் கொள்வனவாளருக்குப் பெற்ற வியாபாரக் கழிவாகவும் அமையும்.

வணிகத்தினால் பேணப்படும் கொள்வனவுக் கணக்கில் அல்லது விற்பனைக் கணக்கில் வியாபாரக் கழிவு கழித்த பின்னர் வரும் தேறிய பெறுமதியையே பதிவுசெய்ய வேண்டும். இதனால் வியாபாரக் கழிவானது கணக்குகளில் பதியப்படுவதில்லை.

உதாரணம் :-

கொள்வனவு செய்யும் பொருளின் குறித்த விலை = ரூ. 20 000

குறைப்பதற்குரிய வியாபாரக்கழிவு 10%

இதற்கமைய,

வியாபாரக் கழிவுத் தொகை $20\ 000 \times \frac{10}{100}$ = ரூ. 2 000

வியாபாரக் கழிவு கழித்த பின்னரான தேறிய பெறுமதி = ரூ. 18 000

கணக்குகளில் ரூ. 18 000 மட்டுமே பதியப்படும்.

வரவு கொள்வனவுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | காசு | | 18 000 | | | | |

வரவு காசுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | கொள்வனவு | | 18 000 |

## காசுக் கழிவுகள்

கடனுக்குப் பொருள்கள் விற்பனை செய்யும்போது கடன்பட்டோர் உருவாகுவர். இங்கு பெறப்பட வேண்டிய தொகையைக் கடன்பட்டோர் கணக்கில் பதிவு செய்ய வேண்டும். அவ்வாறே பொருள்கள் கடனுக்குக் கொள்வனவு செய்யும்போது கடன் கொடுத்தோர் உருவாகுவர். இவ்வாறு செலுத்த வேண்டிய பணம் கடன் கொடுத்தோர் கணக்கில் பதிய வேண்டும். இக்கடன் தொகைகளைத் தீர்க்கும்போது காசுக்கழிவு உருவாகின்றது.

வணிகக் கொடுக்கல் வாங்கல்களைக் கடனுக்கு மேற்கொள்ளும்போது விரைவாகக் கடனைத் தீர்ப்பனவு செய்யுமாறு கொள்வனவாளரை ஊக்குவிக்கும் நோக்குடன் குறிப்பிட்ட காலத்தினுள் கடனைத் தீர்த்தால் கடன் தொகையிலிருந்து ஒரு தொகை குறைக்கப்படும் என்ற நிபந்தனையை விற்பனைப் பட்டியல்களில் சேர்த்துக் கொள்ள முடியும். அவ்வாறு குறிப்பிட்ட காலத்தினுள் கடன் தீர்க்கப்படும்போது அக்கடன் தொகையிலிருந்து குறைத்துக் கொள்ளப்படும் தொகை காசுக்கழிவாகக் கருதப்படும்.

காசுக்கழிவு இரண்டு வகைப்படும்

- கொடுத்த காசுக் கழிவு
- பெற்ற காசுக் கழிவு

### கொடுத்த காசுக் கழிவு

*நிபந்தனையாக அனுமதிக்கப்பட்ட காலப்பகுதிக்குள் கடன்பட்டோரிடமிருந்து பணம் கிடைக்கும்போது வருமதியான கடன் தொகையிலிருந்து கழித்துக் கொள்ளப்படும் பெறுமானம் கொடுத்த கழிவாகும். வணிக நிறுவனத்தினைப் பொறுத்த வகையில் கொடுத்த கழிவு செலவினமொன்றாகக் கருதப்படும்.*

இதற்கமைய கடன்பட்டோரிடமிருந்து பணம் பெறப்படும்போது கொடுத்த காசுக் கழிவு அனுமதிக்கப்படுவதன் காரணமாக அக்கடன்பட்டோர் பெறுவனவுகளைக் காசேட்டில் பதியும் வேளையில் கொடுத்த காசுக்கழிவினையும் அவ்வேட்டில் பதிவது இலகுவானதாகும். ஆகையால், இதற்கெனக் காசேட்டின் வரவுப்பக்கத்தில் தனியான நிரலொன்றை ஏற்படுத்தி அதில் கொடுத்த கழிவு பதியப்படும்.

### பெற்ற காசுக் கழிவு

*நிபந்தனையாக அனுமதிக்கப்பட்ட காலப்பகுதியினுள் கடன் கொடுத்தோருக்குப் பணம் செலுத்தும்போது கொடுக்க வேண்டிய தொகையில் இருந்து கடன்கொடுத்தோர்களால் கழித்துக் கொள்ளப்படும் பெறுமானம் பெற்ற கழிவாகக் கருதப்படும். இது வணிகத் தினது வருமானமாகக் கருதப்படும்.*

இதற்கமைய கடன்கொடுத்தோருக்குப் பணம் செலுத்தும்போது பெற்ற கழிவு உருவாகும். கடன்கொடுத்தோருக்குக் கொடுத்த பணத்தைக் காசேட்டில் செலவில் பதியும் அதே வேளை பெற்ற காசுக் கழிவையும் அவ்வேட்டில் பதிவது இலகுவான தாகும். இதற்காக காசேட்டின் செலவுப் பக்கத்தில் தனியான நிரலொன்றை ஏற்படுத்தி அதில் பெற்ற கழிவு பதிவுசெய்யப்படும்.

காசேட்டிலுள்ள கழிவு நிரல்கள் ஞாபக நிரல்களாகவே கருதப்படும். மூல ஏட்டின் தொழிற்பாடுகள் மட்டுமே இதன் மூலம் நிறைவேற்றப்படுகின்றது. கழிவு நிரலானது கணக்கொன்றின் தொழிற்பாட்டினைக் கொண்டிருக்காமையினால் அந்நிரல்களில்

யாதேனும் பெறுமானம் ஒன்று பதிவுசெய்யப்படுவதனால் கொடுக்கல் வாங்கல் ஒன்றிற்காகப் பேணப்படவேண்டிய இரட்டை பதிவுகளில் ஒரு பதிவேனும் முழுமையடையாதிருக்கும். எனவே கழிவு நிரல்களில் பதிவு செய்யப்படும் கொடுக்கல் வாங்கலிற்காகப் பேரேட்டுக் கணக்குகளில் இரட்டைப் பதிவுகள் மேற்கொள்ளப்படல் வேண்டும்.

**காசுக் கழிவுகளைக் கணக்குகளில் பதிவு செய்தல்**

காசேட்டின் வரவுப் பக்கத்தில் காணப்படும் கொடுத்த கழிவு நிரலின் கூட்டுத்தொகை பேரேட்டில் திறக்கப்படும் கொடுத்த கழிவுக் கணக்கில் வரவில் பதியப்படும். கொடுத்தக் கழிவுக் கணக்கு ஒரு செலவினக் கணக்கு வகையாகக் கருதப்படுவதனால் ''செலவினம் அதிகரித்தல்''. எனும் தத்துவத்திற்கு இது பொருத்தமுடையதாக அமையும். செலவுப் பதிவு உரிய கடன்பட்டோர் கணக்குகளில் செலவில் பதிய வேண்டும். ''சொத்துக்கள் குறைதல் செலவு'' எனும் இரட்டைப்பதிவுத் தத்துவத்திற்கு அமைய அவ்வாறு பதிவு செய்யப்படும்

இதற்கமைய கொடுத்த காசுக் கழிவிற்குரிய இரட்டைப்பதிவு பின்வருமாறு அமையும்.

| | |
|---|---|
| கொடுத்த கழிவுக் கணக்கு | வரவு |
| கடன்பட்டோர் கணக்கு | செலவு |

காசேட்டின் செலவுப் பக்கத்தில் காணப்படும் பெற்ற கழிவு நிரலின் கூட்டுத் தொகை பேரேட்டில் திறக்கப்படும் பெற்ற கழிவுக் கணக்கின் செலவுப் பக்கத்தில் பதிவு செய்யப்படும். பெற்றக் கழிவுக் கணக்கானது வருமானக் கணக்கு வகையைச் சார்ந்ததாக இருப்பதனால் ''வருமானங்கள் அதிகரித்தல் செலவு'' எனும் தத்துவத் திற்கமையப் பதிவு செய்யப்படும். வரவுப் பதிவுகள் அந்தந்தக் கடன்கொடுத்தோர் கணக்குகளில் பதிவு செய்யப்படும். பொறுப்புக் குறைதல் வரவு எனும் இரட்டைப் பதிவுத் தத்துவத்திற்கமைய பதியப்படுவதனால் இவ்வாறு பதிவு மேற்கொள்ளப்படும்.

இதற்கமைய பெற்ற காசுக்கழிவிற்குரிய இரட்டைப் பதிவு பின்வருமாறு அமையும்.

| | |
|---|---|
| கடன் கொடுத்தோர் கணக்கு | வரவு |
| பெற்ற கழிவுக் கணக்கு | செலவு |

உதாரணம் :-

ரமேஸ் வணிகத்தில் 20XX.03.01திகதியில் பின்வரும் மீதிகள் காணப்பட்டன.

| கடன்பட்டோர் மீதிகள் | ரூ. |
|---|---|
| சித்தார்த்தன் | 40 000 |
| குமரன் | 30 000 |

கடன் கொடுத்தோர் மீதிகள்

| | |
|---|---|
| மல்லிகா | 45 000 |
| வினோத் | 35 000 |
| காசு மீதி | 50 000 |

மார்ச் மாதத்தில் பின்வரும் கொடுக்கல் வாங்கல்கள் இடம்பெற்றன.

03.05 சித்தார்த்தனிடமிருந்து பெற்ற பணம் ரூ. 12 500
வழங்கப்பட்ட கழிவு ரூ. 2 500

03.08 குமரனிடமிருந்து ரூ. 10 000 கடன் பெறுவனவின்போது அனுமதித்த கழிவு 5% நீக்கிக் காசு பெறப்பட்டது.

03.10 மல்லிகாவுக்குக் கொடுத்த பணம் ரூ. 12 600
பெறப்பட்ட கழிவு ரூ. 1 400

03.15 ரூ. 20 000 வினோத்திற்கு கடன் செலுத்தும் போது 5% கழிவு நீக்கி பணம் செலுத்தப்பட்டது.

மேலே தரப்பட்ட கொடுக்கல் வாங்கல்களைக் காசுப்புத்தகத்திலும் உரிய பேரேட்டுக் கணக்குகளிலும் பதிவு செய்து அவற்றைச் சமப்படுத்தும் முறை கீழே காட்டப்பட்டுள்ளது.

வரவு காசுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | கழிவு | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | கழிவு | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.01 | மீதி. கீ .கொ.வ | | | 50 000 | | | | | |
| 03.05 | சித்தார்த்தன் | | 2 500 | 12 500 | 20XX.03.10 | மல்லிகா | | 1 400 | 12 600 |
| 03.08 | குமரன் | | 500 | 9 500 | 03.15 | வினோத் | | 1 000 | 19 000 |
| | | | | | 03.31 | மீதி. கீ .கொ.செ | | | 40 400 |
| | | | 3 000 | 72 000 | | | | 2 400 | 72 000 |
| 04.01 | மீதி.கீ.கொ.வ | | | 40 400 | | | | | |

வரவு சித்தார்த்தன் (கடன்பட்டோர்) கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.01 | மீதி. கீ .கொ.வ | | 40 000 | 20XX.03.05 | காசு | | 12 500 |
| | | | | 03.05 | கொடுத்த கழிவு | | 2 500 |
| | | | | 03.31 | மீதி. கீ .கொ.செ | | 25 000 |
| | | | 40 000 | | | | 40 000 |
| 04.01 | மீதி. கீ .கொ.வ | | 25 000 | | | | |

வரவு                குமரன் (கடன்பட்டோர்) கணக்கு                செலவு

| திகதி | விபரம் | பே ப. | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.01 | மீதி. கீ .கொ.வ | | 30 000 | 20XX.03.08 | காசு | | 9 500 |
| | | | | 03.08 | கொடுத்த கழிவு | | 500 |
| | | | | 03.31 | மீதி. கீ .கொ.செ | | 20 000 |
| | | | 30 000 | | | | 30 000 |
| 04.01 | மீதி. கீ .கொ.வ | | 20 000 | | | | |

வரவு                மல்லிகா (கடன்கொடுத்தோர்) கணக்கு                செலவு

| திகதி | விபரம் | பே ப. | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.10 | காசு | | 12 600 | 20XX.03.01 | மீதி. கீ .கொ.வ | | 45 000 |
| 03.10 | பெற்ற கழிவு | | 1 400 | | | | |
| 03.31 | மீதி. கீ .கொ.செ | | 31 000 | | | | |
| | | | 45 000 | | | | 45 000 |
| | | | | 04.01 | மீதி. கீ .கொ.வ | | 31 000 |

வரவு                வினோத் (கடன்கொடுத்தோர்) கணக்கு                வரவு

| திகதி | விபரம் | பே ப. | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப. | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.15 | காசு | | 19 000 | 20XX.03.01 | மீதி. கீ .கொ.வ | | 35 000 |
| 03.15 | பெற்ற கழிவு | | 1 000 | | | | |
| 03.31 | மீதி. கீ .கொ.செ | | 15 000 | | | | |
| | | | 35 000 | | | | 35 000 |
| | | | | 04.01 | மீதி. கீ .கொ.வ | | 15 000 |

வரவு                கொடுத்த கழிவுக் கணக்கு                வரவு

| திகதி | விபரம் | பே ப. | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப. | காசு ரூ. . |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | கடன்பட்டோர் | | 3 000 | 20XX.03.31 | மீதி. கீ .கொ.செ | | 3 000 |
| | | | 3 000 | | | | 3 000 |
| 04.01 | மீதி. கீ .கொ.வ | | 3 000 | | | | |

வரவு                பெற்ற கழிவுக் கணக்கு                வரவு

| திகதி | விபரம் | பே ப. | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப. | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | மீதி. கீ .கொ.செ | | 2 400 | 20XX.03.31 | கடன்கொடுத்தோர் | | 2 400 |
| | | | 2 400 | | | | 2 400 |
| | | | | 04.01 | மீதி. கீ .கொ.வ | | 2 400 |

உதாரணம் :-

சிவசுந்தரத்தின் வணிகத்தின் 20XX-03-01 திகதி கீழ் காட்டப்படும் மீதிகள் காணப்பட்டன.

| | |
|---|---|
| கடன்பட்டோர் மீதி (வரவு) | ரூ. 40 000 |
| கடன் கொடுத்தோர் (செலவு) | ரூ. 50 000 |
| காசு மீதி (வரவு) | ரூ. 30 000 |

20XX.03.05 கடன்பட்டோரிடம் பெற்ற காசு ரூ.7600 அனுமதிக்கப்பட்ட கழிவுகள் ரூ.400.

20XX.03.08 கடன்பட்டோரது வருமதி ரூ. 10 000 இற்கு 5% கழிவு அனுமதிக்கப்பட்டு காசு பெறப்பட்டது.

20XX.03.10 கடன் கொடுத்தோருக்குக் கொடுத்த காசு ரூ.4700 பெற்ற கழிவு ரூ.300 ஆகும்

20XX.03.15 கடன் கொடுத்தோருக்குச் செலுத்த வேண்டிய ரூ.12000 சென்மதித் தொகை 10% கழிவு நீக்கிய பின் செலுத்தப்பட்டது.

மேற்காட்டிய கொடுக்கல் வாங்கல்களைக் காசேட்டிலும் உரிய பேரேட்டு கணக்கு களிலும் பதிந்து சமப்படுத்தும் முறையைப் பின்வருமாறு காட்டலாம்.

வரவு காசுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | கழிவு | காசு | திகதி | விபரம் | கழிவு | காசு |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.01 | மீதி.கொ.வந்தது | | 30 000 | 20XX.03.10 | கடன்கொடுத்தோர் | 300 | 4 700 |
| 03.05 | கடன்பட்டோர் | 400 | 7 600 | 03.15 | கடன்கொடுத்தோர் | 1 200 | 10 800 |
| 03.08 | கடன்பட்டோர் | 500 | 9 500 | | | | |
| | | | | 03.31 | பெ/கழிவு க/கு | | 31 600 |
| | | 900 | 47 100 | | | 1 500 | 47 100 |
| 04.01 | மீதி. கீ .கொ.வ | | 31 600 | | | | |

வரவு கடன்பட்டோர் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே இ | காசு ரூ. | திகதி | விபரம் | பே இ | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.01 | மீதி. கீ .கொ.வ | | 40 000 | 20XX.03.05 | காசு | | 7 600 |
| | | | | 03.05 | கொடுத்த கழிவு | | 400 |
| | | | | 03.08 | காசு | | 9 500 |
| | | | | 03.08 | கொடுத்த கழிவு | | 500 |
| | | | | 03.31 | மீதி. கீ .கொ.செ | | 22 000 |
| | | | 40 000 | | | | 40 000 |
| 04.01 | மீதி. கீ .கொ.வ | | 22 000 | | | | |

வரவு **கடன் கொடுத்தோர் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | பே இ | காசு ரூ. | திகதி | விபரம் | பே இ | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.10 | காசு | | 4 700 | 20XX.03.01 | மீதி. கீ .கொ.வ | | 50 000 |
| 03.10 | பெற்ற கழிவுகள் | | 300 | | | | |
| 03.15 | காசு | | 10 800 | | | | |
| 03.15 | பெற்ற கழிவுகள் | | 1 200 | | | | |
| 03.31 | மீதி. கீ .கொ.செ | | 33 000 | | | | |
| | | | 50 000 | | | | 50 000 |
| | | | | 04.01 | மீதி. கீ .கொ.வ | | 33 000 |

வரவு **கொடுத்த கழிவு கணக்கு** செலவு

| திகதி | விபரம் | பே இ | காசு ரூ. | திகதி | விபரம் | பே இ | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | கடன் பட்டோர் | | 900 | 20XX.03.31 | மீதி. கீ .கொ.செ | | 900 |
| | | | 900 | | | | 900 |
| 04.01 | மீதி. கீ .கொ.வ | | 900 | | | | |

வரவு **பெற்ற கழிவுக் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | பே இ | காசு ரூ. . | திகதி | விபரம் | பே இ | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | மீதி. கீ .கொ.செ | | 1 500 | 20XX.03.31 | கடன் கொடுத்தோர் | | 1 500 |
| | | | 1 500 | | | | 1 500 |
| | | | | 04.01 | மீதி. கீ .கொ.வ | | 1 500 |

கடன்பட்டோரிடமிருந்து காசு மட்டுமன்றி காசோலையும் பெறப்படலாம். அவ்வாறே உடன்காசுக்கு விற்பனை நடைபெறும்போதும் காசோலை கிடைக்கக்கூடும். அவ்வாறு பெறப்படும் காசோலைகள் அன்றைய தினமே வங்கியில் வைப்பிலிடப்படாவிடின் அவற்றைக் காசுப் பெறுவனவுபோன்று கருதிக்கொள்ளமுடியும். எனவே, காசோலைப் பெறுவனவுகளையும் காசுப் பெறுவனவுகளைப்போன்று காசேட்டில் பதிவு செய்யப்படும். கடன்பட்டோரிடமிருந்து காசோலைகள் பெறும்போது கொடுத்த கழிவுகள் ஏற்படக்கூடும். அவ்வாறான கழிவுகளும் காசேட்டில் வரவுப் பக்கத்தில் கொடுத்த கழிவு நிரலில் பதிவு செய்ய வேண்டும்.

உதாரணம் :-

சந்திரன் வணிகத்தில் 20XX-03-01 திகதியில் பின்வரும் மீதிகள் காணப்பட்டன.

| | | | ரூ. |
|---|---|---|---|
| மூலதனம் | | | 100 000 |
| கடன் கொடுத்தோர் | சிவன் | | 25 000 |
| | அன்வர் | | 15 000 |
| காசு | | | 80 000 |
| கடன் பட்டோர் | இமெல்டா | | 40 000 |
| | சுரேஸ் | | 20 000 |

மார்ச் மாதத்தில் நடைபெற்ற பணக் கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு

| திகதி | பற்றுச் சீட்டு இல | கைச் சாத்து இல | நிகழ்வுகள் |
|---|---|---|---|
| 20XX.03.02 | 65 | | இமெல்டாவிடமிருந்து ரூ. 8 000 கிடைக்கப் பெற்றது. |
| 03.05 | | 40 | காசுக் கொள்வனவு ரூ. 35 000மாகும். |
| 03.08 | | 41 | சிவனுக்கு ரூ. 6 000 செலுத்தப்பட்டது. |
| 03.10 | 66 | | சுரேஸ் (கடன்பட்டோர்) என்பவரிடமிருந்து ரூ. 12 000 ஆனது பெறப்படும்போது 5% கழிவு வழங்கப்பட்டது. |
| 03.12 | | 42 | அன்வருக்குரிய ரூ. 10 000 கடன் கொடுப்பனவு 8% கழிவு நீக்கிச் செலுத்தப்பட்டது. |
| 03.15 | 67 | | விற்பனை மூலம் ரூ. 16000 பெறுமதியான காசோலை கிடைக்கப்பெற்றது. |
| 03.18 | 68 | | இமெல்டாவிடமிருந்து கிடைக்கப்பெற்ற காசு ரூ. 6 650 ஆக இருந்ததுடன் அனுமதிக்கப்பட்ட கழிவு ரூ. 350 ஆகும் |
| 03.20 | | 43 | சிவனுக்கு ரூ. 8 000 கடன் செலுத்தப்பட்டபோது பெறப் பட்ட கழிவு ரூ. 400 ஆகும். |
| 03.24 | 69 | | விற்பனைகள் மூலம் காசாக ரூ. 6 000 மும் காசோலை யாக ரூ. 7 000 கிடைக்கப்பெற்றது. |
| 03.29 | 70 | | மேலதிக மூலதனமாக சந்திரன் வணிகத்திற்கு ரூ. 20 000 ஈடுப்படுத்தினார். |

மேலே உதாரணத்தில் தரப்பட்டுள்ள கொடுக்கல் வாங்கல்களைக் கழிவு நிரல்கள் உள்ளடங்கலாக காசேட்டிலும் பேரேட்டுக் கணக்குகளிலும் பதியப்படும் முறை கீழே காட்டப்பட்டுள்ளது.

வரவு **காசுக் கணக்கு** செலவு

| திகதி | பற்றுச் சீட்டு இல. | விபரம் | கழிவு | காசு ரூ. | திகதி | பற்றுச் சீட்டு இல. | விபரம் | கழிவு | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.01 | | மீதி. கீ .கொ.வ | | 80 000 | 20XX.03.05 | 40 | கொள்வனவு | | 35 000 |
| 03.02 | 65 | இமெல்டா | | 8 000 | 03.08 | 41 | சிவன் | | 6 000 |
| 03.10 | 66 | சுரேஸ் | 600 | 11 400 | 03.12 | 42 | அன்வர் | 800 | 9 200 |
| 03.15 | 67 | விற்பனை | | 16 000 | 03.20 | 43 | சிவன் | 400 | 7 600 |
| 03.18 | 68 | இமெல்டா | 350 | 6 650 | 03.31 | | மீ.கீ.கொ.செ | | 97 250 |
| 03.24 | 69 | விற்பனை | | 6 000 | | | | | |
| | | விற்பனை(காசோ) | | 7 000 | | | | | |
| 03.29 | 70 | மூலதனம் | | 20 000 | | | | | |
| | | | 950 | 155 050 | | | | 1200 | 155 050 |
| 04.01 | | மீதி. கீ .கொ.வ | | 97 250 | | | | | |

வரவு **மூலதனக் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.03.01 | மீ.கீ கொ.வ | | 100 000 |
| | | | | 03.29 | காசு | | 20 000 |

வரவு **கொடுத்த கழிவுக் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. . |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | கடன்பட்டோர் | | 950 | | | | |

வரவு **இமெல்டா (கடன்பட்டோர் ) கணக்கு** செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.01 | மீ.கீ கொ.வ | | 40 000 | 20XX.03.02 | காசு | | 8 000 |
| | | | | 03.18 | காசு | | 6 650 |
| | | | | 03.18 | கொடுத்த கழிவு | | 350 |

வரவு **சுரேஸ் (கடன்பட்டோர்) கணக்கு** செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.01 | மீ.கீ கொ.வ | | 20 000 | 20XX.03.10 | காசு | | 11 400 |
| | | | | 03.10 | கொடுத்த கழிவு | | 600 |

வரவு பெற்றகழிவுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.03.31 | கடன் கொடுத்தோர் | | 1 200 |

வரவு கொள்வனவுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.05 | காசு | | 35 000 | | | | |

வரவு சிவன் (கடன் கொடுத்தோர்) கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.08 | காசு | | 6 000 | 20XX.03.01 | மீ.கீ கொ.வ | | 25 000 |
| 03.20 | காசு | | 7 600 | | | | |
| 03.20 | பெற்ற கழிவு | | 400 | | | | |

வரவு அன்வர்(கடன்கொடுத்தோர்) கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.12 | காசு | | 9 200 | 20XX.03.01 | மீ.கீ கொ.வ | | 15 000 |
| 03.12 | பெற்ற கழிவு | | 800 | | | | |

வரவு விற்பனைக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | காசு ரூ. | திகதி | விபரம் | பே ப | காசு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.03.15 | காசு | | 16 000 |
| | | | | 03.24 | காசு | | 13 000 |



## செயற்பாடு 03

சியானா வணிகத்தின் 20XX.07.01 திகதியில் காணப்பட்ட மீதிகள் கீழே காட்டப்பட்டுள்ளது.

| | | ரூ. |
|---|---|---|
| காசு | | 70 000 |
| கடன்பட்டோர் | சுபா | 22 000 |
| | உஷா | 28 000 |
| | | |
| மூலதனம் | | 75 000 |
| கடன் கொடுத்தோர் | செல்வம் | 25 000 |
| | கோமதி | 20 000 |

ஜுலை மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் கீழே காட்டப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| 20XX.07.03 | உடன் காசுக்குக் கொள்வனவு ரூ. 28 000 |
| 07.08 | சுபாவிடமிருந்து பெற்ற காசு ரூ. 7 000 |
| 07.12 | உடன் காசுக்கு விற்பனைகள் ரூ. 12 000. |
| 07.16 | கோமதிக்கு சென்மதியான ரூ. 8 000 10% கழிவு நீக்கியபின் செலுத்தப்பட்டது. |
| 07.18 | கடன்பட்டோரான உஷாவிடமிருந்து வருமதியான ரூ.10 000 5% கழிவு நீக்கியபின் பெறப்பட்டது. |
| 07.20 | செலுத்திய வாடகை ரூ. 4 000 |
| 07.25 | கோமதிக்கு ரூ. 8 000 கடன் மீளச் செலுத்தும்போது கழிவாக ரூ. 500 குறைக்கப்பட்டது. |
| 07.26 | உஷாவிடமிருந்து பெற்ற காசோலை ரூ. 7 200 கொடுத்த கழிவு ரூ. 800 ஆகும். |
| 07.28 | கோமதிக்குச் செலுத்தவேண்டிய ரூ. 2 000 5% கழிவு நீக்கிய பின் செலுத்தப்பட்டது. |

பின்வருவனவற்றைக் காண்க.

1. கழிவு நிரல்களுடன் கூடிய காசேட்டினைத் தயாரித்து 20XX-07-31 திகதியன்று சமப்படுத்துதல்.
2. காசேட்டில் பதிவு செய்த கொடுக்கல் வாங்கல்களைப் பேரேட்டுக் கணக்குகளுக்கு மாற்றுதல்.

## 8.2 சில்லறைக் காசேடு

வணிகமொன்றில் இடம்பெறும் கொடுப்பனவுகளில் சில கொடுப்பனவுகள் சிறிய பெறுமானங்களைக் கொண்டவையாகவும் மீண்டும் மீண்டும் நிகழும் கொடுப்பனவு களாகவும் காணப்பட முடியும்.

உதாரணம் :-

சுத்திகரிப்பிற்காக ரூ. 150 செலுத்துதல்
தபாற்கட்டணமாக ரூ. 60 செலுத்துதல்
போக்குவரத்துச் செலவாக ரூ. 70 செலுத்துதல்

இதற்கமைய தபாற் கட்டணம், சுத்திகரிப்புச் செலவுகள், பொழுதுபோக்குச் செலவுகள், எழுதுகருவிச் செலவுகள் என்பன அன்றாடம் செலுத்தப்படும் சிறிய பெறுமானங்களைக் கொண்ட சில்லறைக் கொடுப்பனவுகளுக்கான உதாரணங்களாகும்.

வணிகமொன்றில் தொடர்ச்சியாக இடம்பெறும் சிறிய பெறுமானங்களுடன்கூடிய காசுக் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்யும் மூல ஏடு **சில்லறைக் காசேடு** என அழைக்கப்படும்.

அதன் பணியினை நிறைவேற்றுவதற்காகப் பிரதான காசாளரினால் சில்லறைக் காசாளர் நியமிக்கப்படுவார். அனைத்துச் சில்லறைக் காசுக் கொடுப்பனவுகளுக்குமாகக் கைச்சாத்துக்கள் தயாரிக்கப்படல் வேண்டும். இவை **சில்லறைக் காசுக் கைச்சாத்து** எனப்படும். இவை சில்லறைக் காசேட்டில் கொடுப்பனவுகளைப் பதிவு செய்வதற்கான மூல ஆவணமொன்றாகப் பயன்படுத்தப்படும்.

## சில்லறைக் காசு வசக்கட்டு/ முற்பணமுறைச் சில்லறைக் காசேடு

சில்லறைக் காசுக் கொடுப்பனவுகளைக் கட்டுப்பாடுகளுடன் மேற்கொள்வதற்காகப் பிரதான காசாளரினால் நியமிக்கப்படும் சில்லறைக் காசாளருக்கு ஏதேனும் குறித்த பணத் தொகையொன்று சிறு கொடுப்பனவுகளை மேற்கொள்வதற்கென வழங்கப்படும். இதனைச் ''**சில்லறைக் காசு வசக்கட்டு**'' என்று அழைப்பர். இச்சில்லறைக் காசு வசக் கட்டைப் பயன்படுத்திச் சிறிய காசுக் கொடுப்பனவுகளை மேற்கொள்வதும்,சில்ல றைக் காசேட்டைப் பராமரிப்பதும் சில்லறைக் காசாளரின் பொறுப்பாக இருக்கும்.

## சில்லறைக் காசுச் செலவுகளை மீள் நிரப்பல்

தன்னிடமுள்ள முற்பணத்தொகை தீர்ந்து போவதற்கு முன்பாகச் சில்லறைக் காசாளர் பிரதான காசாளரிடமிருந்து மீளவும் காசினைப் பெற்றுக் கொள்ளல் வேண்டும். இதற்காக குறித்த காலப்பகுதியில் செலவிடப்பட்ட தொகைக்குச் சமமான தொகையினை மீளவும் பிரதான காசாளர் சில்லறைக் காசாளருக்கு வழங்குதல் ''**வசக்கட்டு மீள் நிரப்பல்**'' எனப்படும்.

உதாரணம் :-

நயனா வணிகத்தின் சில்லறைக் காசு வசக்கட்டுத் தொகை ரூ. 2 000 ஆகும். கிடைக்கப்பெற்ற முற்பணக் காசின் மூலம் மேற்கொள்ளப்பட்ட சில்லறைக் காசுக் கொடுப்பனவுகள் பின்வருமாறு.

| | ரூ. |
|---|---|
| எழுது கருவி | 250 |
| சுத்திகரிப்புச் செலவுகள் | 600 |

| | |
|---|---|
| உபசரணைச் செலவுகள் | 400 |
| போக்குவரத்துச் செலவுகள் | 350 |
| | 1 600 |

இதற்கமைய ரூ. 1 600 சில்லறைச் செலவினங்களுக்குச் செலவிடப்பட்டுள்ளது. சில்லறைக் காசாளரினால் மீளவும் பணம் கேட்கப்படும்போது சில்லறைக் காசாளரால் செலவிடப்பட்ட ரூ. 1 600 மட்டுமே அவருக்கு வழங்கப்படும். இதனைச் சில்லறைக் காசுக் கட்டுநிதி (வசக்கட்டு) மீள்நிரப்பல் எனப்படும்.

| அப்பொழுது | ரூ. |
|---|---|
| மீதமாகவுள்ள பணம் (சில்லறைக் காசு மீதி) | 400 |
| சில்லறைச் செலவுகள் மீள்நிரப்பல் | 1 600 |
| மொத்த காசுக் கட்டுநிதி/வசக்கட்டு | 2 000 |

சில்லறைக் காசுக் கொடுப்பனவுகளை மீள் நிரப்புவதற்காகச் சில்லறைக் காசாளரால், இதுவரையில் மேற்கொள்ளப்பட்ட அனைத்துச் சில்லறைக் காசுக் கொடுப்பனவு களுக்குரிய கைச்சாத்துக்களை உள்ளடக்கும் வகையில் கைச்சாத்தொன்றைத் தயாரித்துப் பிரதான காசாளரிடம் சமர்ப்பித்தல் வேண்டும்.



## செயற்பாடு 04

வரையறுக்கப்பட்ட சரஸ்வதி கம்பனியினால் சில்லறைச் செலவுக் கொடுப் பனவுகளுக்காக வசக்கட்டு முறையிலான சில்லறைக் காசேடொன்று பேணப்படு கின்றது. இக்கம்பனியின் சில்லறைக் காசுக் கொடுக்கல் வாங்கல்களுடன் தொடர்புடைய தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

20xx ஜனவரி 01 ல் சில்லறைக் காசாளரிடம் மீதமாவுள்ள பணப் பெறுமதி ரூ. 330 ஆக இருந்தது. ஜனவரி மாதத்தில் சில்லறைச் செலவுகளுக்காக ரூ. 1 670 செலவிடப்பட்டிருந்தது எனச் சில்லறைக் கைச்சாத்தில் பதிவு செய்யப்பட்டிருந்தது.

மேற்காட்டிய தகவல்களிலிருந்து பின்வரும் வினாக்களுக்கு விடையளிக்கவும்.

1. சில்லறைக் காசு வசக்கட்டின்/கட்டு நிதியின் பெறுமானம் யாது?
2. 20xx.01.31 ஆம் திகதியில் பிரதான காசாளரால் மீள் நிரப்பப்பட வேண்டிய பணத்தொகை யாது?

3. 20xx.02.01 ஆம் திகதியிலிருந்து சில்லறைக் காசு வசக்கட்டு நிதியை ரூ. 500 இனால் அதிகரிப்பதற்குத் தீர்மானிக்கப்பட்டிருப்பின் மீள் நிரப் பப்பட வேண்டிய பெறுமானம் யாது?

4. 20xx.03.01 ஆம் திகதியன்று சில்லறைக் காசேட்டு மீதியானது ரூ.729 ஆகக் காணப்படுமாயின் அன்றைய தினத்தில் மீள் நிரப்பப்பட வேண்டிய பெறுமானம் யாது?

## சில்லறைக் காசேட்டினைத் தயாரித்தல்

சில்லறைக் காசுக் கொடுப்பனவுகளைப் பேரேடுகளுக்கு மாற்றுவதனை இலகு படுத்துமுகமாக ஒவ்வொரு கொடுப்பனவு வகைகள் சார்பாகவும் பகுப்பாய்வு நிரல்களுடன்கூடியதாகச் சில்லறைக் காசேடு தயாரிக்கப்படல் வேண்டும். ஒவ்வொரு வகைக் கொடுக்கல் வாங்கல்களினதும் கூட்டுத்தொகைகளைக் குறிப்பிட்ட பேரேட்டுக் கணக்குகளுக்கு மாற்றும் வகையில் ஒத்த வகையினைக் கொண்ட சில்லறைச் செலவுகளுக்காகத் தனித்தனியாக நிரல்கள் ஏற்படுத்தப்படும். இந்நிரல்கள் பகுப்பாய்வு நிரல்கள் என அழைக்கப்படும்.

உதாரணம் :-

முத்திரைக் கட்டணம், தபால் பதிவுக் கட்டணம், கடித உறைகளுக்கான செலவுகள் என்பனவற்றை ஒத்த வகையினைக் கொண்ட செலவுகளாக இனங்கண்டு அவற்றுக்காக **அஞ்சற் செலவுகள்** எனும் பெயரிலான நிரலில் பதிவுசெய்யமுடியும்.

அவ்வாறு பகுப்பாய்வு நிரல்களின் கீழ் உள்ளடக்க முடியாத பல்வேறு வகையிலான சிறு பெறுமானங்களைக் கொண்ட கொடுப்பனவுகளைப் பதிவு செய்வதற்காக அவற்றினை **நானாவித/ஏனைய செலவுகள்** எனும் பகுப்பாய்வு நிரலின் கீழ் பதிவு செய்யமுடியும். ஏனைய தனித்தனியாக குறித்த கணக்குகளில் பதிவு செய்யப்பட வேண்டிய பெறுமானங்கள் பேரேடு எனும் நிரலில் பதிவு செய்யப்படும்.

உதாரணம் :-

கடன் கொடுத்தோருக்கான கொடுப்பனவுகள், சிறு பெறுமானங்களுடன் கூடிய சொத்துக்களைக் கொள்வனவு செய்தல் என்பவற்றைக் குறிப்பிடலாம்.

சில்லறைக் காசேடு

| பெறு வனவுகள் ரூ | பே ப | திகதி | விபரம் | கை சா இ. | தொகை | பகுப்பாய்வு நிரல்கள் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | எழுது கருவி | அஞ்சல் | போக்கு வரத்துச் செலவுகள் | நானா வித செலவுகள் | ஏனைய பேரேட்டுக் கணக்கு |
| | | | | | | | | | | |

காசேட்டைப் போன்றே சில்லறைக் காசேடும் **இரட்டைத் தொழிற்பாட்டை** நிறைவேற்றுகின்றது. இதற்கமைய மூல ஏடுகளில் நிறைவேற்றப்படும் தொழிற்பாடுகளும் பேரேட்டுக் கணக்கொன்றின் மூலம் நிறைவேற்றப்படும் தொழிற்பாடுகளும் சில்லறைக் காசேட்டின் மூலம் நிறைவேற்றப்படுகின்றன.

- சில்லறைக் காசு வசக்கட்டு முற்பணப் பெறுவனவுகளும் சில்லறைச் செலவுகளுக்கான கொடுப்பனவுகளும் முதன் முறையாக சில்லறைக் காசேட்டில் பதிவு செய்யப்படுவதனால் மூல ஏடொன்றின் தொழிற்பாட்டினைச் சில்லறைக் காசேடு நிறைவேற்றுகின்றது.

- சில்லறைக் காசேட்டில் வரவு, செலவு என இரு பக்கங்கள் இருப்பதனால் இரட்டைப் பதிவுத் தத்துவத்திற்கமைய (சொத்துக் கணக்கு தொடர்பான விதி) பதிவு செய்தல் இடம்பெறும். எனவே இதனூடாக கணக்கொன்றின் தொழிற்பாட்டையும் சில்லறைக் காசேடு நிறைவேற்றுகின்றது.



**சில்லறைக் காசேட்டில் பதிவு செய்தல் தொடர்பாகப் பின்வருமாறு இரட்டைப் பதிவுகள் மேற்கொள்ளப்படும்.**

சில்லறை காசு வசக்கட்டு முற்பணம் பெறுதல்.

| | |
|---|---|
| சில்லறைக் காசேடு | வரவு |
| காசுக் கணக்கு | செலவு |

சில்லறைக் காசேட்டில் செலவு வைக்கப்பட்டுள்ள கொடுப்பனவுகளுக்குரிய பதிவுகள் உரிய பேரேட்டுக் கணக்குகளில் வரவு வைக்கப்படல் வேண்டும். இங்கு ஒவ்வொரு பகுப்பாய்வு நிரல்களினதும் கூட்டுத்தொகைகள் குறிப்பிட்ட பேரேட்டுக் கணக்குகளில் வரவு வைக்கப்படல் வேண்டும்.

இதற்கமைய பகுப்பாய்வு நிரல்களது கூட்டுத்தொகைகளுக்குரிய இரட்டைப் பதிவானது பின்வருமாறு அமையும்.

| | |
|---|---|
| குறித்த செலவுக் கணக்குகள் | வரவு |
| சில்லறைக் காசேடு | செலவு |

பேரேட்டுக் கணக்கு நிரலில் குறிப்பிடப்பட்ட பெறுமானங்கள் தனித்தனியாகக் குறித்த ஒவ்வொரு பேரேட்டுக் கணக்குகளிலும் வரவு வைக்கப்படல் வேண்டும்.

குறித்த கால இறுதியில் சில்லறைக் காசேட்டைச் சமப்படுத்தும்போது அதன் வரவுப் பக்கக் கூட்டுத்தொகையை செலவுப் பக்கக் கூட்டுத்தொகை நிரலில் பதிவு செய்து அதன் வேறுபாட்டை மீதியொன்றாக முன்கொண்டுவருதல் வேண்டும்.

உதாரணம் :-

சில்மியா வணிகத்தின் 20XX மார்ச் மாதத்தில் இடம் பெற்ற சில்லறைக் காசுக் கொடுப்பனவுகளுக்குரிய தகவல்கள் பின்வருமாறு.

சில்லறைக் காசுக்கட்டுநிதி ரூ. 2 000 ஆக இருந்ததுடன் 20XX.03.01 ஆம் திகதியன்றே அத்தொகை கிடைக்கப்பெற்றது.

| திகதி | கைச்சாத்து. இல. | விபரம் | |
|---|---|---|---|
| | | | ரூ. |
| 20XX.03.04 | 01 | தபாற் கட்டணம் | 120 |
| 03.05 | 02 | போக்குவரத்துச் செலவுகள் | 160 |
| 03.08 | 03 | உபசரணைச் செலவுகள் | 260 |
| 03.10 | 04 | முத்திரைக் கட்டணம் | 140 |
| 03.15 | 05 | போக்குவரத்துச் செலவுகள் | 60 |
| 03.18 | 06 | விஜயன் | 200 |
| 03.22 | 07 | முச்சக்கர வண்டிக் கட்டணம் | 240 |
| 03.25 | 08 | உட்சுமை கூலி | 200 |
| 03.26 | 09 | உபசரணைச் செலவுகள் | 180 |
| 03.28 | 10 | பேனா,பென்சில் | 150 |
| 03.30 | 11 | சுத்திகரிப்புச் செலவுகள் | 200 |
| 04.01 | | செலவுகள் மீள் நிரப்பட்டன | |

அஞ்சல் செலவு, பிரயாணச் செலவுகள்,உபசரணைச் செலவுகள் நானாவிதச் செலவுகள், ஏனைய பேரேட்டுக் கணக்குகள் என்னும் பகுப்பாய்வு நிரல்களுடன் கூடிய சில்லறைக் காசேடு தயாரிக்கப்பட்ட முறையும் பேரேட்டுக் கணக்குகளிற்கு மாற்றப்பட்ட முறையும் கீழே தரப்படுகின்றன.

வரவு சில்லறைக் காசேடு செலவு

| | | | | | | பகுப்பாய்வு நிரல் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பெறுவனவு ரூ. | பே இ | திகதி | விபரம் | கை இ. | மொத்தம் ரூ | அஞ்சல் செலவு ரூ. | பிரயாணச் செலவு ரூ | உபசரணைச் செலவு ரூ | நானாவித செலவு ரூ | பேரேடு கணக்கு | பே ப |
| 2 000 | | 20XX.03.01 | காசு | | | | | | | | |
| | | 03.04 | தபாற் கட்டணம் | 1 | 120 | 120 | | | | | |
| | | 03.05 | போக்குவரத்துச் செலவு | 2 | 160 | | 160 | | | | |
| | | 03.08 | உபசரணைச் செலவு | 3 | 260 | | | 260 | | | |
| | | 03.10 | முத்திரைக் கட்டணம் | 4 | 140 | 140 | | | | | |
| | | 03.15 | போக்குவரத்துச் செலவு | 5 | 60 | | 60 | | | | |
| | | 03.18 | விஜயன் | 6 | 200 | | | | | 200 | 12 |
| | | 03.22 | முச்சக்கரவண்டி | 7 | 240 | | 240 | | | | |
| | | 03.25 | உட்சுமை கூலி | 8 | 200 | | | | | 200 | 13 |
| | | 03.26 | உபசரணைச் செலவு | 9 | 180 | | | 180 | | | |
| | | 03.28 | பேனா, பென்சில் | 10 | 150 | | | | 150 | | |
| | | 03.30 | சுத்திகரிப்புச் செலவு | 11 | 200 | | | | 200 | | |
| | | | | | 1 910 | 260 | 460 | 440 | 350 | 400 | |
| | | 03.31 | மீ.கீ.கொ.செ | | 90 | பே.மா. | பே.மா.. | பே.மா.. | பே.மா. | | |
| 2 000 | | | | | 2 000 | | | | | | |
| 90 | | 04.01 | மீ.கீ.கொ.வ | | | | | | | | |
| 1 910 | | 04.01 | காசு | | | | | | | | |

வரவு காசுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | கை இ | தொகை ரூ | திகதி | விபரம் | கை இ | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.03.01 | சில்லறைக் காசு | 01 | 2 000 |
| | | | | 04.01 | சில்லறைக் காசு | 01 | 1 910 |

வரவு அஞ்சற் செலவு கணக்கு செலவு

| திகதி | விபரம் | கை இ | தொகை ரூ | திகதி | விபரம் | கை இ | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | சில்லறைக் காசு | 01 | 260 | | | | |

வரவு பிரயாணச் செலவுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | கை இ | தொகை ரூ | திகதி | விபரம் | கை இ | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | சில்லறைக் காசு | 01 | 460 | | | | |

வரவு உபசரணைச் செலவுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | கை இ | தொகை ரூ | திகதி | விபரம் | கை இ | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | சில்லறைக் காசு | 01 | 440 | | | | |

வரவு நானாவிதச் செலவுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | கை இ | தொகை ரூ | திகதி | விபரம் | கை இ | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | சில்லறைக் காசு | 01 | 350 | | | | |

வரவு விஜயன் கணக்கு செலவு

| திகதி | விபரம் | கை இ | தொகை ரூ | திகதி | விபரம் | கை இ | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | சில்லறைக் காசு | 01 | 200 | | | | |

வரவு உட்சுமை கூலி செலவு

| திகதி | விபரம் | கை இ | தொகை ரூ | திகதி | விபரம் | கை இ | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.03.31 | சில்லறைக் காசு | 01 | 200 | | | | |

## செயற்பாடு 05

தனுஸ்கா வணிகத்தின் தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

- சில்லறைக்காசுக் கட்டுநிதி ரூ. 3 000
- 20XX ஜனவரி மாதத்தின் சில்லறைக் காசுக் கொடுப்பனவுகளின் கூட்டுத் தொகை ரூ. 2 400
- 20XX பெப்ரவரி 01 ஆம் திகதியும் 20XX மார்ச் 01ஆம் திகதிகளில் சில்லறைச் செலவுகள் மீள் நிரப்பல் செய்யப்பட்டன.

20XX பெப்ரவரி மாதத்தின் சில்லறைக் காசுக் கொடுப்பனவுகள் கீழே தரப்பட்டுள்ளன.

| திகதி | விபரம் | ரூ |
|---|---|---|
| 20XX.02.03 | எழுது கருவிக் கொள்வனவு | 60 |
| 20XX.02.05 | போக்குவரத்துச் செலவு | 125 |
| 20XX.02.08 | இரு பேனாக்கள் கொள்வனவு | 40 |
| 20XX.02.12 | முச்சக்கர வண்டிக் கொள்வனவு | 300 |
| 20XX.02.15 | சவர்க்காரக் கட்டிகள் கொள்வனவு | 60 |
| 20XX.02.18 | ஹாப்பிக் (carpic) வாங்கியது | 250 |
| 20XX.02.23 | சுத்திகரிப்புச் செலவுகள் | 150 |
| 20XX.02.24 | உபசரணைச் செலவுகள் | 350 |
| 20XX.02.25 | குளிர்பானச் செலவுகள் | 220 |
| 20XX.02.26 | போக்குவரத்துக் கட்டணம் | 170 |
| 20XX.02.27 | அனுவிற்குக் கொடுத்தது | 500 |

01. செலவுகளின் வகைகள் நான்கு தலைப்புகளுக்குள் வரையறுக்கப்படக்கூடியவாறு வசக்கட்டு முறையிலான சில்லறைக் காசேட்டினைத் தயாரித்து 20XX-02- 28 ஆந் திகதியில் சமப்படுத்தவும்.

02. பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

# 9 வங்கிக் கணக்கும் வங்கிக் கணக்கிணக்கக் கூற்றும்




இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.

9.1 வங்கிக் கணக்கு

* வங்கிக் கணக்கில் காசு வைப்பிலிடுவதைப் பதிவு செய்தல்
* வங்கிக் கணக்கில் காசோலைகள் வைப்பிலிடுவதைப் பதிவு செய்தல்
* கொடுப்பனவுகளுக்காகக் காசோலைகள் வழங்கல்
* காசோலைகள் மறுக்கப்படுதல்
* வங்கி மேலதிகப் பற்று

9.2 வங்கிக் கணக்கிணக்கக் கூற்று

* வங்கிக் கூற்று
* வணிகமொன்றின் வங்கிக் கூற்று மீதியும் காசேட்டு வங்கிக் கணக்கு மீதியும் வேறுபடுவதற்கான காரணங்கள்
* வங்கிக் கணக்கு மீதியைச் சீராக்குதல்
* வங்கிக் கணக்கிணக்கக் கூற்றினைத் தயாரித்தல்

## 9.1 வங்கிக் கணக்கு

வணிகத்தின் கொடுக்கல் வாங்கல்களை இலகுவாகவும் பாதுகாப்புடனும் மேற்கொள்வதற்காக வங்கியில் நடைமுறைக் கணக்கொன்றை ஆரம்பித்து அக்கணக்கினூடாகக் கொடுக்கல் வாங்கல்கள் செய்வதில் அநேக வணிகர்கள் அதிக அக்கறை கொண்டுள்ளனர். எனவே, காசேட்டைப் போன்றே வங்கி நடைமுறைக் கணக்கும் வணிகத்தின் சொத்துக்கணக்காகக் கருதப்படும். வங்கிக் கணக்கினூடாக மேற்கொள்ளும் கொடுக்கல் வாங்கல்கள் சொத்துக் கணக்குகளுக்குரிய இரட்டைப் பதிவுத் தத்துவத்திற்கமையப் பதிவு செய்யப்படுகின்றன.

வங்கி நடைமுறைக் கணக்கினூடாக மேற்கொள்ளும் கொடுக்கல் வாங்கல்கள் வணிகத்தின் புத்தகங்களில் பதிவு செய்யும் முறையினை அறிந்து கொள்வோம்.

### 1. வங்கிக் கணக்கில் காசு வைப்பிலிடுவதைப் பதிவுசெய்தல்.

நடைமுறைக் கணக்கொன்றை ஆரம்பிப்பதற்குக் குறிப்பிட்ட பணத் தொகையை வங்கியில் வைப்பிலிடுதல் வேண்டும். இதற்கு மேலதிகமாக வணிகத்தினது காசுப் பெறுவனவுகளும் வங்கிக் கணக்கில் வைப்பிலிடப்படும். நடைமுறைக் கணக்கில் பணத்தை வைப்பிலிடும்போது வங்கி நடைமுறைக் கணக்கின் மீதியானது அதிகரிப்பதுடன் வணிகத்தினது காசு மீதியில் குறைவொன்று ஏற்படுகின்றது.

இதற்கமைய, காசு வைப்பிலிடுதல் தொடர்பான கணக்கு வைத்தல் முறையானது பின்வருமாறு இடம்பெறும்.

| | |
|---|---|
| வங்கிக் கணக்கு | வரவு |
| காசுக்கணக்கு | செலவு |

இவ்வாறு பதிவு இடம்பெறும்போது அதன் இரட்டைப் பதிவானது முழுமையடைகின்றது.

வங்கியில் காசு வைப்பிலிடும்போது வைப்புச் சீட்டைப் பூரணப்படுத்தி அதனுடன் குறித்த பணத்தொகையையும் வங்கியில் சமர்ப்பிக்க வேண்டும். வங்கியானது இரு பிரதிகளைக் கொண்ட வைப்புச்சீட்டின் ஒரு பிரதியை நடைமுறைக் கணக்கு வாடிக்கையாளருக்கு அச்சந்தர்ப்பத்தில் வழங்கும். வணிகத்தினால் வங்கியில் வைப்பிலிடப்பட்ட தொகையைப் பதிவுசெய்யும்போது அப்பிரதியை மூல ஆவணமொன்றாகப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

## 2. வங்கிக் கணக்கில் காசோலை வைப்பிலிடுவதைப் பதிவு செய்தல்.

காசோலைகளை வைப்பிலிடுவதன் காரணமாக வணிகத்தின் வங்கிக் கணக்கு மீதி அதிகரிக்கும். கடன்பட்டோர்களிடமிருந்தும் உடன் காசு விற்பனைகள் மூலமும் காசோலைகள் கிடைக்கப் பெறும். காசோலைகள் கிடைத்த சந்தர்ப்பத்தில் முதலாவதாகக் காசுக்கணக்கில் வரவு வைக்கப்படும் என்பது இதற்கு முன்னர் விளக்கப்பட்டுள்ளது. அவ்வாறு காசேட்டில் வரவு வைக்கப்பட்ட காசோலைகளைப் பின்னர் வங்கியில் வைப்புச் செய்கின்றபோது பின்வரும் முறையில் இரட்டைப்பதிவு மேற்கொள்ளப்பட வேண்டும்.

| | |
|---|---|
| வங்கிக் கணக்கு | வரவு |
| காசுக் கணக்கு | செலவு |

எனினும், காசோலை கிடைக்கப் பெற்ற சந்தர்ப்பத்திலேயே அவை வங்கியில் வைப்புச் செய்யப்படுமாயின் காசுக் கணக்கில் வரவு வைக்கப்படுவதற்குப் பதிலாக நேரடியாக வணிகத்தின் வங்கிக் கணக்கில் வரவு வைக்கமுடியும்.

உதாரணம் :-

விற்பனை மூலம் பெற்ற ரூ. 10 000 பெறுமதியான காசோலை அச்சந்தர்ப்பத்திலேயே வங்கியில் வைப்புச் செய்யப்பட்டது.

அப்போது இரட்டைப் பதிவானது பின்வருமாறு அமையும்.

| | | |
|---|---|---|
| வங்கிக் கணக்கு | வரவு | 10 000 |
| விற்பனைக் கணக்கு | செலவு | 10 000 |

கிடைக்கப்பெறும் காசோலைகளை வங்கியில் வைப்புச் செய்யும்போது வைப்புச் சீட்டைப் பூரணப்படுத்தி அதனுடன் காசோலைகளையும் வங்கியில் சமர்ப்பித்தல் வேண்டும். அவ்வைப்புச் சீட்டின் பிரதி வங்கியினால் கணக்கு வாடிக்கையாளருக்கு வழங்கப்படும். அவ்வாடிக்கையாளரது வணிகத்தின் வங்கிக் கணக்கில் காசோலை வைப்புச் செய்வதற்குரிய பதிவினை மேற்கொள்ளும்போது வைப்புச்சீட்டின் பிரதி மூல ஆவணமொன்றாகப் பயன்படுத்தப்படும்.

காசு அல்லது காசோலைகள் வைப்புச் செய்வதன் மூலம் பெறப்பட்ட வைப்புச் சீட்டின் பிரதியொன்று கீழே காட்டப்பட்டுள்ளது. அதில் கவனஞ் செலுத்தவும்.


මහජන බැංකුව
மக்கள் வங்கி PEOPLE'S BANK
OFFICE COPY
චෙක් තැන්පතු තුණ්ඩුව
காசோலை வைப்புச்சீட்டு CHEQUE PAYING - IN SLIP
ආප. ப.இ. FORM 214 DP
கிளை இலக்கமும் கணக்கு இலக்கமும் BRANCH CODE AND ACCOUNT NO.
திகதி DATE
PAID INTO CREDIT OF
கணக்கின் வரவுக்குச் செலுத்தப்பட்டது.
தொகை எழுத்தில் ரூ. AMOUNT IN WORDS RS.
காசோலைகளின் எண்ணிக்கை NO OF CHEQUES
வங்கியின் /கிளையின் குறியீட்டு இல. BANK / BRANCH CODE NO.
காசோலை இல. CHEQUE No.
ரூபா. RS.
சதம் CTS.
மொத்தம் TOTAL
வைப்பாளர் DEPOSITOR
காசாளர் CASHIER
உத்தியோகத்தர் OFFICER
இக் கோட்டுக்குக் கீழே எதுவும் எழுதாதீர்கள் DO NOT WRITE ANYTHING BELOW THIS LINE
PRINTLAND 06-09-07

காசு அல்லது காசோலைகள் வைப்பிலிடுவதற்கான மாதிரி வைப்புச் சீட்டு

## 3. கொடுப்பனவுகளுக்காகக் காசோலைகள் வழங்குதல்

கடன்கொடுனர்களுக்கான கொடுப்பனவுகள், கொள்வனவுகள், செலவினங்கள் போன்றவைகளுக்காகக் காசோலைகள் வழங்கப்படுவதன்மூலம் கொடுப்பனவுகளை மேற்கொள்ள முடியும். காசோலைகள் வழங்கும்போது அவற்றைப் பூரணப்படுத்தி அதற்குரிய தகவல்களைக் காசோலைப் புத்தகத்தில் எஞ்சியுள்ள சிறிய பகுதியொன்றான அடியிதழில் குறிப்பிட்டதன் பின்னர் வழங்கப்படுவது பொதுவாக இடம்பெறும் நிகழ்வாகும். கீழே காணப்படும் காசோலையின் மாதிரியில் பகுதி I இல் அடியிதழும் II இல் பகுதியில் காசோலையும் காணப்படுகின்றது. அதனை அவதானிப்பதில் கவனஞ்செலுத்தவும்.

I அடியிதழ்      II காசோலை இதழ்


Date திகதி 05-01-2014
Payer සහන් අබේනායක
ජනවාරි මාසයේ භාණ්ඩ මිලදී ගැනීම සඳහා
Balance B/F
Deposits
This cheque රු. 15,000/-
Balance C/F
210200
BOC
පස්වෙනි නගර ශාඛාව
FIFTH CITY BRANCH
Date 0 5 0 1 1 4
D D M M Y Y
Pay සහන් අබේනායක
Or Bearer
Rupees පහළොස් දහසක් පමණක්
රු. 15,000/-
Rs.
රුවන් කුලරත්න
⑈210200⑈ ?010⑉060⑆ 0002323980⑈

மாதிரிக் காசோலை

காசோலைகள் மூலம் கொடுப்பனவுகளை மேற்கொள்ளும்போது அக்கொடுப்பனவுகளுக்குரிய தகவல்கள் கொடுப்பனவுக் கைச்சாத்தில் பதிவு செய்யப்படும். இதற்கமைய, காசோலைகள் மூலம் மேற்கொள்ளும் கொடுப்பனவுகளை வங்கிக் கணக்கில் பதிவு செய்யப்படும்போது கொடுப்பனவுக் கைச்சாத்து (வவுச்சர்) மூல ஆவணமொன்றாகப் பயன்படுத்தப்படும்.
காசோலைகள் மூலம் கொடுப்பனவுகள் மேற்கொள்ளும்போது வங்கிக் கணக்கினது மீதி குறைவடையும். இதற்குரிய இரட்டைப்பதிவு பின்வருமாறு அமையும்.

| | |
|---|---|
| செலவுக் கணக்கு அல்லது கொடுப்பனவுக்குரிய கணக்கு | வரவு |
| வங்கிக் கணக்கு | செலவு |

## 4. காசோலைகள் மறுக்கப்படுதல்

முறையற்ற வகையில் காசோலை எழுதுதல். நடைமுறைக்கணக்கில் காசு இல்லா திருத்தல், காசோலையிலுள்ள கையொப்பமானது மாதிரிக் கையொப்பத்தினின்றும் வேறுபட்டிருத்தல் போன்றவைகள் காரணமாக வங்கியினால் காசோலைக்குப் பணம் வசூலித்தல் அல்லது கொடுப்பனவு செய்தல் நிறுத்தப்படும். இதனையே காசோலைகள் மறுக்கப்படுதல் என அழைக்கப்படும்.

இதற்கமைய, வைப்பிலிடப்பட்ட காசோலைகளைப்போன்று வழங்கப்பட்ட காசோலைகளும் கூட மறுக்கப்பட முடியும். மறுக்கப்படுவதற்குரிய அறிவித்தலொன்று வங்கி மூலம் வணிகத்திற்கு (நடைமுறைக் கணக்குரிமையாளருக்கு) அனுப்பப்படும்.

மறுக்கப்பட்ட காசோலையின் அறிவித்தலொன்றின் மாதிரி தரப்பட்டுள்ளது. அதில் கவனஞ் செலுத்தவும்.

### வைப்பிலிடப்பட்ட காசோலைகள் மறுக்கப்படல்

உடன் காசு விற்பனைகள் மூலம், கடன்பட்டோர்களிடமிருந்து போன்ற வகைகளில் பெறப்படும் காசோலைகள் வங்கியில் வைப்பு செய்யப்படும் அதே வேளை வணிகத்தினால் அப்பெறுமானங்கள் வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்படும். இவ்வைப்புக்கள் மூலம் வங்கிக் கணக்கு மீதி அதிகரிப்பதனாலேயே அவ்வாறு வரவு வைக்கப்படுகின்றது. ஆயினும் வங்கியினால் இக்காசோலைகள் மறுக்கப்படுகின்றபோது உண்மையில் வங்கி மீதியில் அதிகரிப்பேற்படுவதில்லை. ஆகையால், வைப்பிலிடப்பட்ட சந்தர்ப்பத்தின் போது வரவு வைக்கப்பட்ட பதிவினை நீக்குதல் வேண்டும். இங்கு, வங்கிக் கணக்கில் மறுக்கப்பட்ட காசோலையின் பெறுமதி காசோலையை வழங்கியவரிடமிருந்து மீள அறவிட்டுக்கொள்ள வேண்டிய தொகையாகக் காட்டுதல் வேண்டும். இதற்கமைய வைப்பிலிடப்பட்டு மறுக்கப்பட்ட காசோலைகளினது பெறுமதிகளைப் பின்வரும் முறையில் பதிவுசெய்ய வேண்டும்.

| | |
|---|---|
| கடன்பட்டோர் கணக்கு | வரவு |
| வங்கிக் கணக்கு | செலவு |

Retained by Customer

# අගරු චෙක්පත් නිවේදනය
# மறுக்கப்பட்ட காசோலை அறிவிப்பு
# Cheque Return Notification

නැවත ඉදිරිපත් කළහැකි විට, අගරු වූ චෙක්පත ලෙස භාවිතා කළ හැක
மீள சமர்ப்பிக்கக்கூடியதாயின், மறுக்கப்பட்ட காசோலைக்கு பதிலாக பாவிப்பதற்கு அனுமதிக்கப்பட்டது
Permitted to use as a replacement for the returned cheque, if representable

**PART-A**
**Customer's Copy**

9999 00032732

**LCPL - Matara**

Date: **25-May-2006**

**Collecting Bank: Peoples Bank**

| *Bank's Use* | අගරු චෙක් පතෙහි විස්තර / திருப்பி அனுப்பும் காசோலையின் விபரம் / **Cheque Return Information** | |
|---|---|---|
| | චෙක්පත් අංකය / காசோலை இலக்கம் / Cheque Number | : 654298 |
| | ගෙවන බැංකුකරු / செலுத்தும் வங்கி / Paying Bank | : Peoples Bank |
| | වටිනාකම (රු) / தொகை (ரூபா) / Amount (Rs.) | : 3,500.00 |
| | ගිණුම් අංකය / கணக்கு இலக்கம் / Account Number | |
| | UI නොම්මරය / UI இலக்கம் / UI Number | : 20060523713530704107400015 |
| | අගරු කිරීමට හේතුව (සංකේතය) / திருப்பி அனுப்பப்படுவதற்கான காரணம் (குறியீடு) / Return Reason (Code) | : Payment Postponed Pending Drawer's Confirmation(14) |
| *Authorized Bank's Signature* | | |

CANCELLED
15 MAY 2006
LANKACLEAR (PVT) LTD.
MATARA. RSC

---

Retained by Collecting Bank when represented

## Cheque Clearing Information

**PART-B**
**Bank's Copy**

9999 00032732

**LCPL - Matara**

Date: **25-May-2006**

CITS

**Collecting Bank: Peoples Bank**

**Cheque Information**

**UI Number** : 20060523713530704107400015
**Amount (Rs.)** : 3,500.00
**Cheque Number** : 654298

**First Presentment Date :** 23-May-2006
**Paying Bank** : Peoples Bank
**Paying Branch** : Urubokka

INSTRUCTIONS FOR RE-PRESENTMENT

**First Return - This CRN can be re-presented only to the original presenting bank subject to conditions.**

| **Clearing Information** | **First Return** | **Second Return** |
|---|---|---|
| Return Reason/Code | Payment Postponed Pending Drawer's Confirmation(14) | |
| Collecting Branch | Gandara | |
| Collecting LCPL Center | Matara | |
| Date of Return | 25-May-2006 | |

CANCELLED
15 MAY 2006
LANKACLEAR (PVT) LTD.
MATARA. RSC

**Conditions**

1. CRN with any mutilation or tear will not be accepted.
2. CRN is not negotiable and cannot be encashed.
3. To be presented within 6 months of 1st presentment date or cheque date, whichever is earlier.

---

Forwarded for Cheque Clearing by Collecting Bank

THIS IS A TRUE COPY OF THE ORIGINAL CHEQUE

**PART-C**
**Bank's Copy**

CITS

Cheque Status: **Re-presentable**

9999 00032732

**LCPL - Matara**

Date: **25-May-2006**

**Collecting Bank: Peoples Bank**

Front Image of Returned Cheque




*For Endorsements*

CANCELLED
15 MAY 2006
LANKACLEAR (PVT) LTD.
MATARA. RSC

**20060523 7135307 04 10740015** **3,500.00**

மறுக்கப்பட்ட காசோலை அறிவிப்பு மாதிரிப் படிவம்

உதாரணம் :-

கடன்பட்டோரிடமிருந்து பெறப்பட்டு வங்கியில் வைப்புச் செய்யப்பட்ட ரூ. 8 000 பெறுமதியான காசோலையொன்று மறுக்கப் பட்டுள்ளது என வங்கியால் அறிவிக்கப்பட்டது.

இங்கு வைப்பிலிட்டு மறுக்கப்பட்ட காசோலையின் பெறுமானத்தைப் பதிவு செய்வதற்குரிய இரட்டைப் பதிவு பின்வருமாறு மேற்கொள்ளப்படும்.

| | | |
|---|---|---|
| கடன்பட்டோர் கணக்கு | வரவு | ரூ. 8 000 |
| வங்கிக் கணக்கு | செலவு | ரூ. 8 000 |

**வழங்கப்பட்ட காசோலை மறுக்கப்படல்**

காசோலைகள் வழங்கும்பொழுது குறித்த செலவினக் கணக்கு வரவு அல்லது குறித்த வேறு கணக்கு வரவு வைக்கப்பட்டு வங்கிக் கணக்கில் செலவு வைக்கப்படல் வேண்டும் என இதற்கு முன்னர் கலந்துரையாடப்பட்டது. அவ்வாறு வழங்கப்பட்ட காசோலைகள் மறுக்கப்படும்போது ஏற்கனவே வங்கிக் கணக்கிலுள்ள பதிவு நீக்கப்படுதல் வேண்டும். இதனைக் காசோலை வழங்கும்போது பதிவு செய்யப்பட்ட பதிவிற்கு எதிர்ப்பக்கப் பதிவு மூலம் நீக்கப்படும்.இதற்கமைய வழங்கப்பட்ட காசோலைகள் மறுக்கப்படும்போது பின்வருமாறு பதிவு செய்யப்படல் வேண்டும்.

| | |
|---|---|
| வங்கிக் கணக்கு | வரவு |
| குறித்தசெலவினக் கணக்கு / ஏனைய கணக்கு | செலவு |

உதாரணம் :-

கடன்கொடுத்தோருக்காக வணிகத்தினால் வழங்கப்பட்ட ரூ. 15 000 பெறுமதியான காசோலை ஒன்று மறுக்கப்பட்டுள்ளது என வங்கியால் அறிவிக்கப்படல்.

மறுக்கப்பட்ட காசோலைக்கான இரட்டைப்பதிவு பின்வருமாறு.

| | | |
|---|---|---|
| வங்கி கணக்கு | வரவு | ரூ. 15 000 |
| கடன் கொடுத்தோர் கணக்கு | செலவு | ரூ. 15 000 |

உதாரணம் :-

20XX.06.01 நல்லையா வணிகத்தில் பின்வருமாறு மீதிகள் காணப்பட்டன.

| | ரூ. |
|---|---|
| காசு | 185 000 |
| கடன்பட்டோர் | 55 000 |
| கடன்கொடுத்தோர் | 85 000 |

ஜுன் மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு.

20XX.06.02 வங்கியில் ரூ. 22 000 வைப்புச் செய்யப்பட்டு நடைமுறைக் கணக்கொன்று ஆரம்பிக்கப்பட்டது

06.03 கடன்பட்டோர் ஒருவரிடமிருந்து 455 ஆம் இலக்கம் கொண்ட ரூ. 9 000 பெறுமதியான காசோலை கிடைக்கப்பெற்றது.

06.04 கடன்பட்டோரிடமிருந்து கிடைக்கப்பெற்ற 455 ஆம் இலக்கம் கொண்ட காசோலை ரூ. 9 000 வங்கியில் வைப்பிலிடப்பட்டது.

06.08 விற்பனைக்காகக் கிடைக்கப்பெற்ற 562 ஆம் இலக்கம் கொண்ட ரூ. 12 000 பெறுமதியான காசோலை ஒன்று அச்சந்தர்ப்பத்திலேயே வங்கியில் வைப்பிலிடப்பட்டது.

06.12 காசாக ரூ. 15 000 வங்கி நடைமுறைக்கணக்கில் வைப்பிலிடப்பட்டது.

06.15 301 ஆம் இலக்கம் கொண்ட ரூ. 7 600 பெறுமதியான காசோலையொன்று கடன் கொடுத்தோருக்குச் செலுத்தப்பட்டது. இதற்கு ரூ. 400 கழிவாகப் பெறப்பட்டது.

06.18 மின்சாரக் கட்டணமாக 302 ஆம் இலக்கம் கொண்ட ரூ. 5 000 பெறுமதியான காசோலை ஒன்று வழங்கப்பட்டது.

06.20 மின்சாரக் கட்டணத்திற்காக வழங்கப்பட்ட ரூ.5 000 பெறுமதியான காசோலை மறுக்கப்பட்டது.

06.24 415 ஆம் இலக்கம் கொண்ட ரூ. 13 000 பெறுமதியான காசோலையொன்று கடன்பட்டோரிடமிருந்து பெறப்பட்டது.

06.26 கடன்பட்டோரிடமிருந்து பெற்ற 415 ஆம் இலக்கம் கொண்ட காசோலை வங்கியில் வைப்பிலிடப்பட்டது.

06.28 வங்கியில் வைப்பிலிடப்பட்ட 415 ஆம் இலக்கம் கொண்ட காசோலை மறுக்கப்பட்டது.

06.29 கடன்பட்டோரிடமிருந்து 632 ஆம் இலக்கம் கொண்ட ரூ. 5 700 பெறுமதியான காசோலையொன்று பெறப்படல். இதில் அனுமதிக்கப்பட்ட கழிவு ரூ. 300 ஆகும். இக்காசோலை அச்சந்தர்ப்பத்திலே வங்கியில் வைப்பிலிடப்பட்டது.

இக்கொடுக்கல் வாங்கல்கள் வங்கிக் கணக்கில் பதிவு செய்யப்படும் முறையினையும் குறித்த ஏனைய கணக்குகளில் பதிவு செய்யும் முறையினையும் பின்வருமாறு காட்டமுடியும்.

வரவு வங்கிக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப. | கழிவு | தொகை. ரூ. | திகதி | விபரம் | பே ப.. | கழிவு | தொகை. ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 20XX.06.02 | காசு | | | 22 000 | 20XX.06.15 | கடன்கொடுனர்( (301) | | 400 | 7 600 |
| 06.04 | காசு (455) | | | 9 000 | 06.18 | மின்சாரம் (302) | | | 5 000 |
| 06.08 | விற்பனைகள் (562) | | | 12 000 | 06.28 | கடன்பட்டோர் (415) | | | 13 000 |
| 06.12 | காசு | | | 15 000 | | | | | |
| 06.20 | மின்சாரம் (302) | | | 5 000 | | | | | |
| 06.26 | காசு (415) | | | 13 000 | | | | | |
| 06.29 | கடன்பட்டோர் (632) | | 300 | 5 700 | | | | | |

வரவு காசுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. | திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.06.01 | மீ.கீ.கொ.வ | | 185 000 | 20XX.06.02 | வங்கி | | 22 000 |
| 06.03 | கடன்பட்டோர் | | 9 000 | 06.04 | வங்கி | | 9 000 |
| 06.24 | கடன்பட்டோர் (415) | | 13 000 | 06.12 | வங்கி | | 15 000 |
| | | | | 06.26 | வங்கி (415) | | 13 000 |

வரவு கடன்பட்டோர் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. | திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.06.01 | மீ.கீ.கொ.வ | | 55 000 | 20XX.06.03 | காசு | | 9 000 |
| 06.28 | மறுக்கப்பட்ட காசோலை | | 13 000 | 06.24 | காசு கா.இ 415 | | 13 000 |
| | | | | 06.29 | வங்கி | | 5 700 |
| | | | | 06.29 | கழிவு | | 300 |

வரவு கடன்கொடுத்தோர் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. | திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.06.15 | வங்கி | | 7 600 | 20XX.06.01 | மீ.கீ.கொ.வ | | 85 000 |
| 06.15 | கழிவு | | 400 | | | | |

வரவு விற்பனைக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. | திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.06.08 | வங்கி | | 12 000 |

வரவு　　　　　　　　　　　　மின்சாரக் கணக்கு　　　　　　　　　　　　செலவு

| திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. | திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.06.18 | வங்கி | | 5 000 | 20XX.06.20 | வங்கி (மறுக்கப்பட்ட காசோலை) | | 5 000 |

வரவு　　　　　　　　　　　　கொடுத்தகழிவுக் கணக்கு　　　　　　　　　　　　செலவு

| திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. | திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.06.30 | கடன்பட்டோர் | | 300 | | | | |

வரவு　　　　　　　　　　　　பெற்ற கழிவுக் கணக்கு　　　　　　　　　　　　செலவு

| திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. | திகதி | விபரம் | பே ப. | தொகை. ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20XX.06.30 | கடன்கொடுத்தோர் | | 400 |



## செயற்பாடு 01

சாகிர் வணிகத்தின் 2XXX-06-01 ஆம் திகதியன்று காணப்பட்ட மீதிகள் பின்வருமாறு

| | ரூ. |
|---|---|
| காசு | 90 000 |
| கடன்பட்டோர் | 60 000 |
| மூலதனம் | 70 000 |
| கடன் கொடுத்தோர் | 80 000 |

20XX ஜுன் மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு

20XX.06.05　ரூ. 25 000வைப்பிலிட்டு வங்கியில் நடைமுறைக் கணக்கு ஆரம்பிக் கப்பட்டது.

06.08　40ஆம் இலக்கம் கொண்ட ரூ.20 000 பெறுமதியான காசோலை யொன்று வழங்கப்பட்டுப் பொருள்கள் கொள்வனவு செய்யப் பட்டன

06.10　பின்வரும் காசோலைகள் வங்கியில் வைப்புச் செய்யப்பட்டன
கடன்பட்டோரிடமிருந்து பெற்ற 68 ஆம் இலக்கம் கொண்ட ரூ.12 000 பெறுமதியான காசோலை.

விற்பனை மூலம் பெறப்பட்ட இலக்கம் 75 ஐ கொண்ட ரூ. 18 000 பெறுமதியான காசோலை.

கடன்பட்டோரிடமிருந்து பெற்ற இல 66 ஐ கொண்ட ரூ. 18 000 பெறுமதி யான காசோலை.

06.15 காசாக ரூ. 10 000 வங்கியில் வைப்புச் செய்யப்பட்டது.

06.16 கடன்பட்டோரிடமிருந்து பெறப்பட்டு வங்கியில் வைப்புச் செய்யப் பட்ட ரூ. 12 000 பெறுமதியான 68 ஆம் இலக்க காசோலை மறுக்கப் பட்டது.

06.20 பின்வரும் இலக்கங்கள் கொண்ட காசோலைகள் வழங்கப்பட்டன.

வாடகைக்கு வழங்கிய 41 ஆம் இலக்கம் கொண்ட ரூ. 8 000 பெறுமதி யான காசோலை.

கடன் கொடுத்தோருக்கு வழங்கிய 42ஆம் இலக்கம் கொண்ட ரூ. 15000 பெறுமதியான காசோலை

06.24 வாடகைக்காக வழங்கிய ரூ. 8000 பெறுமதியான காசோலை மறுக்கப் பட்டது.

06.26 வாடகைக்காக வழங்கிய மறுக்கப்பட்ட காசோலைக்குப் பதிலாக 43 ஆம் இலக்கம் கொண்ட ரூ. 8 000 பெறுமதியான காசோலை வழங்கப்பட்டது.

06.27 விற்பனைகள் மூலம் பெற்ற 105ஆம் இலக்கம் கொண்ட ரூ. 21 000 பெறுமதியான காசோலை அன்றைய தினமே வங்கியில் வைப்புச் செய்யப்பட்டது.

(1) 20XX.06.30முடிவடைந்த மாதத்திற்கான வங்கிக் கணக்கினைத் தயாரித்துச் சமப்படுத்தவும்.

(2) ஏனைய பேரேட்டுக் கணக்குகளில் பதிவு செய்து சமப்படுத்தவும்.

## வங்கி மேலதிகப்பற்று

வங்கி நடைமுறைக் கணக்கில் தற்போது காணப்படும் மீதியிலும் பார்க்கக் கூடுதலான தொகைக்குக் காசோலைகளை வழங்க நடைமுறைக் கணக்கு வாடிக்கையாளருக்கு வங்கிகள் அனுமதிக்கலாம். இத்தகைய வசதியே வங்கி மேலதிகப் பற்று என அழைக்கப்படும். இதற்கமைய வணிகத்தினால் வங்கிக் கணக்கிலுள்ள மீதியின் அளவையும் விட மேலதிகமான தொகைகளுக்குக் காசோலைகள் வழங்கப்படும்போது வங்கிக் கணக்கின் வரவுப் பக்கத்தின் கூட்டுத்தொகையை விட அதன் செலவுப் பக்கக் கூட்டுத்தொகை அதிகமாக இருப்பதன் காரணமாக வங்கிக் கணக்கு செலவு

மீதியொன்றைக் காட்டும். இவ்வாறு காணப்படும் செலவு மீதி **''வங்கி மேலதிகப் பற்று''** எனக் குறிப்பிடப்படும். இது வணிகத்தின் ''பொறுப்பு'' ஒன்றாகக் கருதப்படும். இதற்கமைய கணக்கில் இருக்கும் மீதியை விட மேலதிகமான தொகைக்குக் காசோலைகளை வழங்கும்போது வங்கியானது அக்காசோலைகளுக்குக் கொடுப்பனவுகளை மேற்கொள்வதனால் கணக்குரிமையாளர் வங்கிக்குக் கடன்பட்டோராகக் கருதப் படுவார். இவ்வாறு வங்கிக் கூற்றில் காணப்படும் வரவுமீதி வங்கி மேலதிகப் பற்று என அழைக்கப்படும்.

உதாரணம் :-

20XX.07.01 ஆம் திகதியில் சாமிநாதனின் வணிகத்தின் வங்கிக் கணக்கில் சாதகமான மீதியாக (வரவு மீதி) ரூ. 12 000 இருந்தது. ஜுலை மாதத்தினுள் வங்கிக் கணக்கினூடாக மேற்கொள்ளப்பட்ட கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு.

20XX.07.05 காசு வைப்பிலிடல் ரூ. 8 000

**வைப்பிலிடப்பட்ட பெற்ற காசோலைகள்**

20XX.07.08 விற்பனைகள் மூலம் பெற்ற காசோலை ரூ. 9 000
காசோலை இல.20

20XX.07.15 வாடகை வருமானத்திற்காகப் பெற்ற காசோலை ரூ. 7 000
காசோலை இல.114

20XX.07.20 கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசோலை ரூ. 6 000
காசோலை இல.95

**வழங்கப்பட்ட காசோலைகள்**

20XX.07.12 கடன் கொடுத்தோருக்கு ரூ. 16 000 கா. இல.33
20XX.07.22 ஊழியர் சம்பளத்திற்காக ரூ. 15 000 கா. இல.34
20XX.07.25 கொள்வனவுகளுக்காக ரூ. 25 000 கா. இல.35

மேற்காட்டிய கொடுக்கல் வாங்கல்களை வங்கிக் கணக்கில் பதிவுசெய்து அதனைச் சமப்படுத்திய முறை கீழே காட்டப்பட்டுள்ளது.

வரவு வங்கிக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ | திகதி | விபரம் | பே. ப | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.07.01 | மீ.கீ.கொ.வ . | | 12 000 | 20XX.07.12 | கடன் கொடுத்தோர்(33) | | 16 000 |
| 07.05 | காசு | | 8 000 | 07.22 | சம்பளம் (34) | | 15 000 |
| 07.08 | காசு (20) | | 9 000 | 07.25 | கொள்வனவுகள் (35) | | 25 000 |
| 07.15 | காசு (114) | | 7 000 | | | | |
| 07.20 | காசு (95) | | 6 000 | | | | |
| 07.31 | மீ.கீ.கொ.செ | | 14 000 | | | | |
| | | | 56 000 | | | | 56 000 |
| | | | | 08.01 | மீ.கீ.கொ.வ | | 14 000 |

மேற்காட்டிய உதாரணத்திற்கமைய வங்கிக் கணக்கின் செலவுப்பக்கக் கூட்டுத் தொகை ரூ. 56 000 ஆகவும் வரவுப்பக்க கூட்டுத்தொகை ரூ. 42 000 ஆகவும் இருந்தது. இதற்கமைய செலவுப்பக்கத்தின் கூட்டுத்தொகையைவிட வரவுப் பக்கத் தின் கூட்டுத்தொகை ரூ. 14 000 இனால் குறைவாக இருப்பதன் காரணமாக வங்கிக் கணக்கில் ரூ. 14 000 த்திலான செலவு மீதியொன்று கிடைக்கப் பெற்றுள்ளது. இது ''வங்கி மேலதிகப் பற்று'' எனக் குறிப்பிடப்படும். வங்கி மேலதிகப் பற்றினை மீள வங்கிக்குச் செலுத்துவதற்குக் கடப்பாடு இருப்பதனால் இதனை வணிகத்தின் பொறுப்பொன்றாகக் கருதமுடியும்.



## செயற்பாடு 02

விக்டர் என்பவர் ஆடை அணிகலன்களை விற்பனை செய்யும் வணிகமொன்றில் ஈடுபட்டுள்ளார். அவர் கொடுக்கல் வாங்கலைச் செய்வதற்காக வங்கி நடை முறைக் கணக்கொன்றை ஆரம்பித்ததுடன் நீண்ட காலமாக ஒழுங்கு முறைக்கமையக் கொடுக்கல் வாங்கல்களில் ஈடுப்பட்டுள்ளமையால் எந்தவொரு சந்தர்ப்பத்திலும் ரூ. 100 000 வரையில் வங்கி மேலதிகப்பற்றினைப் பெற்றுக் கொள்ளக்கூடிய வசதியைப் பெற்றுள்ளார்.

20XX.05.01 ஆம் திகதியன்று அவரது வணிகத்தில் வங்கிக் கணக்கு மீதி ரூ.45 000 இருந்தது. மே மாதத்தில் அவரது வங்கி நடைமுறைக் கணக்கினூடாகக் மேற் கொள்ளப்பட்ட கொடுக்கல் வாங்கல்கள் பின்வருமாறு

**வைப்புக்கள்**

20XX.05.02 காசு ரூ. 14 000
05.11 காசோலை வைப்பு ரூ. 15 000
05.21 காசோலை வைப்பு ரூ. 16 000

**வழங்கப்பட்ட காசோலை**

05.05 கடன் கொடுத்தவரொருவரான அகிலுக்கு ரூ. 12 000
05.13 சம்பளக் கொடுப்பனவுகள் ரூ. 20 000
05.18 நிறுவன வாடகை ரூ. 10 000
05.22 கொள்வனவுக்காக ரூ. 34 000

வைப்பிலிடப்பட்ட அனைத்துக் காசோலைகளும் வங்கி நடைமுறைக் கணக்கில் சேர்க்கப்பட்டிருந்ததோடு வழங்கப்பட்ட காசோலைகளது தொகைகள் வங்கி நடைமுறைக் கணக்கிலிருந்து கழிப்பனவு செய்யப்பட்டது.

01. மேற்காட்டிய கொடுக்கல் வாங்கல்களை வங்கிக் கணக்கில் பதிவு செய்து அதனைச் சமப்படுத்திக் காட்டுக.

02. 20XX.05.25 உபகரணக் கொள்வனவுக்காக ரூ.45 000 பெறுமதியான காசோலையொன்று வழங்கப்பட்டிருப்பின் அவரினால் பெற்றுக் கொள்ளப்பட்ட வங்கி மேலதிகப் பற்று எவ்வளவு என்பதைக் காட்டுக.

## 9.2 வங்கிக் கணக்கிணக்கக் கூற்று

வணிகமொன்று வங்கி நடைமுறைக் கணக்கினூடாக மேற்கொள்ளும் கொடுக்கல் வாங்கல்கள் அதனது வங்கிக் கணக்கில் பதிவு செய்யப்படும் முறையினை நீங்கள் இதற்கு முன்னர் கற்றுள்ளீர்கள். வணிகத்தின் பெயரில் வங்கிக் கணக்கில் இருக்கும் மீதியானது வணிகத்தினது சொத்தொன்றாகக் கருதப்படும். எனவே, வணிகத்தின் ஏடுகளில் காணப்படும் வங்கிக் கணக்கானது சொத்துக் கணக்கு வகையைச் சார்ந் ததாகும்.சொத்துக் கணக்கு வகைக்குரிய இரட்டைப் பதிவு விதிமுறைகளுக்கமைய வங்கிக் கணக்கில் கொடுக்கல் வாங்கல்கள் பதிவு செய்யப்படும். இங்கு வங்கி மீதியை அதிகரிப்பதில் தாக்கத்தை செலுத்தும் கொடுக்கல் வாங்கல்கள் வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்படுவதுடன், வங்கி மீதி குறைவதில் தாக்கத்தை ஏற்படுத்தும் கொடுக்கல் வாங்கல்களை வங்கிக் கணக்கில் செலவு வைக்கப்படும்.

வணிகத்தின் பெயரில் வங்கி நடைமுறைக் கணக்கினூடாக நிகழும் கொடுக்கல் வாங்கல்களை வணிக வங்கியானது பதிவு செய்யும் முறையினைக் கேட்டறிவோம்.

வணிகமொன்றினால் வங்கியின் நடைமுறைக்கணக்கினுடாக மேற்கொள்ளும் கொடுக்கல் வாங்கல்கள் வணிக வங்கியின் ஏடுகளில் வணிகத்தின் பெயரிலான கணக்கொன்றில் பதிவு செய்யப்படும். வணிகத்தின் சார்பில் வங்கியினால் பேணப்படும் கணக்கு வங்கிக்கு பொறுப்பு ஒன்றாகக் கருதப்படும். எனவே, வங்கியினூடாக வணிகத்திற்குரிய கொடுக்கல் வாங்கல்கள் பொறுப்புக் கணக்கிற்குரிய விதிகளுக்கமையவே அதனது ஏடுகளில் பதிவு செய்யப்படுகின்றன. இதற்கமைய வங்கி மீதியின் அதிகரிப்பில் தாக்கத்தை ஏற்படுத்தும் கொடுக்கல் வாங்கல்களை வங்கியினால் வணிகத்தின் பெயரில் பேணப்படும் கணக்கில் செலவு வைக்கப்படும் அதேவேளை வங்கி மீதியில் குறைவினை ஏற்படுத்தும் கொடுக்கல் வாங்கல்கள் அக்கணக்கில் வரவு வைக்கப்படும்.
நடைமுறையில் வங்கியினால் வணிகத்தின் பெயரிலான வங்கிக் கணக்கானது பின்வரும் முறையிலேயே தயாரிக்கப்படுகின்றது.

நடைமுறைக்கணக்கு

| திகதி | விபரம் | வரவு | செலவு | மீதி |
|---|---|---|---|---|
| | ஆரம்ப மீதி (செலவு) | | | XXX |
| | காசு வைப்பு | | XXX | XXX |
| | காசோலை வைப்பு | | XXX | X XXX |
| | காசோலைகளுக்கான கொடுப்பனவு | XXX | | XXX |
| | நேரடி வைப்பு | | XXX | XXX |
| | வங்கிக் கட்டணம் | XXX | | XXX |
| | காசோலைக் புத்தகக் கட்டணம் | XXX | | XXX |

வணிகத்தினால் வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்படும் தொகைகள் வங்கியினால் வணிகத்தின் கணக்கில் செலவு வைக்கப்படும். அதே வேளை வணிகத்தினால் வங்கிக் கணக்கில் செலவு வைக்கப்படும் தொகைகள் வங்கியினால் வணிகத்தின் கணக்கில் வரவு வைக்கப்படும். இறுதியில் வணிகத்தின் ஏடுகளில் வங்கிக் கணக்கில் வரவு மீதியொன்று காணப்படும்போது வங்கியின் ஏடுகளில் வணிகத்தின் பெயரிலான கணக்கில் செலவு மீதியொன்று காணப்படும்.

## வங்கிக் கூற்று (Bank Statement)

வங்கி நடைமுறைக் கணக்கிற்கு உரித்துடைய ஒருவருக்கு வங்கியினால் பொதுவாக மாதத்திற்கு ஒருமுறை அனுப்பப்படும் கூற்று வங்கிக் கூற்று எனப்படும். இதில் குறித்த மாதத்தில் வங்கி நடைமுறைக் கணக்கினூடாக மேற்கொள்ளப்பட்ட வரவுகள், செலவுகள் உட்பட மீதியும் இதில் காட்டப்படும். பொதுவாக நடைமுறையில் குறித்த மாதத்தில் வங்கியினூடாக மேற்கொள்ளப்பட்ட கொடுக்கல் வாங்கல்களை உள்ளடக்கிய கணக்கின் கணினியில் தட்டச்சு செய்த பிரதியொன்றே வணிகத்திற்கு அனுப்பப்படுகின்றது. இவ்வாறு வங்கியினால் அனுப்பப்படும் அச்சிடப்பட்ட கூற்றுப் பிரதியே ''**வங்கிக் கூற்று**'' அதாவது கணக்குக் கூற்று என அழைக்கப்படும்.

வங்கிக் கூற்றின் மாதிரியொன்று பின்வருமாறு காணப்படும். அதில் கவனஞ் செலுத்துவோம்.

STATEMENT OF ACCOUNT [redacted]
NAOTUNNA STORES KEKANADURA 81020

Branch Name / Code [redacted] CITY BRANCH
Account Number [redacted]

Date 30/08/2013
Currency LKR

| Date | Particulars | | Payments | Receipts | Balance |
|---|---|---|---|---|---|
| 31/07 | BALANCE B/F | | | | 34,654.10DR |
| 01/08 | CASH DEPOSIT | | .00 | 13,000.00 | 21,654.10DR |
| 01/08 | ACH CLR | 0174024 | 39,000.00 | .00 | 60,654.10DR |
| 02/08 | CASH DEPOSIT | | .00 | 10,000.00 | 50,654.10DR |
| 05/08 | CASH DEPOSIT | | .00 | 7,000.00 | 43,654.10DR |
| 06/08 | ACH CLR | 0174023 | 20,800.00 | .00 | 64,454.10DR |
| 06/08 | CASH DEPOSIT | | .00 | 9,000.00 | 55,454.10DR |
| 07/08 | CASH DEPOSIT | | .00 | 5,000.00 | 50,454.10DR |
| 08/08 | CASH DEPOSIT | | .00 | 5,000.00 | 45,454.10DR |
| 12/08 | CASH DEPOSIT | | .00 | 5,000.00 | 40,454.10DR |
| 13/08 | CASH DEPOSIT | | .00 | 12,000.00 | 28,454.10DR |
| 14/08 | CASH DEPOSIT | | .00 | 29,000.00 | 545.90 |
| 15/08 | CHQ BOOK CHARGES | | 375.00 | .00 | 170.90 |
| 22/08 | CASH DEPOSIT | | .00 | 12,000.00 | 12,170.90 |
| 23/08 | ACH CLR | 0182330 | 25,000.00 | .00 | 12,829.10DR |
| 23/08 | CASH DEPOSIT | | .00 | 13,000.00 | 170.90 |
| 26/08 | CASH DEPOSIT | | .00 | 10,000.00 | 10,170.90 |
| 27/08 | ACH CLR | 0182327 | 4,000.00 | .00 | 6,170.90 |
| 27/08 | CASH DEPOSIT | | .00 | 10,000.00 | 16,170.90 |
| 27/08 | ACH CLR | 0182329 | 9,595.00 | .00 | 6,575.90 |
| 29/08 | ACH CLR | 0182334 | 5,400.00 | .00 | 1,175.90 |
| 30/08 | CASH DEPOSIT | | .00 | 10,000.00 | 11,175.90 |
| 30/08 | OD CHG SYS-GENERATED | | 425.79 | .00 | 10,750.11 |
| 30/08 | BALANCE C/F | | | | 10,750.11 |
| | **TOTAL UNREALIZED CHEQUES** | | | | **.00** |
| | **TOTAL DEPOSITS** | **14 items** | | **150,000.00** | |
| | **TOTAL WITHDRAWALS** | **7 items** | **104,595.79** | | |

END OF STATEMENT

For clarifications if any, please contact the Branch Manager on 041 2222218

All the transactions shown on the statement should be verified and the Bank notified of any discrepancy immediately.
Any query relating to transactions beyond 03 months may be subject to levy of a fee.
Unrealised cheque deposits, if any are included in the Closing balance.

வங்கிக் கூற்று மாதிரி

வணிகத்தின் மூலம் தயாரிக்கப்படும் வங்கிக் கணக்கைச் சமப்படுத்தும்போது அதனது வங்கிக் கணக்கில் காணப்படும் மீதியினை அறிந்து கொள்ள முடியும். வங்கியினால் அனுப்பப்படும் வங்கிக் கூற்றில் வங்கியினது ஏடுகளுக்கமைய வணிகத்திற்கு உரித்தான கணக்கின் மீதி காட்டப்படும். பொதுவாக, இவ்விரு வங்கி மீதிகளும் சமமானவையாகக் காணப்பட வேண்டும். எனினும் நடைமுறையில் வணிகத்தின் ஏடுகளில் வங்கிக் கணக்கில் காட்டப்படும் மீதிக்கும் வங்கிக் கூற்றில் காட்டப்படும் வங்கி மீதிக்கும் இடையே வேறுபாடுகள் காணப்பட முடியும். குறித்த காலப்பகுதியினுள் வணிகத்தின் ஏடுகளில் வங்கிக் கணக்கில் பதிவு செய்யப்பட்டுள்ள சில விடயங்கள் வங்கிக் கூற்றில் பதிவு செய்யப்படாது இருப்பதும் வங்கிக் கூற்றில் பதிவு செய்யப்பட்டுள்ள சில விடயங்கள் வணிகத்தின் ஏட்டிலுள்ள வங்கிக் கணக்கில் பதிவு செய்யப்படாதிருப்பதுமே இவ்வாறு மீதிகள் வேறுபடுவதற்கான பிரதான காரணங்களாகும்.

## வங்கிக் கணக்கு இறுதி மீதியும் வங்கிக் கூற்று இறுதி மீதியும் வேறுபடுவதற்குரிய காரணங்கள்

### 1. காசோலைகள் வழங்கப்பட்டதாயினும் இதுவரையில் வங்கியில் சமர்ப் பிக்கப்படாதவை (மாற்றப்படாத காசோலைகள்)

வணிகத்தினால் வழங்கப்பட்ட காசோலைகள் வணிகத்தின் ஏட்டிலுள்ள வங்கிக் கணக்கில் செலவு வைக்கப்படும். இவ்வாறு செய்யும்போது வணிகத்தின் ஏடுகளில் வங்கிக் கணக்கு மீதியானது குறைந்திருக்கும். இவ்வாறு வழங்கப்பட்ட காசோலைகளிற் சில குறித்த காலப்பகுதியில் காசோலையைப் பெற்றுக் கொண்டவர்களால் வங்கியில் சமர்ப்பித்துப் பணத்தைப் பெற்றுக் கொள்ளாதிருக்க முடியும். வழங்கப்பட்டதாயினும் வங்கியில் சமர்ப்பிக்கப்படாத காசோலைகள் என இவற்றை இனங்காட்ட முடியும். இவ்வாறான காசோலைகளுக்கு வங்கி பணம் செலுத்தாதிருப்பதனால் வங்கிக் கூற்றில் இவை பதியப்படாதிருக்கும்.



இதன் காரணமாக வணிகத்தின் வங்கிக் கணக்கில் காட்டப்படும் மீதியானது வங்கிக் கூற்றில் காட்டப்படும் மீதியை விடக் குறைவானதாக இருக்கும்.

### 2. வைப்பிலிடப்பட்டதாயினும் இதுவரையில் வசூலிக்கப்படாத காசோலைகள் (கைத்தேறாத காசோலைகள்)

வணிகத்திற்குக் கிடைக்கப் பெற்ற காசோலைகள் வங்கியில் வைப்பிலிடப்படும்போது அவை வணிகத்தினால் வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்படும். இதனால் வணிகத்தின் ஏடுகளில் காணப்படும் வங்கி மீதியானது அதிகரிக்கும். அவ்வாறு வைப்பிலிடப்பட்ட காசோலைகளிற் சில அக்காலப்பகுதியினுள் வசூலிக்கப்படாத அதாவது தேறாதவை களாக இருக்க முடியும். காசோலைகளின் தேறல் என்பது காசோலையில் குறிப்பிடப்பட்ட தொகையானது வங்கியில் இருக்கும் நடைமுறைக் கணக்கின் தொகையுடன் சேர்க்கப்பட்டிருப்பதையே குறிக்கும்.

காசோலைகளை வங்கியில் வைப்பிலிடும்போது அதன் தொகையைக் கணக்கில் சேர்ப்பதற்காகச் சில நாட்கள் தேவைப்பட முடியும். எனவே, குறித்த கால இறுதியின் போது வணிகத்தினால் வைப்பிலிடப்பட்ட சில காசோலைகளின் பெறுமானங்கள் வங்கியில் பதிவு செய்யப்படாதிருக்கும்.வைப்பிலிட்டதாயினும் தேறாத காசோலை கள் என இவற்றைக் கருத முடியும்.இதனால் வங்கியில் வைப்பிட்டாலும் தேறாத காசோலைகள் வங்கிக் கூற்றில் பதியப்பட்டிருக்காது.



எனவே வணிகமொன்றின் வங்கிக் கணக்கில் காட்டப்படும் மீதியானது வங்கிக் கூற்றில் காட்டப்படும் மீதியை விட அதிகமாக இருக்கும்.

### 3. நேரடி வைப்புக்கள்

சில வாடிக்கையாளர்கள் வணிகத்திற்குச் செலுத்த வேண்டிய தொகைகள் நேரடியாக வணிகத்தின் நடைமுறைக் கணக்கில் வைப்பிலிடப்படும் சந்தர்ப்பங்களும் உண்டு. அவ்வாறே வணிகத்திற்குக் கிடைக்கவேண்டிய வாடகை, வட்டி, பங்குலாபம் போன்றன நேரடியாக வங்கி நடைமுறைக்கணக்கிற்கு அனுப்பப்படும் சந்தர்ப்பங்களும் உண்டு. இவற்றினை நேரடி வைப்புக்கள் என அழைக்கப்படும். இவ்வாறான நேரடி வைப்புகள் தொடர்பான விபரங்களை வங்கிக்கூற்று கிடைத்ததன் பின்னரே அறிந்து கொள்ளமுடியும். இவ்வாறான நேரடி வைப்புகள் வங்கிக் கூற்றில் பெறுவனவுகள் (செலவு) எனப் பதியப்பட்டாலும் வணிகத்தின் வங்கிக் கணக்கில் பதியப்படாதிருக்கும்.



எனவே வணிகத்தின் வங்கிக் கணக்கில் காட்டப்படும் மீதியானது வங்கிக் கூற்றில் காணப்படும் மீதியை விடக் குறைவாக இருக்கும்.

### 4. நிலையியற் கட்டளையின் பெயரிலான கொடுப்பனவுகள்

வணிகத்தினால் செலுத்த வேண்டிய வங்கிக் கடன் தவணைக் கட்டணம், குத்தகைத் தவணைக்கட்டணம், காப்புறுதிக் கட்டணம் போன்ற சில கொடுப்பனவுகளை வங்கியில் தனது கணக்கில் காணப்படும் பண மீதியிலிருந்து செலுத்தவும் என கணக்குரிமையாளரினால் எழுத்து மூலம் வங்கிக்கு அறிவித்தல் கொடுப்பதையே நிலையியற் கட்டளை என்றழைக்கப்படும். இவ்வாறான கட்டளைக்கு அமைய செலுத்துவதனையே நிலையியற் கட்டளைக் கொடுப்பனவு என்று அழைக்கப்படும். இவ்வாறான அறிவித்தல்களை வழங்குவதன் அடிப்படையில் வங்கியினால் கொடுப்பனவுகள் செய்யப்பட்டுள்ளது என்பதை வணிகத்திற்கு வங்கிக் கூற்று கிடைத்ததன் பின்னரே அறிந்து கொள்ளக் கூடியதாக உள்ளது. நிலையியற் கட்டளையின் பெயரில் கொடுப்பனவுகள் மேற்கொள்ளப்பட்டதன் பின்னர் அப்பெறுமானம் வங்கி நடைமுறைக் கணக்கில் குறைக்கப்(வரவு வைக்கப்)படும். இவ்வாறான நிலையில் வங்கிக் கூற்றில் நிலையியற் கட்டளையின் பெயரிலான கொடுப்பனவுகள் குறைக்கப்பட்டிருப்பினும் வணிகத்தின் வங்கிக் கணக்கில் அப்பெறுமானங்கள் செலவு பக்கத்தில் பதியப்படாதிருக்கும்.



எனவே வணிகத்தின் வங்கிக் கணக்கில் காட்டப்படும் மீதியானது வங்கிக் கூற்றில் காட்டப்படும் மீதியை விடக் கூடிய பெறுமானத்தைக் கொண்டிருக்கும்.

## 5. வங்கிக் கட்டணங்களும் காசோலை கட்டணங்களும்

நடைமுறைக் கணக்குரிமையாளருக்கு வங்கியினால் வழங்கப்படும் சேவைகளுக்காக வங்கியினால் நடைமுறைக்கணக்கிலிருந்து அறவிட்டுக் கொள்ளும் கட்டணங்களே வங்கிக் கட்டணங்களாகும். இதேபோன்று வங்கி வழங்கும் காசோலைப் புத்தகங்களுக்காக அறவிட்டுக் கொள்ளும் கட்டணம் காசோலைப் புத்தகக் கட்டணமாகும். வணிகத்திற்கு வங்கிக் கூற்று கிடைத்ததன் பின்னரே இவ்வாறான கட்டணங்கள் தொடர்பான விபரங்களை அறிந்துகொள்ளமுடியும். இவ்வாறு அறவிடப்பட்ட கட்டணங்களை வங்கிக் கூற்றின் கொடுப்பனவுகள் என (வரவு நிரலில்) பதியப்பட்டிருக்குமாயினும் வணிகத்தின் வங்கிக் கணக்கில் குறித்த காலம் முடியும் வரையில் இவை தொடர்பான விபரங்கள் பதியப்படாதிருக்கும்.



எனவே வணிகத்தின் வங்கிக் கணக்கில் காட்டப்படும் மீதியானது வங்கிக் கூற்றில் காட்டப்படும் மீதியை விடக் கூடிய பெறுமானத்தைக் கொண்டிருக்கும்.

மேற்காட்டிய முறையில் வணிகத்தின் ஏடுகளில் உள்ள வங்கிக் கணக்கின் இறுதி மீதிக்கும் வங்கிக் கூற்றில் காட்டப்படும் இறுதி மீதிக்கும் இடையே வேறுபாடு காணப்பட முடியும்.

வணிகத்தினது வங்கிக் கணக்கினையும் வங்கியினால் அனுப்பப்படும் வங்கிக் கூற்றினையும் ஒப்பிடுவதன் மூலமே மேற்காட்டிய வேறுபாடுகளை இனங்காண முடியும். இதற்கமைய வங்கிக் கணக்கிணக்கக் கூற்றினைத் தயாரிக்கும்போது முதலாவதாக வங்கிக் கணக்கினையும் வங்கிக் கூற்றினையும் ஒப்பிட்டு வேறுபாட்டை ஏற்படுத்திய காரணங்களை இணங்காணுதல் வேண்டும்.

இதற்காக

- வங்கிக் கணக்கின் வரவு நிரலை வங்கிக் கூற்றின் செலவு நிரலுடனும்
- வங்கிக் கணக்கின் செலவு நிரலை வங்கிக் கூற்றின் வரவு நிரலுடனும் ஒப்பிடுதல் வேண்டும்.

இங்கு வங்கிக் கணக்கிலுள்ள தொகைகள் ஒவ்வொன்றிலும் கவனஞ் செலுத்தி, அவை வங்கிக் கூற்றில் உள்ளடக்கப்பட்டுள்ளனவா என்பதைப் பரீசீலனை செய்தல் வேண்டும். அவ்வாறு வங்கிக் கணக்கு, வங்கிக் கூற்று ஆகிய இரண்டிலும் பதிவு செய்யப்பட்டுள்ள

தொகைகள் அடையாளமிடுதல் வேண்டும். இவ்வாறு அடையாளமிடப்பட்ட பின்னர் எஞ்சியுள்ள அடையாளமிடப்படாத கொடுக்கல் வாங்கல்களின் தொகைகளே இறுதி மீதிகளின் வேறுபாட்டுக்குரிய காரணங்களாகக் கருதப்படும்.

பின்வரும் பயிற்சியை நோக்குவதன் ஊடாக இது தொடர்பான விளக்கத்தினைப் பெற்றுக் கொள்வது இலகுவானதாக இருக்கும்.

உதாரணம் :-

இராணி வணிகத்தின் 20XX ஜூலை மாதத்திற்கான வங்கிக் கணக்கு வங்கிக் கூற்று என்பன பின்வருமாறு.

வரவு வங்கிக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | தொகை ரூ | திகதி | விபரம் | பே ப | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.07.01 | மீ.கீ.கொ.வ | | 15 000 | 20XX.07.06 | கடன்கொடுனர் இல (112) | | 10 000 |
| 07.05 | காசு வைப்பு | | 8 000 | 07.18 | கடன்கொடுனர் இல (113) | | 4 000 |
| 07.12 | காசோலை வைப்பு (65) | | 12 000 | 07.23 | கடன்கொடுனர் இல (114) | | 16 000 |
| 07.13 | காசோலை வைப்பு(46) | | 5 000 | 07.31 | மீ.கீ.கொ.செ | | 31 000 |
| 07.20 | காசு வைப்பு | | 7 000 | | | | |
| 07.28 | காசோலை வைப்பு இல (58) | | 14 000 | | | | |
| | | | 61 000 | | | | 61 000 |
| 08.01 | மீ.கீ.கொ.வ | | 31 000 | | | | |

20XX ஜுலை மாதத்திற்கான வங்கிக் கூற்று

| திகதி | விபரம் | வரவு ரூ | செலவு ரூ | மீதி ரூ |
|---|---|---|---|---|
| 20XX.07.01 | மீ.கீ.கொ.வ | | | 15 000 |
| 07.05 | காசு | | 8 000 | 23 000 |
| 07.07 | காசோலை 112 | 10 000 | | 13 000 |
| 07.15 | காசோலை 65 | | 12 000 | 25 000 |
| 07.16 | காசோலை 46 | | 5 000 | 30 000 |
| 07.18 | கடன்பட்டோர் நேரடி வைப்பு | | 11 000 | 41 000 |
| 07.20 | காசு வைப்பு | | 7 000 | 48 000 |
| 07.22 | காசோலை - 113 | 4 000 | | 44 000 |
| 07.25 | நிலையியல் கட்டளை(வங்கித் தவணைக்கட்டணம்) | 18 000 | | 26 000 |
| 07.31 | வங்கிகட்டணம் | 3 000 | | 23 000 |

மேற்காட்டிய உதாரணத்தில் காட்டப்பட்டுள்ளவாறு

20XX.07.31 ஆம் திகதியில் வணிகத்தின் வங்கிக் கணக்கில் அனுகூலமான மீதி ரூ. 31 000 ஆகக் காணப்படுகின்றது.

20XX.07.31 ஆம் திகதியில் வங்கிக் கூற்றில் காட்டப்பட்டுள்ள மீதி ரூ. 23 000மாகும்.

இரு மீதிகளுக்கிடையிலான பெறுமானங்கள் ஒன்றிற்கொன்று வேறுபட்டிருப்பதனால் வேறுபாட்டிற்கான காரணங்களைக் கண்டறிதல் வேண்டும். அது பின்வருமாறு காணப்படும்.

வரவு　　　　வங்கிக் கணக்கு　　　　செலவு

| திகதி | விபரம் | பே ப | தொகை. ரூ | திகதி | விபரம் | பே ப | தொகை. ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.07.01 | மீ.கீ.கொ.வ | | 15 000 ✓ | 20XX.07.06 | கடன்கொடுனர் இல 112 | | 10 000 ✓ |
| 07.05 | காசு வைப்பு | | 8 000 ✓ | 07.18 | கடன்கொடுனர் இல 113 | | 4 000 ✓ |
| 07.12 | காசோலைவைப்பு (65) | | 12 000 ✓ | 07.23 | கடன்கொடுனர் இல 114 | | 16 000 |
| 07.13 | காசோலைவைப்பு (46) | | 5 000 ✓ | 07.31 | மீ.கீ.கொ.செ | | 31 000 |
| 07.20 | காசு வைப்பு | | 7 000 ✓ | | | | |
| 07.28 | காசோலை இல (58) | | 14 000 | | | | |
| | | | 61 000 | | | | 61 000 |
| 08.01 | மீ.கீ.கொ.வ | | 31 000 | | | | |

20XX ஜுலை மாதத்திற்கான வங்கிக் கூற்று

| திகதி | விபரம் | வரவு | செலவு | மீதி |
|---|---|---|---|---|
| 20XX.07.01 | மீ.கீ.கொ.வ | | | 15 000 |
| 07.05 | காசு | | 8 000 ✓ | 23 000 |
| 07.07 | காசோலை 112 | 10 000 ✓ | | 13 000 |
| 07.15 | காசோலை 65 | | 12 000 ✓ | 25 000 |
| 07.16 | காசோலை 46 | | 5 000 ✓ | 30 000 |
| 07.18 | நேரடி வைப்பு கடன்பட்டோர் | | 11 000 | 41 000 |
| 07.20 | காசு வைப்பு | | 7 000 ✓ | 48 000 |
| 07.22 | காசோலை 113 | 4 000 ✓ | | 44 000 |
| 07.25 | நிலையியற் கட்டளை (பங்கு கடன் தவணைக் கட்டணம்) | 18 000 | | 26 000 |
| 07.31 | வங்கிக் கட்டணம் | 3 000 | | 23 000 |

மீதிகளுக்கிடையிலான வேறுப்பாட்டிற்கான காரணங்கள்

**01. வங்கிக் கணக்கின் வரவுப்பக்கத்துடன் வங்கிக் கூற்றின் செலவு நிரலை ஒப்பிடும் பொழுது**

- வைப்பிலிடப்பட்டதாயினும் வசூலிக்கப்படாத காசோலை (58) ரூ.14 000
- வங்கிக்கு நேரடியாகக் கிடைக்கப் பெற்ற கடன்பட்டோர் நேரடி வைப்பு ரூ. 11 000

**02. வங்கிக் கணக்கின் செலவுப்பக்கத்தை வங்கிக் கூற்றின் வரவு நிரலுடன் ஒப்பிடும் பொழுது**

- வங்கியில் சமர்ப்பிக்கப்படாத காசோலை (114) ரூ. 16 000

- வங்கிக் கணக்கில் பதிவுசெய்யப்படாத நிலையியற் கட்டளையின் பெயரிலான கொடுப்பனவுகள் (வங்கிக் கடன் தவணைக் கட்டணம்) ரூ. 18 000
- வங்கிக் கணக்கில் பதிவுசெய்யப்படாத ஆனால் வங்கியினால் அறவிடப்பட்ட வங்கிக் கட்டணம் ரூ. 3 000

இவ்வேறுபாட்டினை சீராக்கஞ்செய்து வங்கி மீதிகளை ஒப்பிடுவதற்காக இருபடி முறைகள் பின்பற்றப்படுதல் வேண்டும்.

- வணிகத்தினது வங்கிக் கணக்கு மீதியை சீராக்கஞ்செய்தல்.
- சீராக்கப்பட்ட வங்கி மீதியைப் பயன்படுத்தி வங்கிக் கணக்கிணக்கக் கூற்றைத் தயாரித்தல்.

### வங்கிக் கணக்கு மீதியைச் சீராக்கஞ்செய்தல்

வணிகத்தின் வங்கிக் கணக்கு மீதிக்கும் வங்கிக் கூற்று மீதிக்குமிடையே வேறுபாட்டினை ஏற்படுத்தும் காரணங்களுள் சில காரணங்கள் வங்கிக் கணக்கில் வழு அல்லது விடுபடுதல் போன்றவைகளால் ஏற்பட முடியும். இவ்வாறான தவறுகள் காரணமாக வங்கிக் கணக்கில் உள்ள மீதியில் வழுக்கள் ஏற்படுவது இயல்பாகும். எனவே அம்மீதியினை திருத்துதல் வேண்டும். அவ்வாறு திருத்தஞ் செய்தல் **வங்கிக் கணக்கு மீதிச் சீராக்கம்** என அழைக்கப்படும்.

மேற்காட்டிய உதாரணத்திற்கமைய பின்வரும் காரணங்களுக்கான பெறுமானங்கள் வங்கிக் கூற்றில் சீராக்கப்படல் வேண்டும்.

1. நேரடி வைப்புக்கள் (கடன்பட்டோர் நேரடியாக வைப்பிலிடுதல்)
2. நிலையியற் கட்டளையின் பெயரிலான கொடுப்பனவுகள் (வங்கிக் கடன் தவணைக் கட்டணம்)
3. வங்கியினால் அறவிடப்பட்ட சேவைக் கட்டணங்கள்



நேரடி வைப்புக்கள் மூலம் வங்கிக் கணக்கு மீதி அதிகரிக்கும். இதனால் நேரடி வைப்புக்கள் வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்படும்.

நிலையியற் கட்டளையின் பெயரில் இடம்பெற்ற கொடுப் பனவுகள், வங்கியினால் அறவிடப்பட்ட கட்டணங்கள் என்பன காரணமாக வங்கி மீதியானது குறைவடையும். எனவே வங்கிக் கணக்கில் நிலையியற் கட்டளையின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட கொடுப்பனவுகள், வங்கியினால் அறவிடப்பட்ட கட்டணம் என்பன செலவு வைக்கப்படும்.

மேற்காட்டிய முறையில் சீராக்கங்களை மேற்கொண்ட பின்னர் சீராக்கப்பட்ட வங்கி மீதி பெறப்படும்.

வழங்கப்பட்டுள்ள உதாரணத்திற்கமைய வங்கிக் கணக்கு சீராக்கப்படும் முறையினைப் பின்வருமாறு காட்ட முடியும்.

வரவு வங்கிக் கணக்கு(சீராக்கப்பட்ட) செலவு

| திகதி | விபரம் | பே ப | தொகை ரூ | திகதி | விபரம் | பே ப | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20xx.07.01 | மீ.கீ.கொ.வ | | 31 000 | 20xx.07.25 | வங்கிக்கடன் தவணைக் கட்டணம் | | 18 000 |
| 07.18 | நேரடி வைப்பு (கடன்பட்டோர்) | | 11 000 | 0731 | வங்கிக்கட்டணம் | | 3 000 |
| | | | | | மீ.கீ.கொ.செ | | 21 000 |
| | | | 42 000 | | | | 42 000 |
| | மீ.கீ.கொ.வ | | 21 000 | | | | |

சீராக்கப்பட்ட வங்கிக் கணக்கு மீதியைப் பயன்படுத்தி வங்கிக் கணக்கிணக்கக் கூற்றைத் தயாரித்தல்.

வங்கி மீதிகளில் வேறுபாட்டை ஏற்படுத்திய காரணங்களிலிருந்து சீராக்கப்பட்ட வங்கிக் கணக்கு மீதியைக் கணித்த பின்னர் பின்வரும் காரணங்கள் மட்டுமே எஞ்சியுள்ளன.

- வைப்பிலிடப்பட்டதாயினும் வசூலிக்கப்படாத காசோலைகளின் தொகைகள்.
- வழங்கப்பட்டதாயினும் வங்கியில் சமர்ப்பிக்கப்படாத காசோலைகளின் தொகைகள்.

மேற்கூறிய இரு காரணங்களும் வழுக்கள் அல்லது விடுபாடுகள் அல்ல. ஆகையால், இவ்விரு காரணங்களும் வங்கிக் கணக்கில் சீராக்கஞ் செய்யப்படவில்லை.

எனவே, எஞ்சியுள்ள இவ்விரு விடயங்களை உள்ளடக்கி வங்கிக் கணக்கின் சீராக்கப்பட்ட மீதியை வங்கிக் கூற்று மீதியுடன் ஒப்பிட்டறிவதற்காக இணக்கக் கூற்று தயாரிக்கப்படல் வேண்டும்.இதுவே வங்கிக் கணக்கிணக்கக் கூற்று என்று அழைக்கப்படும்.
இதற்கமைய வங்கிக் கணக்கிணக்கக் கூற்றைத் தயாரிப்பதன் மூலம் வங்கி மீதிகளின் சரியான தன்மையை உறுதிப்படுத்திக் கொள்ள முடியும். இதற்கமைவாக,



வழங்கப்பட்டதாயினும் அக்கால வரையறையினுள் வங்கியில் சமர்ப்பிக்கப்படாத காசோலைகள் இருப்பதனால் வங்கிக் கூற்றில் காணப்படும் மீதியை விட வங்கிக் கணக்கு மீதியானது குறைவாக இருக்கும். எனவே வங்கியில் சமர்ப்பிக்கப்படாத காசோலைகளை வங்கிக் கணக்கில் சீராக்கப்பட்ட மீதியுடன் கூட்டுதல் வேண்டும்.

வைப்பிலிடப்பட்டதாயினும் குறித்த காலப்பகுதியினுள் வசூலிக்கப்படாத காசோலைகளும் இருப்பதனால் வங்கிக் கணக்கு மீதியானது வங்கிக் கூற்று மீதியை விட அதிகமாக இருக்கும். எனவே சீராக்கப்பட்ட மீதியிலிருந்து வசூலிக்கப்படாத காசோலைகளின் பெறுமானங்களைக் கழித்தல் வேண்டும்.

வங்கிக் கணக்கிணக்கக் கூற்றைத் தயாரிக்கும்பொழுது வங்கிக் கூற்றில் குறிப்பிடப்படும் மீதி பெறப்படும்.

வழங்கப்பட்டுள்ள உதாரணத்தின்படி சீராக்கப்பட்ட வங்கி மீதியைப்பயன்படுத்தி வங்கிக் கணக்கிணக்கக் கூற்றினைப் பின்வருமாறு தயாரிக்க முடியும்.

இராணி வணிகத்தின்
20XX ஜீலை மாதத்திற்கான வங்கிக் கணக்கிணக்கக் கூற்று பின்வருமாறு

| | | |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| சீராக்கப்பட்ட வங்கி மீதி | | 21 000 |
| கூட்டு : | | |
| வங்கியில் சமர்ப்பிக்கப்படாத காசோலை (114) | 16 000 | 16 000 |
| | | 37 000 |
| கழி : | | |
| வசூலிக்கப்படாத காசோலை (58) | 14 000 | 14 000 |
| 20XX.07.31 ஆம் திகதியிலான வங்கிக் கூற்று மீதி | | 23 000 |

இதற்கமைய வணிகமொன்றின் யாதேனும் காலப்பகுதிக்குரிய வங்கிக் கணக்கு மீதியுடன் வங்கிக் கூற்று மீதி சமப்படாதிருப்பின் அம்மீதிகளை ஒப்பிடுவதற்காக பின்பற்றப்பட வேண்டிய படிமுறைகளைக் கீழே காட்டப்பட்டுள்ளவாறு சுருக்கமாகக் குறிப்பிட முடியும்.

- வணிகத்தின் வங்கிக் கணக்கின் இறுதி மீதிக்கும் வங்கிக் கூற்றில் உள்ள இறுதிமீதிக்குமிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றனவா என்பதைக் கண்டறிதல்.
- வங்கி மீதிகளுக்கிடையே வேறுபாடுகள் காணப்படுமாயின் வங்கிக் கணக் கினையும் வங்கிக் கூற்றினையும் ஒப்பிட்டு அவ்வேறுபாட்டிற்குரிய காரணங்களை அறிந்து கொள்ளல் வேண்டும்.
- வணிகத்தின் வங்கிக் கணக்கின் இறுதி மீதியினைச் சீராக்கம் செய்தல்.
- சீராக்கப்பட்ட வங்கி மீதியினைப் பயன்படுத்தி வங்கிக் கணக்கிணக்கக் கூற்றைத் தயாரித்தல்.

## செயற்பாடு 03

கதிரேசன் வணிகத்தின் 20XX ஜுலை மாதத்தின் வங்கிக் கணக்கில் அனுகூலமான மீதியாக ரூ. 45 000 காணப்பட்டது. வங்கிக் கூற்று வேறு மீதியைக் காட்டியது. வேறுபாட்டிற்குரிய காரணங்கள் பின்வருமாறு

1. வைப்பிலிடப்பட்ட பின்வரும் காசோலைகள் 20XX-07-31 வரையில் தேறாதவைகளாக இருந்தன.

| | |
|---|---|
| காசோலை இலக்கம் 48 | ரூ. 7 500 |
| காசோலை இலக்கம் 94 | ரூ. 8 600 |

2. வழங்கப்பட்ட பின்வரும் காசோலைகள் 20XX-07-31 வரையில் வங்கியில் சமர்ப்பிக்கப்படவில்லை.

| | |
|---|---|
| காசோலை இலக்கம் 45 | ரூ. 11 400 |
| காசோலை இலக்கம் 49 | ரூ. 8 600 |

3. வங்கிக் கூற்றில் காணப்பட்ட பின்வரும் விடயங்கள் வணிகத்தின் வங்கிக் கணக்கில் காணப்படாதிருந்தன.

நிலையியற் கட்டளையினடிப்படையில் வங்கியின் மூலம் செலுத்திய காப்புறுதித் தவணைக் கட்டணம் ரூ. 8 000

வங்கிக்கு நேரடியாகச் செலுத்தப்பட்ட முதலீட்டு வருமானம் ரூ. 4200
வங்கியினால் அறவிடப்பட்ட வங்கிக் கட்டணம் ரூ. 2500

1. வங்கிக் கணக்கைச் சீராக்குதல் (திருத்திய காசேடு)
2. வங்கிக் கணக்கின் சீராக்கப்பட்ட மீதியைப் பயன்படுத்தி வங்கிக் கூற்றின் 20XX-07-31 ஆம் திகதியன்று உள்ளவாறான மீதியை அறிவதற்கு வங்கிக் கணக்கிணக்கக் கூற்றைத் தயாரிக்கவும்.



## செயற்பாடு 04

சியாம் வணிகத்தின் 20XX-05-31 ஆம் திகதியில் பெயர்த்தெடுக்கப்பட்ட வங்கிக் கணக்கும் வங்கியினால் அவருக்கு அனுப்பப்பட்ட வங்கிக்கூற்றும் பின்வருமாறு.

**வங்கிக் கணக்கு**

| திகதி | விபரம் | தொகை ரூ | திகதி | விபரம் | தொகை ரூ |
|---|---|---|---|---|---|
| 20XX.05.01 | மீதி.கீ.கொ.வ | 16 000 | 20XX.05.04 | காசோலை வழங்கல் | |
| 05.06 | காசு | 20 000 | 05.09 | சம்பளம் (501) | 8 500 |
| 05.12 | காசோலைவைப்பு142 | 14 000 | 05.18 | கடன் கொடுனர்(502) | 17 500 |
| 05.24 | காசோலை வைப்பு234 | 15 000 | 05.26 | வாடகை (503) | 9 000 |
| 05.29 | காசோலைவைப்பு184 | 18 000 | | கொள்வனவு (505) | 12 000 |
| | | | 05.27 | கடன்கொடுனர் (506) | 17 000 |
| | | | 05.31 | மீதி.கீ.கொ.செ | 19 000 |
| | | 83 000 | | | 83 000 |
| 06.01 | மீதி.கீ.கொ.வ | 19 000 | | | |

**வங்கிக்கூற்று**

சியாம் மொகமட்
இலக்கம்: 45
வரகாபொல

மக்கள் வங்கி
வரகாபொல கிளை

| திகதி | விபரம் | வரவு ரூ | செலவு ரூ | மீதி ரூ |
|---|---|---|---|---|
| 20XX.05.01 | மீதி.கீ.கொ.வ | | | 16 000 |
| 20XX.05.06 | காசு வைப்பு | | 20 000 | 36 000 |
| 20XX.05.10 | காசோலை கொடுப்பனவு 501 | 8 500 | | 27 500 |
| 20XX.05.12 | காசோலை கொடுப்பனவு 503 | 17 500 | | 10 000 |
| 20XX.05.14 | காசோலை வைப்பு 142 | | 14 000 | 24 000 |
| 20XX.05.15 | நிலையியற் கட்டளை (வங்கிக்கடன்) | 19 000 | | 5 000 |
| 20XX.05.26 | காசோலை வைப்பு 234 | | 15 000 | 20 000 |
| 20XX.05.27 | நேரடிவைப்பு | | 8 000 | 28 000 |
| 20XX.05.28 | காசோலை கொடுப்பனவு 505 | 12 000 | | 16 000 |
| 20XX.05.30 | வங்கிக்கட்டணம் | 2 000 | | 14 000 |

பின்வருவனவற்றைத் தயாரிக்குக.

1. 20XX.05.31 ஆம் திகதியில் மீதிகளின் வேறுப்பாட்டிற்குக் காரணமாய் அமைந்த விடயங்களை காட்டுதல்.

2. 20XX.05.31 ஆம் திகதியில் வங்கிக் கணக்கு மீதியினை சீராக்கம் செய்தல்.

3. சீராக்கப்பட்ட வங்கிக் கணக்கின் மீதியைப் பயன்படுத்தி வங்கிக் கணக்கிணக்க கூற்றைத் தயாரித்தல்.



## செயற்பாடு 05

வங்கியில் நடைமுறைக்கணக்கொன்றைப் பேணி மேற்கொள்ளப்பட்ட கொடுக்கல் வாங்கல்களை உள்ளடக்கி பெறப்பட்ட வங்கிக் கணக்கு மீதியும் அதே வேளை வங்கியினால் 20XX மார்ச் மாதத்திற்கான வங்கிச் கூற்றொன்று உங்களுக்கு அனுப்பப்பட்டுள்ளது எனக் கருதிக் கொள்க. வங்கிக் கூற்றில் காட்டப்படும் இறுதி மீதியை விட உங்களால் தயாரிக்கப்பட்ட வங்கிக் கணக்கின் இறுதி மீதியானது கூடிய பெறுமானத்தைக் கொண்டுள்ளமை இனங்காணப்பட்டது.

1. வங்கிக் கணக்கு மீதிக்கும் வங்கிக் கூற்றில் காட்டப்படும் மீதிக்குமிடையே வேறுபாடு காணப்படுவதற்குரிய காரணங்கள் எவையெனக் குறிப்பிடுக.

2. வங்கிக் கூற்று மீதியானது வங்கிக் கணக்கு மீதியை விட அதிகமாக இருப்பதாயின் அவ்வாறு ஏற்படுவதற்கு தாக்கஞ் செலுத்தக்கூடிய காரணங்களை மேலே குறிப்பிட்ட காரணங்களிலிருந்து தெரிவு செய்து எழுதுக.

# 10 கொள்வனவு நாட்குறிப்பு, விற்பனை நாட்குறிப்பு மற்றும் பொது நாட்குறிப்பேடு



இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்

10.1 கொள்வனவு நாட்குறிப்பு
- கொள்வனவு நாட்குறிப்பைத் தயாரிப்பதற்குரிய மூல ஆவணங்கள்
- கொள்வனவு நாட்குறிப்பில் பதிவு செய்யப்பட்ட கொடுக்கல் வாங்கல்களைப் பேரேடுகளுக்கு மாற்றுதல்.

10.2 விற்பனை நாட்குறிப்பு
- விற்பனை நாட்குறிப்பைத் தயாரிப்பதற்குரிய மூல ஆவணங்கள்
- விற்பனை நாட்குறிப்பில் பதிவு செய்யப்பட்ட கொடுக்கல் வாங்கல்களைப் பேரேடுகளிற்கு மாற்றுதல்.

10.3 பொது நாட்குறிப்பேடு

10.4 தொழினுட்ப முறைகளைப் பயன்படுத்தி மேற்கொள்ளும் துரித பணக் கொடுக்கல் வாங்கல்கள்.

## 10.1 கொள்வனவு நாட்குறிப்பு

வணிகமொன்று மீள் விற்பனை செய்யும் நோக்கில் பொருள்களைக் கொள்வனவு செய்யும். இப்பண்டங்கள் காசு அடிப்படையில் அல்லது கடன் அடிப்படையில் கொள்வனவு செய்யப்படலாம். கடன் அடிப்படையில் கொள்வனவு செய்யப்படும் மீள் விற்பனைப் பொருள்கள் தொடர்பாக பிரத்தியேகமான ஏடொன்றில் பதிவு செய்யப்படல் வேண்டும். இதற்காகப் பயன்படுத்தப்படும் மூல ஏடே கொள்வனவு நாட்குறிப்பு ஆகும். இது கொள்வனவு நாளேடு எனவும் அழைக்கப்படும்.

கடனுக்குக் கொள்வனவு செய்யும் மீள்விற்பனைப் பொருள்களை முதலில் பதிவு செய்யும் ஏடே ''கொள்வனவு நாட்குறிப்பு'' எனப்படும்.

உதாரணம் :-

- ☆ எழுதுகருவிப் பொருள்களைக் கொள்வனவு செய்து மீள் விற்பனை செய்யும் வணிகமொன்றாயின் எழுதுகருவிப் பொருள்களைக் கடனுக்குக் கொள்வனவு செய்தல் கொள்வனவு நாட்குறிப்பில் பதிவு செய்யப்படும்.
- ☆ மோட்டார் வாகனத்தைக் கொள்வனவு செய்து மீள விற்பனை செய்யும் வணிகமொன்றாயின் கடனுக்கு மோட்டார் வாகனத்தைக் கொள்வனவு செய்தல் கொள்வனவு நாட்குறிப்பில் பதியப்படும்.

கடனுக்குப் பொருள்களைக் கொள்வனவு செய்யும்போது பொருள்களை வழங்கும் பிரிவினர்களை வழங்குனர்கள் அல்லது வியாபாரக் கடன்கொடுத்தோர் என அழைப்பர். வியாபாரக் கடன்கொடுத்தோருக்குச் செலுத்த வேண்டிய தொகை வணிகத்திற்குப் பொறுப்பாகும். கடனுக்கு வழங்கப்படும் பொருள்களின் விபரங்களை உள்ளடக்கிய மூல ஆவணம் ஒன்று தயாரிக்கப்பட்டு வணிக நிறுவனங்களிற்கு அனுப்பப்படும். வழங்குனரால் அனுப்பப்படும், அத்தகைய ஆவணம் ''கொள்வனவுப் பட்டியல்'' என அழைக்கப்படும். அக்கொள்வனவுப் பட்டியலின் அடிப்படையில் கடன் கொள்வனவை முதலில் கொள்வனவு நாட்குறிப்பில் பதிய வேண்டும். அதன் பின்னர் குறிப்பிட்ட காலத்திற்குள் அக்கொடுக்கல் வாங்கல்கள் பேரேட்டிற்கு மாற்றப்படும்.

பட்டியலின் மாதிரி அமைப்பு கீழே காட்டப்பட்டுள்ளது. அதனை அவதானிக்கவும்.

பட்டியல் இல 120

ராஜன் புத்தகசாலை
இல 48, காலி வீதி
வெள்ளவத்தை
தொலைபேசி ៖ 011-2895942

முகாமையாளர்,
றிஸ்மி புத்தக நிலையம்
மகரகம.

உங்கள் இல A/485, 20XX. 02. 01 ஆம் திகதி கொண்ட கட்டளைக்கமைய

| தொடர் இல | விபரம் | அளவு | ஓர் அலகு விலை. | மொத்தம் |
|---|---|---|---|---|
| | அப்பியாசப் புத்தகம் | 40 | 100 | 4 000 |
| | CR புத்தகம் | 200 | 130 | 26 000 |
| | சித்திர அப்பியாச புத்தகம் | 120 | 60 | 7 200 |
| | | | | 37 200 |
| | கழி 10% வியாபாரக் கழிவு | | | 3 720 |
| | | | | 33 480 |

(அனைத்துக் காசோலைகளும் ராஜன் புத்தகசாலை எனும் பெயருக்கு எழுதி குறுக்குக் கோடிடல் வேண்டும்.)
விற்பனை நிபந்தனை ៖ 5/30/தேறிய 60

ராஜன்
.............................................
முகாமையாளர்

பட்டியலில் குறிப்பிடப்பட்ட விற்பனை நிபந்தனை 5/30/ தேறிய /60 என்பதன் கருத்து பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள முழுப்பெறுமதியும் 60 நாட்களுக்குள் செலுத்தப்பட வேண்டும் எனவும் 30 நாட்களிற்குள் முழுத்தொகையும் செலுத்தப்படின் 5% கழிவு வழங்கப்படும் என்பதைக் குறிக்கும்.

பண்டங்கள் கடனுக்குக் கொள்வனவு செய்யும்போது பட்டியல் விலையிலிருந்து குறைக்கப்படும் பெறுமானம் ''**வியாபாரக் கழிவு**'' என அழைக்கப்படும். வியாபாரக் கழிவானது பட்டியலில் மட்டுமே கழித்துக் காட்டப்படும். அதனைக் கணக்குகளில் பதிவு செய்வதில்லை. ஒவ்வொரு பட்டியலிலும் குறிக்கப்பட்ட பெறுமானத்திலிருந்து வியாபாரக் கழிவு கழித்த பின்னர் கிடைக்கும் தேறிய பெறுமானமே கொள்வனவு நாட்குறிப்பில் பதிவு செய்யப்படும்.

கொள்வனவு நாட்குறிப்பேடு ஒன்றினது மாதிரி வடிவம் கீழே தரப்பட்டுள்ளது.

கொள்வனவு நாட்குறிப்பேடு

| திகதி | பட்டியல் இலக்கம் | வழங்குனர் | மொத்தப் பெறுமதி ரூ. | பேரேட்டுப் பக்கம் |
|---|---|---|---|---|
| | | | | |

உதாரணம் :-

எழுதுகருவிகளைக் கொள்வனவு செய்து மீள விற்பனை செய்யும் நிபுனி வணிகத்தின் தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

20xx.03.01 பட்டியல் இலக்கம் 115 இன் அடிப்படையில் நிமாலிடம் கொள்வனவு செய்யப்பட்ட பொருள்களினது பட்டியலின் தேறிய பெறுமதி ரூ.22 000 ஆகும்.

20xx.03.10 பட்டியல் இலக்கம் 65 இன் அடிப்படையில் அனிதாவிடம் கொள்வனவு செய்யப்பட்ட பொருள்களினது பட்டியலின் தேறிய பெறுமதி ரூ. 28 000.

20xx.03.20 பட்டியல் இல 43 இன் அடிப்படையில் பூர்ணிமா வணிகத்திடமிருந்து கொள்வனவு செய்யப்பட்ட பண்டங்களின் பட்டியலின் தேறிய பெறுமதி ரூ. 26 000.

20xx.03.25 பட்டியல் இல 48 இன் அடிப்படையில் பூர்ணிமா வணிகத்திடமிருந்து கொள்வனவு செய்யப்பட்ட பண்டங்களின் பட்டியலின் தேறிய பெறுமதி ரூ. 12 000.

கொள்வனவு நாட்குறிப்பில் பதிவு செய்யப்பட்ட முறை கீழே காட்டப்பட்டுள்ளது.

கொள்வனவு நாட்குறிப்பு

| திகதி | பட்டியல் இல | வழங்குனர் | மொத்த பெறுமதி ரூ. | பே.ப |
|---|---|---|---|---|
| 20xx.03.01 | 115 | நிமால் | 22 000 | |
| 03.10 | 65 | அனித்தா | 28 000 | |
| 03.20 | 43 | பூர்ணிமா வணிகம் | 26 000 | |
| 03.25 | 48 | பூர்ணிமா வணிகம் | 12 000 | |
| 03.31 | | கொள்வனவு கணக்கிற்கு மாற்றியது | 88 000 | |

கொள்வனவு நாட்குறிப்பில் பதிவுசெய்யப்பட்ட கொடுக்கல் வாங்கல்களை பேரேட்டுக் கணக்குகளிற்கு மாற்றும் முறை.

கொள்வனவு நாட்குறிப்பில் மொத்தக் கூட்டுத்தொகை கொள்வனவுக் கணக்கில் வரவு வைக்கப்படுவதோடு ஒவ்வொரு பெறுமானங்களும் வெவ்வேறாக உரிய கடன் கொடுத்தோர் கணக்குகளில் செலவு வைக்கப்படல் வேண்டும். கொள்வனவுக் கணக்கானது பொதுவாக செலவுக் கணக்கொன்றாகக் கருதப்படும். எனவே செலவுக் கணக்கு ஒன்றின் கொடுக்கல் வாங்கல்கள் பதிவுசெய்யும் விதிமுறை இங்கு பின் பற்றப்படும்.

செலவுக் கணக்கொன்றின் அதிகரிப்பு அக்கணக்கின் வரவுப் பக்கத்தில் பதிவு செய்யப்படுவதால் கொள்வனவு நாட்குறிப்பின் கூட்டுத்தொகை கொள்வனவுக் கணக்கில் வரவு வைக்கப்படும். கடன் கொடுத்தோர் கணக்குகள் பொறுப்புக் கணக்கு களாகும். எனவே பொறுப்புக்கள் அதிகரித்தல் செலவு என்னும் இரட்டைப் பதிவு விதி முறையின் அடிப்படையில் கடன் கொடுத்தோர் கணக்குகளில் செலவு வைக்கப்படும்.

இதற்கிணங்க கொள்வனவு நாட்குறிப்பில் பதியப்பட்ட பெறுமானங்கள் கீழே காட்டியவாறு பேரேடுகளில் பதியப்படும்.

வரவு கொள்வனவுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | மொத்தப் பெறுமதி ரூ | திகதி | விபரம் | பே ப | மொத்தப் பெறுமதி ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20xx.03.31 | கடன் கொடுனர் | | 88 000 | | | | |

வரவு நிமால் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | மொத்தப் பெறுமதி ரூ | திகதி | விபரம் | பே ப | மொத்தப் பெறுமதி ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20xx.03.01 | கொள்வனவு | | 22 000 |

வரவு அனிதா கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | மொத்தப் பெறுமதி ரூ | திகதி | விபரம் | பே ப | மொத்தப் பெறுமதி ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20xx.03.10 | கொள்வனவு | | 28 000 |

வரவு | பூர்ணிமா வணிகக் கணக்கு | செலவு

| திகதி | விபரம் | பே ப | மொத்தப் பெறுமதி ரூ. | திகதி | விபரம் | பே ப | மொத்தப் பெறுமதி ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20xx.03.20 | கொள்வனவு | | 26 000 |
| | | | | 03.25 | கொள்வனவு | | 12 000 |

## செயற்பாடு 01

கீழே தரப்பட்ட இந்திரன் வணிகத்தின் கொள்வனவு நாட்குறிப்பை தயாரித்து பேரேட்டிற்கு மாற்றுக.

| திகதி | பட்டியல் இல | வழங்குனர்கள் | பட்டியலின் படி பெறுமானங்கள் ரூ. |
|---|---|---|---|
| 20xx.05.06 | 82 | மொகமட் | 15 000 |
| 05.12 | 45 | பிரதீபன் | 18 000 |
| 05.20 | 36 | செல்வம் | 34 000 |
| 05.26 | 73 | நித்தியா | 9 000 |
| 05.28 | 94 | பாத்திமா | 20 000 |

## செயற்பாடு 02

கீழே தரப்பட்ட தகவல்களின் அடிப்படையில் செவ்வந்தி வணிகத்தின் 20XX மே மாதத்தில் இடம்பெற்ற கொள்வனவுகளை கொள்வனவு நாட்குறிப்பில் பதிவு செய்து 20XX.05.31 உரிய பேரேட்டுக் கணக்குகளுக்கு மாற்றுக

| திகதி | பட்டியல் இல | வழங்குனர்கள் | ஏனைய விபரங்கள் |
|---|---|---|---|
| 20XX.05.06 | 65 | சிறில் | ஒன்று ரூ. 200 வீதம் அச்சிடல் கடதாசிப் பொதி 20 (வியாபாரக் கழிவு10%) |
| 20XX.05.12 | 38 | சுனில் | ஒன்று ரூ. 250 வீதம் நிழற் பிரதிக் கடதாசிப் பொதி 30 (வியாபாரக்கழிவு 5%) |
| 20XX.05.15 | 43 | ரணில் | ஒன்று ரூ. 400 வீதம் 30 கணிப்பான். |
| 20XX.05.20 | 68 | பியல் | ஒன்று ரூ. 240 வீதம் A4 கடதாசிப் பொதி 20 (வியாபாரக் கழிவு 10%) |
| 20XX.05.28 | 40 | சுனில் | ஒன்று ரூ. 400 வீதம் 20 கணிப்பான் |

## 10.2 விற்பனை நாட்குறிப்பு

வணிகமொன்றில் மீள் விற்பனைக்காகவுள்ள பொருள்கள் காசு அடிப்படையிலும் கடன் அடிப்படையிலும் விற்பனை செய்யப்படலாம். அவ்வகையில், கடன் விற்பனைகள் பிரத்தியேகமான ஏடொன்றில் பதிவு செய்யப்படல் வேண்டும். இதற்காகப் பயன்படுத்தப்படும் மூல ஏடு ''விற்பனை நாட்குறிப்பு'' அல்லது ''விற்பனை நாளேடு'' எனப்படும்.

பொருள்களைக் கடனுக்கு விற்பனை செய்யும்போது கடன் விற்பனை செய்யும் நிறுவனத்தினால் பட்டியல் ஒன்று தயாரிக்கப்பட்டு வழங்கப்படும். இதனை ''**விற்பனைப்பட்டியல்**'' என அழைப்பர். இதன் பிரதி ஒன்று வணிக நிறுவனத்தில் வைத்திருக்கப்படும். விற்பனை நாட்குறிப்பில் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவதற்கு மூல ஆவணமாக இப்பட்டியலின் பிரதியே பயன்படுத்தப்படும்.

வணிக நிறுவனங்களால் கடனுக்கு விற்பனை செய்யப்படும் மீள் விற்பனை பண்டங்களை முதன் முதலில் பதியும் ஏடே விற்பனை நாட்குறிப்பு ஆகும்.

கடனுக்குப் பண்டங்களை விற்பனை செய்யும்போது பட்டியல் விலையிலிருந்து குறிப்பிட்ட வீதமொன்று குறைக்கப்படுமாயின். இதனை **வியாபாரக் கழிவு** என அழைப்பர். வியாபாரக் கழிவைக் கழித்த பின்னர் பெறப்படும் தேறிய தொகையே விற்பனை நாட்குறிப்பில் பதியப்படும். விற்பனை நாட்குறிப்பில் பதியப்படும் கொடுக்கல் வாங்கல்கள் குறிப்பிட்ட கால இறுதியினுள் பேரேட்டிற்கு மாற்றப்படும்.

உதாரணம் :-

சில்லறை முறையில் பண்டங்களை விற்கும் அமரசிங்க வணிகத்தினால் வழங்கப்பட்ட பட்டியலின் தேறிய பெறுமதிகள் கீழே தரப்பட்டுள்ளன

| திகதி | பட்டியல் இல | கொள்வனவாளர் | மொத்தத் தொகை (ரூ.) |
|---|---|---|---|
| 20xx.05.02 | 35 | இரட்ணம் | 5 000 |
| 05.08 | 36 | சுனில் | 12 000 |
| 05.10 | 37 | இரட்ணம் | 8 000 |
| 05.21 | 38 | உதயா | 13 000 |
| 05.23 | 39 | றில்வான் | 17 000 |
| 05.25 | 40 | உதயா | 6 000 |
| 05.28 | 41 | றில்வான் | 7 000 |

20xx.05.31 முடிவடைந்த மாதத்திற்கான விற்பனை நாட்குறிப்பைத் தயாரித்துப் பேரேட்டுக் கணக்குகளிற்கு மாற்றுக.

விற்பனை நாட்குறிப்பு

| திகதி | பட்டியல் இல | கொள்வனவாளர் | முழுத்தொகை ரூ. | பேரேட்டுப் பக்கம் |
|---|---|---|---|---|
| 20xx.05.02 | 35 | இரட்ணம் | 5 000 | |
| 05.08 | 36 | சுனில் | 12 000 | |
| 05.10 | 37 | இரட்ணம் | 8 000 | |
| 05.21 | 38 | உதயா | 13 000 | |
| 05.23 | 39 | றில்வான் | 17 000 | |
| 05.25 | 40 | உதயா | 6 000 | |
| 05.28 | 41 | றில்வான் | 7 000 | |
| 05.31 | | விற்பனைக் கணக்கிற்கு மாற்றியது | 68 000 | |

வரவு — விற்பனைக் கணக்கு — செலவு

| திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ | திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 20xx.05.31 | கடன்பட்டோர் | | 68 000 |

வரவு — இரட்ணம் கணக்கு — செலவு

| திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ | திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20xx.05.02 | விற்பனை | | 5 000 | | | | |
| 05.10 | விற்பனை | | 8 000 | | | | |

வரவு — சுனில் கணக்கு — செலவு

| திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ | திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20xx.05.08 | விற்பனை | | 12 000 | | | | |

வரவு உதயா கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ. | திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20xx.05.21 | விற்பனை | | 13 000 | | | | |
| 05.25 | விற்பனை | | 6 000 | | | | |

வரவு றில்வான் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ. | திகதி | விபரம் | பே ப | பெறுமதி ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20xx.05.23 | விற்பனை | | 17 000 | | | | |
| 05.28 | விற்பனை | | 7 000 | | | | |



### செயற்பாடு 03

சிரஞ்சீவி வணிகத்தின் மூல ஆவணக் கோவை கீழே தரப்பட்டுள்ளது.

நிர்மலா வணிகம்

மட்டக்களப்பு

பாத்திமா வணிகம்

அக்கரைப்பற்று

பட்டியல் இல : 1820

திகதி :- 20XX.03.02

பட்டியல்

| தொடர் இல | பண்டங்களின் விபரம் | அளவு | அலகு ஒன்றின் விலை | மொத்தப் பெறுமதி ரூ |
|---|---|---|---|---|
| 01 | தொலைக்காட்சி | 10 | 15 000 | 150 000 |
| 02 | கணினி | 10 | 30 000 | 300 000 |
| | | | | 450 000 |
| | வியாபாரக் கழிவு 10% | | | (45 000) |
| | | | | 405 000 |

20XX.04.30 க்கு முன் பணம் செலுத்தப்படின் கழிவு 4%.

ராஜன்

.........................

விற்பனை முகாமையாளர்

நிர்மலா வணிகம்
மட்டக்களப்பு

ஹரிணி வணிகம், இலக்கம் :- 1821
வெள்ளவத்தை. திகதி :- 20XX.03.16

பட்டியல்

| தொடர் இல | பண்டங்களின் விபரம் | அளவு | அலகு விலை ரூ. | மொத்தப் பெறுமதி ரூ. |
|---|---|---|---|---|
| 01 | கசெற்று றெக்கோடர் | 20 | 3 000 | 60 000 |
| 02 | வானொலி | 30 | 2 000 | 60 000 |
| | | | | 120 000 |
| | வியாபாரக் கழிவு 5% | | | (6 000) |
| | | | | 114 000 |

20xx.04.30 இற்கு முன் பணம் செலுத்தப்படின் கழிவு 4%

ராஜன்
........................................
விற்பனை முகாமையாளர்

நிர்மலா வணிகம்
மட்டக்களப்பு

கிருபா வியாபாரம்
பருத்தித்துறை

இல :- 1822
திகதி :- 20xx.03.18

பட்டியல்

| தொடர் இல | பண்டங்களின் விபரம் | அளவு | அலகு விலை ரூ. | மொத்தப் பெறுமதி ரூ. |
|---|---|---|---|---|
| 01 | பிரதி செய்யும் கருவி | 08 | 50 000 | 400 000 |
| 02 | தொலைக்காட்சி | 10 | 20 000 | 200 000 |
| | | | | 600 000 |

20xx.04.30 இற்கு முன் பணம் செலுத்தப்படின் கழிவு 4%

ராஜன்
...................................
விற்பனை முகாமையாளர்

1. கீழே காட்டப்பட்டுள்ள மாதிரிக்கு அமைவாக விற்பனை நாட்குறிப்பைத் தயாரிக்குக.

| திகதி | பட்டியல் இலக்கம் | கொள்வனவாளர் | பெறுமதி | பேரேட்டுப் பக்கம் |
|---|---|---|---|---|
| | | | | |

2. உரிய பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்குக.

## 10.3 பொது நாட்குறிப்பேடு

வணிகமொன்றில் நாளாந்தம் நிகழும் கொடுக்கல் வாங்கல்களை மூல ஏடுகளான காசேடு, சில்லறைக் காசேடு, கொள்வனவு நாட்குறிப்பு, விற்பனை நாட்குறிப்பு போன்ற மூல ஏடுகளில் பதிவு செய்யும் முறை பற்றி மேலே கலந்துரையாடப்பட்டது. இத்தகைய ஏடுகள் ஒவ்வொன்றிலும் குறிப்பிட்ட ஒரு வகையான கொடுக்கல் வாங்கல்கள் மட்டுமே பதிவு செய்யப்படுகின்றன. ஆகையால், இவை ''விசேட நாட்குறிப்புக்கள்'' எனப்படும்.

உதாரணம் :-

விற்பனைப் பொருள்களை கடனிற்கு விற்பனை செய்வதைப் பதிவு செய்வதற்காக மட்டுமே விற்பனை நாட்குறிப்பு பயன்படுத்தப்படும்.

மேற்குறிப்பிட்ட மூல ஏடுகளில் பதிவுசெய்யப்படும் கொடுக்கல் வாங்கல்களின் வகைகளிற்கு மேலதிகமாக வேறுபட்ட வகையான கொடுக்கல் வாங்கல்களும் வணிகங்களில் இடம்பெற முடியும். உதாரணமாக ஏற்கனவே குறிப்பிட்ட மூல ஏடுகளில் கீழ் வரும் கொடுக்கல் வாங்கல்களை பதிவு செய்ய முடியாது.

உதாரணம் :-

- வணிகத்தின் பயன்பாட்டிற்கென இயந்திரமொன்றைக் கடனுக்குக் கொள்வனவு செய்தல்.
- வணிகத்தை விரிவுபடுத்தும் நோக்கில் கடனுக்குக் காணி ஒன்றினைக் கொள்வனவு செய்தல்.
- உரிமையாளர் தனது சொந்தத் தேவைக்காகப் பண்டங்களைப் பற்றுதல்.

இத்தகைய கொடுக்கல் வாங்கல்களைப் பதிவதற்குத் தனியான மூல ஏடு ஒன்றைப் பேணுவது அவசியமாகும். இவற்றைப் பதிவதற்காகப் பயன்படும் மூல ஏடே ''**பொது நாட்குறிப்பேடு**'' என அழைக்கப்படும். இதற்கமைய, மேலே குறிப்பிட்ட மூல ஏடுகளான விசேட ஏடுகளில் பதிவு செய்யப்படாத கொடுக்கல் வாங்கல்களை முதலாவதாகப் பதிவுசெய்யும் ஏடு பொது நாட்குறிப்பேடு எனப்படும்.

பொது நாட்குறிப்பேட்டில் பதியப்படும் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்வதற்குப் பயன்படுத்தப்படும் மூல ஆவணம் பொது நாட்குறிப்பேட்டுக் கைச் சாத்தாகும். வணிகமொன்றினால் பேணப்படும் பொது நாட்குறிப்பேடொன்றின் மாதிரி கீழே தரப்பட்டுள்ளது.

பொதுநாட்குறிப்பேடு

| திகதி | கைச் சாத்து இலக்கம் | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |

(1) கொடுக்கல் வாங்கல் இடம்பெற்ற திகதி
(2) பொது நாட்குறிப்பேட்டுக்குரிய (கைச்சாத்து) உறுதிச் சீட்டு இலக்கம்
(3) உரிய பதிவிற்குரிய கணக்குகளும் கொடுக்கல் வாங்கல்களுக்கான விளம்பலும்.
(4) குறித்த பதிவு இடம்பெறும் பேரேட்டுக் கணக்குகளில் காணப்படும் பக்க இலக்கம்
(5) , (6) என்பன கொடுக்கல் வாங்கல்களின் பெறுமானம்

பொதுக் குறிப்பேட்டில் கொடுக்கல் வாங்கலொன்று இரட்டைப் பதிவு விதிக்கமையப் பதியப்பட்ட பின் அக்கொடுக்கல் வாங்கல் பற்றிச் சிறிய விளக்கம் எழுதுவது விளம்பல் எனப்படும்.

உதாரணம் :-

20XX-02-2 ரூ. 10 000 பெறுமதியுள்ள இயந்திரம் வரையறுக்கப்பட்ட சில்வா கம்பனியிடமிருந்து கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டது.

பொது நாட்குறிப்பேடு

| திகதி | கைச் சாத்து இல | விபரம் | பே. ப | வரவு ரூ. | செலவு ரூ. . |
|---|---|---|---|---|---|
| 20xx.02.28 | | இயந்திரக் கணக்கு<br>சில்வா கம்பனி கணக்கு<br>(ரூ. 10 000 பெறுமதியான இயந்திரம் சில்வா கம்பனியிடம் இருந்து கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டது.) | | 10 000 | 10 000 |

பொது நாட்குறிப்பேட்டில் பதிவு செய்யப்படும் கொடுக்கல் வாங்கல்கள் பல உள்ளன. அவற்றில் சீராக்கற் பதிவுகள், வழுக்களைத் திருத்தல் தொடர்பான பதிவுகள் மட்டுமே இங்கு நோக்கப்படுவதோடு பொது நாட்குறிப்பேட்டில் பதியப்படும் ஏனைய பதிவுகள் தொடர்பாக (க.பொ.த) சாதாரண தர மட்டத்தில் கற்பதற்கு எதிர்பார்க்கப்படுவதில்லை.

## 10.4 தொழினுட்ப முறைகளைப் பயன்படுத்தி மேற்கொள்ளும் துரித பணக் கொடுக்கல் வாங்கல்கள்

வணிகர்கள் தமது வணிக நடவடிக்கைகளை மேற்கொள்ளும் முறைமையானது தொழினுட்ப விருத்திக்கு ஏற்ப மாற்றமடைந்து வருகின்றது. அதாவது தற்போதைய வணிகக் கொடுக்கல் வாங்கல்கள் பெரும்பாலும் தொழினுட்ப முறைகளினூடாக நடைபெறும் போக்கினை அவதானிக்கக்கூடியதாகவுள்ளது.

கொடுக்கல் வாங்கல்களை ஏடுகளில் பதிவதற்குப் பதிலாக கணினியைப் பயன்படுத்திப் பதிவுசெய்தல்.

வாடிக்கையாளரும் வழங்குனரும் எழுத்து மூல ஆவணத் தொடர்பின்றி நவீன தொழினுட்பச் சாதனங்களான தொலைபேசி, குறுஞ்செய்தி, மின் அஞ்சல் போன்றவற்றைப் பயன்படுத்துதல்.

வணிகத்தின் மின்சாரப்பட்டியல், நீர்ப்பட்டியல், தொலைபேசிப் பட்டியல் என்பவற்றிற்கான கொடுப்பனவுகளை இணையத்தினூடாக மேற்கொள்ளல்.

தாள், குற்றி நாணயங்களுக்குப் பதிலாகக் காசோலை, வரவு அட்டை, கடன் அட்டை என்பவற்றைப் பயன்படுத்துதல்

வங்கிக்கு நேரடியாகச் சமுகமளியாது வங்கியுடனான சகல கொடுக்கல் வாங்கல்கள் மற்றும் வங்கிக் கணக்கு விபரங்களை இணையத்தினூடாகப் பெற்றுக்கொள்ளல்.

உடனடி விற்பனையை இலத்திரனியல் சாதனங்களைப் (Point of sale machines) பயன்படுத்தி விற்பனை நடவடிக்கைகளை மேற்கொள்ளல்.

தொழினுட்ப முறைகளைப் பயன்படுத்தி மேற்கொள்ளும் இவ்வாறான கொடுக்கல் வாங்கல்களையும் வணிகத்தின் மூல ஏடுகளில் பதிந்து பேரேடுகளுக்கு மாற்றப்பட வேண்டும்.

## கையடக்கத் தொலைபேசியினூடான கொடுக்கல் வாங்கல்கள்

இன்று கையடக்கத் தொலைபேசிப் பயன்பாடானது இலங்கை முழுவதிலுமுள்ள மக்களின் அன்றாட வாழ்வில் மிகப்பெரும் புரட்சியை ஏற்படுத்தி யுள்ளது. நவீன தொழினுட்பத்துடனான கையடக்கத் தொலைபேசியானது வணிக உலகத்தில் பெரும் மாற்றங்களை உருவாக்கியுள்ளது.

இன்று இலங்கையில் பரந்த அளவில் கையடக்கத் தொலைபேசிப் பயன்பாடு காணப்படுகின்றது. கையடக்கத் தெலைபேசியைப் பயன்படுத்திக் கொடுப்பனவுக் கருமங்களை மேற்கொள்வது இன்று அதிகமான வணிகங்களில் சாதாரணமாகக் காணக்கூடியதாக இருக்கின்றது. 2012 ஆம் ஆண்டிலேயே தனியார் தொலைபேசி வலைய மைப்புச் சேவை வழங்குனர் ஒருவரால் முதன் முதலாகக் கையடக்கத் தொலைபேசி மூலமான கொடுப்பனவு முறைமை அறிமுகப்படுத்தப்பட்டது.



படம் 10.1

கையடக்கத் தொலைபேசியினது பயன்பாடுகள் வணிகச் செயற்பாடுகள் மேற் கொள்வதை இலகுவாக்குகின்றன. அத்தகைய அனுகூலங்கள் சில வருமாறு.

- வணிகத்தை மேற்கொள்ளும் எந்தவொரு பிரிவினர்களுடனும் விரைவாகத் தகவல் தொடர்பாடலை ஏற்படுத்த முடிதல்.
- கையடக்கத் தொலைபேசியினூடாக வங்கிக் கொடுக்கல் வாங்கல்களை இலகுவாக மேற்கொள்ள முடிதல்
- கையடக்கத் தொலைபேசி தரவுத் தொடர்பாடல் வலையமைப்பினூடாக வணிகர் ஒருவருக்குத் தீர்மானம் எடுப்பதற்குத் தேவையான தகவல்களை இலகுவாகப் பெற்றுக் கொள்ள முடிதல்.

நிகழ்காலத்தில் பெரும்பாலான வணிக வங்கிகள் தமது வாடிக்கையாளருக்குத் தொலைபேசி வங்கிச் சேவை வசதிகளை வழங்கியுள்ளது. இதனையே தொலைபேசி

வங்கிச் (Tele banking) சேவை எனக் கூறமுடியும். தொலைபேசி வங்கிச் சேவையினூடாக வணிகர் ஒருவர் கீழ்வரும் செயற்பாடுகளை மேற்கொள்ள முடியும்.

* வங்கிக் கணக்கிலுள்ள மீதிகளை அறிய முடிதல்
* வங்கிக் கூற்றினைப் பெற்றுக்கொள்ள முடிதல்
* மின்சார, நீர்ப் பட்டியல்களின் கொடுப்பனவுகளை மேற்கொள்ள முடிதல்
* ஓர் கணக்கிலிருந்து இன்னொரு கணக்கிற்குப் பணத்தினை மாற்ற முடிதல்
* காசோலைப் புத்தகத்திற்கு விண்ணப்பிக்க முடிதல்

தொலைபேசி வங்கிச் சேவையினூடாகக் கிடைக்கும் அனுகூலங்கள்

* தேவையான நேரத்தில் எந்தவொரு இடத்திலிருந்தேனும் வங்கிக்குச் சமுகமளிக்காமலே வணிகர் ஒருவர் தனது கட்டுப்பாட்டின் கீழ் பணச் செயற்பாடுகளை மேற்கொள்ள முடியும்.
* கொடுக்கல் வாங்கல்களை இலகுவாக மேற்கொள்ள முடியும்
* நிதிசார்ந்த கொடுக்கல் வாங்கல்களை மிக விரைவாக மேற்கொள்ள முடியும்.
* நேரத்தினையும் உழைப்பினையும் மீதப்படுத்த முடியும்.
* தாள், குற்றி நாணயங்களை இடத்திற்கிடம் காவிச் செல்வதில் ஏற்படும் பாதுகாப்புத் தொடர்பாக எழும் பிரச்சினைகள் கையடக்கத் தொலைபேசி வங்கி முறையில் தவிர்க்கப்படும்.

## கணினி உதவியுடனான கணக்கீட்டு முறைமை (CAA)

நிகழ்காலத்தில் பெரும்பாலான வணிக அமைப்புக்கள் கணக்கீட்டினைக் கணினி மயப்படுத்தியுள்ளன. இதற்காக கணக்கீட்டுத் தரவுகளை கணக்கீட்டு மென்பொருளை (Accounting Software) உள்ளீடு செய்து தேவையான கணக்கீட்டு வெளியீடுகளைப் பெற்றுக்கொள்ள முடியும். வணிகத்தில் அன்றாடம் நிகழும் கொடுக்கல் வாங்கல்களை கணினி முறைமைக்கு உட்படுத்தும் அதே வேளை அவற்றைப் பதிவு செய்து சேமித்து வியாக்கியானம் செய்து தொடர்பாடல் செய்வதனூடாக வணிகத்தின் மீது அக்கறை செலுத்தும் பிரிவினருக்குத் தேவையான தகவல்களை வழங்கக்கூடியதாகவுள்ளது. நிதியாண்டு இறுதியில் நிதி அறிக்கைகள் கணினி மூலம் தன்னியக்கமாகத் (automatically) தயாரிக்கப்படும்.



படம் 10.2

நிகழ்காலத்தில் பின்வரும் கணக்கீட்டு மென் பொருள் பொதிகள் (accounting pakkages) இதற்காகப் பயன்படுத்தப்படுகின்றன.

- Acc Pack
- QuickBooks
- MYOB
- Sage

கணினி மயப்படுத்தப்பட்ட கணக்கீட்டின் அனுகூலங்கள், பிரதிகூலங்கள் பின்வருமாறு

அனுகூலங்கள் :-

- விரைவாகக் கொடுக்கல் வாங்கல்களை கணக்கீட்டிற்குட்படுத்தி அவசியமான கணக்கறிக்கைகளைத் தன்னியக்கமாகத் தயாரிப்பதால் நேரத்தைச் சேமிக்க முடியும்.
- காலத்தையும் உழைப்பையும் சேமிக்க முடியும்
- தன்னியக்கமாகத் தயாரிக்கப்பட்ட கணக்கறிக்கைகள் சரியான தன்மை கொண்டதாகக் காணப்படும்.
- இற்றைப்படுத்திய (Update) தரவுகளை இலகுவாகப் பெற்றுக்கொள்ள முடியும்.

பிரதி கூலங்கள் :-

- மின்சாரத் தடை, தொழினுட்பக் கோளாறு, கணினி வைரஸ் போன்ற காரணிகளால் தரவுகள் அழிக்கப்படுதல்.
- கணினி தரவுகளின் அதிகார பூர்வமற்ற அணுகுமுறை மற்றும் மாற்றம் செய்வதிலான இடர்பாடுகள்.
- கணினி மென்பொருள்களைக் கொள்வனவு செய்வதற்குப் பெருமளவு செலவுசெய்ய வேண்டி ஏற்படல்.



**செயற்பாடு** 04

1. தொலைபேசி வங்கிச் சேவையின் அனுகூலங்கள் சிலவற்றைக் குறிப்பிடுக.

2. கொடுக்கல் வாங்கல்களை ஏடுகளில் பதிவுசெய்வதைவிட கணினித் துணையுடன் பதிவுசெய்தல் வணிகமொன்றிற்குச் சாதகமாக இருக்க முடியும் இக் கூற்றுத் தொடர்பாக நண்பர் ஒருவருடன் ஆக்கபூர்வமான விவாதம் ஒன்றில் ஈடுபடல்.

# 11 பரீட்சை மீதி




இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.

11.1 பரீட்சை மீதிக்கான அறிமுகம்

11.2 மூல ஏட்டுக் கொடுக்கல் வாங்கல்களைப் பேரேட்டிற்கு மாற்றுதல்

பேரேட்டுக் கணக்குகளைச் சமப்படுத்தல்

பரீட்சை மீதி தயாரித்தல்

## 11.1 பரீட்சை மீதிக்கான அறிமுகம்

இரட்டைப் பதிவுத் தத்துவத்திற்கமைய பேரேட்டுக் கணக்குகளில் கொடுக்கல் வாங்கல்களின் இரட்டைப் பதிவுகள் ஒரு கணக்கில் வரவிலும் அதனோடு தொடர்புடைய மற்றோர் கணக்கில் செலவிலும் பதியப்படும். இதற்கமையப் பேரேட்டுக் கணக்குகளைச் சமப்படுத்திய பின்னர் வரவு , செலவு என்னும் வகையில் மீதிகளைப் பெற முடியும். கொடுக்கல் வாங்கல்கள் இரட்டைப் பதிவு விதிமுறைக்கமைய சரியாகப் பதிவிற்குட்பட்டிருப்பின் வரவு மீதிகளின் கூட்டுத்தொகையும் செலவு மீதிகளின் கூட்டுத்தொகையும் சமமாகக் காணப்படும்.

குறித்த கால இறுதியில், பேரேட்டுக் கணக்குகளின் வரவு மீதிகளையும் செலவு மீதிகளையும் உள்ளடக்கியதாகத் தயாரிக்கப்படும் பட்டியலானது **''பரீட்சை மீதி''** எனப்படும். பரீட்சை மீதி ஒரு கணக்கல்ல. இது மீதிகளின் ஆவணமாக இருப்பது மட்டுமன்றி பேரேடுகளின் சுருக்கமாகவும் அமையும்.

பொதுவாகச் சமமான பெறுமானத்தில் இரட்டைப்பதிவுகள் பதியப்பட்டு கணக்குகள் சரியாகச் சமப்படுத்தப்பட்டிருப்பின் அதன் வரவு மீதிகளின் கூட்டுத்தொகையும் செலவு மீதிகளின் கூட்டுத்தொகையும் சமனானதாக அமையும். இதற்கமையப் பரீட்சை மீதியொன்றின் வரவு மீதிகளின் கூட்டுத்தொகையும் செலவு மீதிகளின் கூட்டுத் தொகையும் சமப்படுமாயின் பின்வரும் இருவிடயங்கள் உறுதிப்படுத்தப்படும்.

1. கணக்குகளின் வரவில் காணப்படும் பெறுமதியும் செலவில் காணப்படும் பெறுமதியும் சமனாகக் காணப்படும்.

2. கணக்குகள் சரியாகச் சமப்படுத்தப்பட்டிருக்கும் (எண்கணித ரீதியாகச் சரியான தன்மை பேணப்பட்டுள்ளது.)

உதாரணம் :-

20XX.01.01 ஆம் திகதியில் விஜய் வணிகத்தின் பேரேட்டுக் கணக்குகளைச் சமப்படுத்திப் பெற்றுக் கொள்ளப்பட்ட மீதிகள் பின்வருமாறு காட்டப்பட்டுள்ளது.

| | ரூ. |
|---|---|
| காசு | 40 000 |
| கொள்வனவுகள் | 150 000 |
| விற்பனைகள் | 365 000 |
| கடன்பட்டோர் | 35 000 |
| கடன் கொடுத்தோர் | 24 000 |
| காப்புறுதிக் கட்டணம் | 6 000 |
| தளபாடம் | 20 000 |
| பெற்ற கழிவு | 8 000 |

| | |
|---|---|
| கொடுத்த கழிவு | 4 000 |
| மோட்டார் வாகனம் | 400 000 |
| வாடகை | 30 000 |
| எழுது கருவிச் செலவுகள் | 5 000 |
| 12% முதலீடு | 50 000 |
| முதலீட்டு வருமானம் | 3 000 |
| 15% வங்கிக் கடன் | 90 000 |
| 20XX.01.01 திகதியில் மூலதனம் | 250 000 |

இம்மீதிகளைப் பயன்படுத்தித் தயாரிக்கப்பட்ட பரீட்சை மீதி கீழே காட்டப்பட்டுள்ளது.

விஜய் வணிகத்தின்
20XX.06.30 ஆம் திகதிக்கான பரீட்சை மீதி

| விபரம் | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|
| காசு | 40 000 | |
| கொள்வனவு | 150 000 | |
| விற்பனை | | 365 000 |
| கடன்பட்டோர் | 35 000 | |
| கடன் கொடுத்தோர் | | 24 000 |
| காப்புறுதிக் கட்டணம் | 6 000 | |
| தளபாடம் | 20 000 | |
| பெற்ற கழிவு | | 8 000 |
| கொடுத்த கழிவு | 4 000 | |
| மோட்டார் | 400 000 | |
| வாடகைக் கொடுப்பனவு | 30 000 | |
| எழுதுகருவிச் செலவு | 5 000 | |
| முதலீடு 12% | 50 000 | |
| முதலீட்டு வருமானம் | | 3 000 |
| வங்கிக் கடன் 15% | | 90 000 |
| மூலதனம் | | 250 000 |
| | 740 000 | 740 000 |

## 11.2 மூல ஏடுகளின் கொடுக்கல் வாங்கல்களைப் பேரேடுகளிற்கு மாற்றுதல்

குறிப்பிட்ட காலப்பகுதியினுள் இவ்வணிகத்தினால் மேற்கொள்ளப்பட்ட கொடுக்கல் வாங்கல்கள் மூல ஏடுகளில் பதிவு செய்யப்பட்டுப் பேரேடுகளிற்கு மாற்றப் பட்டுள்ளன. கொடுக்கல் வாங்கல்கள் மூல ஏடுகளில் பதிந்து அவை பேரேடுகளுக்கு மாற்றப்பட்ட முறையினையும் அப்பேரேட்டுக் கணக்குகளைச் சமப்படுத்திப் பெற்றுக் கொள்ளப்பட்ட மீதிகளைக்கொண்டு பரீட்சை மீதி தயாரிக்கப்பட்ட முறையினையும் கீழே காட்டப்பட்டுள்ள உதாரணத்தின் மூலம் அறிந்து கொள்வோம்.

உதாரணம் :-

கவிதா வணிகத்தின் 2012 ஜனவரி மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| 20XX.01.01 | ரூ. 200 000 மூலதனமாக இடப்பட்டு வணிகம் ஆரம்பிக்கப் பட்டது. |
| 01.02 | காசு மூலம் கொள்வனவு ரூ. 85 000 |
| 01.03 | வங்கியில் ரூ. 20 000 இடப்பட்டு நடைமுறைக் கணக்கொன்று ஆரம்பிக்கப்பட்டது. |
| 01.04 | பெற்ற வங்கிக் கடன் ரூ. 50 000. |
| 01.05 | காசுக்கு விற்பனை ரூ. 150 000 |
| 01.08 | வாடகையாக ரூ. 2 000 கொடுக்கப்பட்டது. |
| 01.10 | சுவர்ணாவிடம் (கடன் பட்டோர்) பெற்ற காசு ரூ. 11 600 கொடுத்த கழிவு ரூ. 400. |
| 01.12 | வங்கிக் கடன் ரூ. 3 000 செலுத்தப்பட்டது. |
| 01.20 | கௌரியிடமிருந்து (கடன்பட்டோர்) பெற்ற காசோலை ரூ. 9000 |
| 01.25 | சுரங்கிக்குக் (கடன்கொடுனர்) கொடுத்த காசு ரூ. 7 600 பெற்ற கழிவு ரூ. 400 |
| 01.26 | கரனிற்கு (கடன்கொடுனர்) செலுத்த வேண்டிய ரூ. 12 000 5% கழிவு நீக்கிச் செலுத்தப்பட்டது. |

**வங்கி நடைமுறைக் கணக்கினுடாக இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள்**

| | |
|---|---|
| 01.08 | ரூ. 15 000 பெறுமதியான காசோலை வழங்கப்பட்டு விற்பனைக்காகப் பொருள்கள் கொள்வனவு செய்யப்பட்டன. |
| 01.11 | சுவர்ணாவிடமிருந்து பெற்ற காசோலை ரூ. 6 200 கொடுத்த கழிவு ரூ. 300 அக்காசோலை அன்றைய தினமே வைப்பிலிடப்பட்டது. |

01.18 காசோலை மூலம் வாடகை கொடுத்தது ரூ. 2 000
01.27 கௌரியிடமிருந்து 20.01.2012 பெற்ற காசோலை வைப்பிலிடப் பட்டது.

**விற்பனைப் பொருள்கள் கடனுக்குக் கொள்வனவு செய்வது தொடர்பான கொடுக்கல் வாங்கல்கள்**

01.06 பட்டியல் இல 45 இற்கமைய சுரங்கியிடமிருந்து கொள்வனவு ரூ. 24 000
01.08 பட்டியல் இல 116 இற்கமைய கரனிடமிருந்து கொள்வனவு ரூ. 20 000

விற்பனைப் பொருள்கள் கடனுக்கு விற்பனை செய்வது தொடர்பான கொடுக்கல் வாங்கல்கள்

01.05 பட்டியல் இல 1 இற்கமைய சுவர்ணாவிற்கு விற்பனை ரூ. 19 000
01.09 பட்டியல் இல 2 இற்கமைய கௌரிக்கு விற்பனை ரூ. 25 000

வேண்டப்படுவது.

20XX.01.31 முடிவடைந்த மாதத்திற்கான

01. கழிவு நிரலுடன் கூடிய காசுக் கணக்கு
02. கழிவு நிரலுடன் கூடிய வங்கிக் கணக்கு
03. கொள்வனவு நாட்குறிப்பு
04. விற்பனை நாட்குறிப்பு
05. உரிய பேரேட்டுக் கணக்குகள்
06. 20XX.01.31 இலுள்ளபடியான பரீட்சை மீதி

வரவு காசுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | கழிவு | காசு | திகதி | விபரம் | கழிவு | காசு |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.01.01 | மூலதனம் | | 200 000 | 20XX.01.02 | கொள்வனவு | | 85 000 |
| 01.04 | வங்கிக்கடன் | | 50 000 | 01.03 | வங்கி | | 20 000 |
| 01.05 | விற்பனை | | 150 000 | 01.08 | வாடகை | | 2 000 |
| 01.10 | சுவர்ணா(கடன்படுனர்) | 400 | 11 600 | 01.12 | வங்கிக்கடன் | | 3 000 |
| 01.20 | கௌரி(காசோலை) | | 9 000 | 01.25 | சுரங்கி (கடன்கொடுனர்) | 400 | 7 600 |
| | | | | 01.26 | கரன் (கடன்கொடுனர்) | 600 | 11 400 |
| | | | | 01.27 | வங்கி | | 9 000 |
| | | | | 01.31 | மீதி.கீ.கொ.செ | | 282 600 |
| | | 400 | 420 600 | | | 1000 | 420 600 |
| 02.01 | மீதி.கீ.கொ.வ | | 282 600 | | | | |

வரவு **வங்கிக் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | கழிவு ரூ. | காசு ரூ | திகதி | விபரம் | கழிவு ரூ. | காசு ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 20XX.01.03 | காசு | | 20 000 | 20XX.01.08 | கொள்வனவு | | 15 000 |
| 01.11 | சுவர்ணா(கடன்பட்டோர்) | 300 | 6 200 | 01.18 | வாடகை | | 2 000 |
| 01.27 | காசு(கௌரி) | | 9 000 | 01.31 | மீதி.கீ.செ | | 18 200 |
| | | | 35 200 | | | | 35 200 |
| 02.01 | மீதி.கீ.கொ.வ | | 18 200 | | | | |

**கொள்வனவு நாட்குறிப்பு**

| திகதி | பட்டியல் இல | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| 20XX.01.06 | 45 | சுரங்கி | 24 000 |
| 01.08 | 116 | கரன் | 20 000 |
| 01.31 | | கொள்வனவு கணக்கிற்கு மாற்றியது | 44 000 |

**விற்பனை நாட்குறிப்பு**

| திகதி | பட்டியல் இல | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| 20XX.01.05 | 01 | சுவர்ணா | 19 000 |
| 01.09 | 02 | கௌரி | 25 000 |
| 01.31 | | விற்பனைக் கணக்கிற்கு மாற்றியது. | 44 000 |

வரவு **வங்கிக்கடன் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.12 | காசு | 3 000 | 20XX.01.04 | காசு | 50 000 |
| 01.31 | மீதி.கீ.கொ.செ | 47 000 | | | |
| | | 50 000 | | | 50 000 |
| | | | 02.01 | மீதி.கீ.கொ.வ | 47 000 |

வரவு **சுவர்ணா (கடன்படுனர்)கணக்கு** செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.05 | விற்பனை | 19 000 | 20XX.01.10 | காசு | 11 600 |
| | | | 01.10 | கழிவு | 400 |
| | | | 01.11 | வங்கி | 6 200 |
| | | | 01.11 | கழிவு | 300 |
| | | | 01.31 | மீதி கீ.கொ.செ | 500 |
| | | 19 000 | | | 19 000 |
| 02.01 | மீதி.கீ.கொ.வ | 500 | | | |

வரவு கௌரி (கடன்பட்டோர்)கணக்கு செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.09 | விற்பனை | 25 000 | 20XX.01.20 | காசு | 9 000 |
| | | | | மீதி.கீ.கொ.செ | 16 000 |
| | | 25 000 | 01.31 | | 25 000 |
| 02.01 | மீதி.கீ.கொ.வ | 16 000 | | | |

வரவு சுரங்கி (கடன் கொடுநர்) கணக்கு செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.25 | காசு | 7 600 | 20XX.01.06 | கொள்வனவு | 24000 |
| 01.25 | கழிவு | 400 | | | |
| 01.31 | மீதி.கீ.கொ.செ | 16 000 | | | |
| | | 24 000 | | | 24 000 |
| | | | 02.01 | மீதி.கீ.கொ.வ | 16 000 |

வரவு கரன் (கடன் கொடுநர்) கணக்கு செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.26 | காசு | 11 400 | 20XX.01.08 | கொள்வனவு | 20 000 |
| 01.26 | கழிவு | 600 | | | |
| 01.31 | மீதி.கீ.கொ.செ | 8 000 | | | |
| | | 20 000 | | | 20 000 |
| | | | 02.01 | மீதி.கீ.கொ.வ | 8 000 |

வரவு மூலதனக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.31 | மீதி.கீ.கொ.செ | 200 000 | 20XX.01.01 | காசு | 200 000 |
| | | 200 000 | | | 200 000 |
| | | | 02.01 | மீதி.கீ.கொ.வ | 200 000 |

வரவு கொடுத்த கழிவுக் கணக்கு செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.31 | கடன்பட்டோர் | 400 | 20XX.01.31 | மீதி.கீ.கொ.செ | 700 |
| 01.31 | கடன்பட்டோர் | 300 | | | |
| | | 700 | | | 700 |
| 02.01 | மீதி.கீ.கொ.வ | 700 | | | |

வரவு **பெற்ற கழிவுக் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.31 | மீதி.கீ.கொ.செ | 1 000 | 20XX.01.31 | கடன்கொடுத்தோர் | 1 000 |
| | | 1 000 | | | 1 000 |
| | | | 02.01 | மீதி.கீ.செ | 1 000 |

வரவு **கொள்வனவுக் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.31 | காசு | 85 000 | 20XX.01.31 | மீதி.கீ.கொ.செ | 144 000 |
| 01.31 | வங்கி | 15 000 | | | |
| 01.31 | கடன் கொடுத்தோர் | 44 000 | | | |
| | | 144 000 | | | 144 000 |
| 02.01 | மீதி.கீ.கொ.வ | 144 000 | | | |

வரவு **விற்பனைக் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.31 | மீதி.கீ.கொ.செ | 194 000 | 20XX.01.05 | காசு | 150 000 |
| | | | 01.31 | கடன்பட்டோர் | 44 000 |
| | | 194 000 | | | 194 000 |
| | | | 02.01 | மீதி.கீ.கொ.வ | 194 000 |

வரவு **வாடகைக் கணக்கு** செலவு

| திகதி | விபரம் | தொகை ரூ. | திகதி | விபரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 20XX.01.08 | காசு | 2 000 | 01.31 | மீதி.கீ.கொ.செ | 4 000 |
| 01.18 | வங்கி | 2 000 | | | |
| | | 4 000 | | | 4 000 |
| 02.01 | மீதி.கீ.கொ.வ | 4 000 | | | |

கவிதா வணிகத்தின்
20XX.01.31 திகதியில் உள்ளபடியான பரீட்சை மீதி

| விபரம் | வரவு<br>ரூ. | செலவு<br>ரூ. |
|---|---|---|
| காசு | 282 600 | |
| வங்கி மீதி | 18 200 | |
| மூலதனம் | | 200 000 |
| கொடுத்த கழிவு | 700 | |
| பெற்ற கழிவு | | 1 000 |
| கொள்வனவு | 144 000 | |
| விற்பனை | | 194 000 |
| வாடகை | 4 000 | |
| கடன்பட்டோர் - சுவர்ணா | 500 | |
| கௌரி | 16 000 | |
| கடன் கொடுத்தோர் - சுரங்கி | | 16 000 |
| கரன் | | 8 000 |
| வங்கிக்கடன் | | 47 000 |
| | 466 000 | 466 000 |

## செயற்பாடு 01

கீழே காட்டப்பட்டுள்ள மீதிகளைக் கருத்திற் கொண்டு கோசலை வணிகத்தின் 20XX.09.30 திகதியிலுள்ள பரீட்சை மீதியைத் தயாரிக்குக.

| | ரூ. |
|---|---|
| கடன்பட்டோர் | 80 000 |
| நிலையான வைப்பு | 158 000 |
| கடன்கொடுத்தோர் | 60 000 |
| கொடுத்த கழிவு | 4 000 |
| கொள்வனவு | 250 000 |
| இயந்திர உபகரணங்கள் | 120 000 |
| பெற்ற கழிவு | 9 000 |
| வங்கி மேலதிகப்பற்று | 15 000 |
| சம்பளம் | 20 000 |
| 20XX.01.01 இல் மூலதனம் | 200 000 |
| வட்டி வருமானம் | 8 000 |
| காசு | 40 000 |
| விற்பனை | 380 000 |

## செயற்பாடு 02

தைக்கப்பட்ட ஆடைகளைக் கொள்வனவு செய்து விற்பனை செய்யும் ஆனந்தன் நிறுவனத்தின் 20XX.03.31 திகதியில் மீதிகள் கீழே தரப்பட்டுள்ளது.

| | | ரூ. |
|---|---|---|
| கையிலுள்ள காசு | | 80 000 |
| வங்கியிலுள்ள காசு | | 60 000 |
| கடன்பட்டோர் | - சூரியா | 50 000 |
| | சுருதி | 40 000 |
| மூலதனம் | | 150 000 |
| கடன் கொடுத்தோர் | - விஜய் | 45 000 |
| | நதியா | 35 000 |

20XX மார்ச் மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல் வாங்கல்கள் கீழே தரப்பட் டுள்ளன.

கடன் கொள்வனவுகள்

| திகதி | பட்டியல் இல | தொகை ரூ. | ஏனைய விபரங்கள் |
|---|---|---|---|
| 20XX.03.05 | 45 (அனுஸ்கா) | 38 000 | வியாபாரக் கழிவு 10% |
| 20XX.03.08 | 56 (தனுஸ்கா) | 42 000 | |
| 20XX.03.12 | 48 (அனுஸ்கா) | 34 000 | வியாபாரக் கழிவு 5% |
| 20XX.03.18 | 59 (தனுஸ்கா) | 25 000 | வியாபாரக் கழிவு 4% |

கடன் விற்பனை

| திகதி | பட்டியல் இல | ஏனைய விபரங்கள் |
|---|---|---|
| 20XX.03.07 | 62 (கண்ணகி) | ஒன்று ரூ. 1500 வீதம் 20 மேற்சட்டைகள் |
| 20XX.03.10 | 63 (சீதை) | ஒன்று ரூ. 2000 வீதம் 25 காற்சட்டைகள் |
| 20XX.03.15 | 64 (கண்ணகி) | ஒன்று ரூ. 600 வீதம் 40 பாவாடைகள் |
| 20XX.03.20 | 65 (சீதை) | ஒன்று ரூ. 1800 வீதம் 20 புடைவைகள் |

கடனுக்கு விற்பனை செய்யும் பொழுது 10% வியாபாரக் கழிவு வழங்குவது வணிகத்தின் நடைமுறையாகும்.

பெறுவனவுகள் தொடர்பான விபரங்கள்

| திகதி | காசு ரூ | காசோலைகள் ரூ | வேறு விபரங்கள் |
|---|---|---|---|
| 20XX.03.02 விற்பனை | 20 000 | 5 000 | காசோலை இத்தினமே வைப்பிலிடப் பட்டது. |
| 03.03 கண்ணகியிடம் பெற்றது | 8 500 | ——— | |
| 03.06 சீதையிடம் பெற்றது. | ——— | 12 400 | இக் காசோலை 20XX.03.06 அன்று வங்கியில் வைப்பிலிடப்பட்டது. |
| 03.07 கண்ணகியிடம் பெற்றது | 16 000 | 12 000 | இக்காசோலை 20XX.03.10 அன்று வங்கியில் வைப்பிலிடப்பட்டது. |
| 03.13 சீதையிடம் பெற்றது | 8 000 | ——— | |

கொடுப்பனவுகள் தொடர்பான விபரங்கள்

| திகதி | காசு ரூ. | காசோலைகள் ரூ. |
|---|---|---|
| 20XX.03.09 அனுஸ்காவிற்கு | ——— | 13 000 |
| 03.10 தனுஸ்காவிற்கு | 15 400 | ——— |
| 03.11 கொள்வனவு | 16 000 | 14 000 |
| 03.20 சம்பளம் | 8 000 | 12 000 |
| 03.22 தனுஸ்காவிற்கு | ——— | 15 200 |

பின்வருவனவற்றைக் காண்க.

1. காசுக்கணக்கு
2. வங்கிக் கணக்கு
3. கொள்வனவு நாட்குறிப்பு
4. விற்பனை நாட்குறிப்பு
5. உரிய பேரேட்டுக் கணக்குகள்
6. 20XX.03.31ஆந் திகதியில் உள்ள படியான பரீட்சை மீதி

# 12 கணக்கீட்டு வழுக்களைத் திருத்துதல்



இந்த அத்தியாயத்தில் பின்வரும் விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.

12.1 கணக்கீட்டு வழுக்களைத் திருத்துவதன் தேவைப்பாடு

12.2 கணக்கீட்டு வழுக்கள் இடம்பெறக்கூடிய சந்தர்ப்பங்கள்

12.3 கணக்கீட்டு வழுக்களை இனங்காணல்

12.4 பரீட்சை மீதியின் சமப்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தாத வழுக்கள்

12.5 பரீட்சை மீதியின் சமப்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தும் வழுக்கள்

## 12.1 கணக்கீட்டு வழுக்களைத் திருத்துவதன் தேவைப்பாடு

கணக்கீட்டினூடாக வணிகம் தொடர்பாக அக்கறையுடைய பிரிவினர்கள் தீர்மானங்களை மேற்கொள்வதற்குச் சரியான தகவல்கள் வழங்கப்பட வேண்டுமென எதிர்பார்க்கப்படுகின்றது. எனினும், வணிகக் கொடுக்கல் வாங்கல்களை மூல ஏடுகளில் பதிவு செய்யும்போதும், அவற்றைப் பேரேடுகளுக்கு மாற்றும்போதும் பேரேட்டுக் கணக்குகளைச் சமப்படுத்தும்போதும், பேரேட்டுக் கணக்குகளின் மீதிகளைப் பரீட்சை மீதியில் பதிவு செய்யும்போதும் பல்வேறு பிழைகள் ஏற்படக் கூடும். இவ்வாறு கணக்கீட்டு நடவடிக்கைகளில் பிழைகள் ஏற்படுமாயின் வணிகம் தொடர்பாக அக்கறை செலுத்தும் பிரிவினர்கள் தீர்மானங்களை மேற்கொள்வதற்குச் சரியான தகவல்களைச் சமர்ப்பிக்க முடியாது போகும். எனவே நிதியறிக்கைகளைத் தயாரிப்பதற்கு முன்னர் கணக்கேடுகளில் இடம்பெற்ற வழுக்கள் திருத்தம் செய்யப் படல் வேண்டும்.

## 12.2 கணக்கீட்டு வழுக்கள் ஏற்படக்கூடிய சந்தர்ப்பங்கள்

வணிகமொன்றின் கணக்கீட்டுச் செயன்முறையில் வழுக்கள் ஏற்படக் கூடிய சந்தர்ப்பங் கள் பின்வருமாறு,

### 01. மூல ஏடுகளில் கொடுக்கல் வாங்கல்ளைப் பதிவுசெய்யும்போது ஏற்படும் வழுக்கள்.

வணிகத்தின் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவுசெய்யும் ஆரம்பச் சந்தர்ப்பமான மூல ஏடுகளில் பதிவுசெய்யும்போது வழுக்கள் ஏற்படமுடியும்.

உதாரணம் :-

கடனுக்கு ரூ. 20 000க்கு விற்ற பொருள் பட்டியல் விற்பனை நாளேட்டில் பதியப்படவில்லை.

கடனுக்கு ரூ. 50 000 க்கு வாங்கிய பொருள் பட்டியல் கொள்வனவு நாளேட்டில் ரூ. 5 000 எனப் பதியப்பட்டமை.

### 02. மூல ஏடுகளில் காணப்படும் பதிவுகளைப் பேரேட்டுக்கு மாற்றும் போது ஏற்படும் வழுக்கள்

மூல ஏடுகளில் பதிவு செய்த கொடுக்கல் வாங்கல்கள் இரட்டைப் பதிவுத் தத்துவத்தி னடிப்படையில் பேரேட்டுக் கணக்குகளுக்கு மாற்றும்போது வழுக்கள் ஏற்பட முடியும்.

உதாரணம் :-

கொள்வனவு நாளேட்டின் கூட்டுத் தொகையான ரூ. 50 000 கொள்வனவுக் கணக்கிற்குக் கொண்டு செல்லப்படவில்லை.

விற்பனை நாளேட்டின் கூட்டுத் தொகையான ரூ. 155 000 விற்பனைகள்,

விற்பனைக் கணக்கில் ரூ. 150 000 என பதியப்பட்டது.

### 03. பேரேட்டுக் கணக்குகளைச் சமப்படுத்தும்போதான வழுக்கள்

கணக்குகளில் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்த பின்னர் அக்கணக்குகளைச் சமப்படுத்தும்போது வழுக்கள் ஏற்பட முடியும்.

உதாரணம் :-

விற்பனைக் கணக்கின் கூட்டுத்தொகை ரூ. 10 000 இனால் குறைவாகக் கூட்டப்பட்டுள்ளது.

வாடகைக் கணக்கின் கூட்டுத்தொகை ரூ. 5 000 இனால் அதிகமாகக் கூட்டப்பட்டுள்ளது.

### 04. பரீட்சை மீதியைத் தயாரிக்கும்போது ஏற்படும் வழுக்கள்

பேரேட்டுக் கணக்குகளின் மீதிகளை அடிப்படையாகக் கொண்டு பரீட்சைமீதியைத் தயாரிக்கும்போது கூட கணக்கீட்டு வழுக்கள் ஏற்படலாம்.

உதாரணம் :-

மின்சாரக் கட்டணக் கணக்கின் மீதி ரூ. 15 000 பரீட்சை மீதிக்குக் கொண்டு செல்லப்படவில்லை.
காப்புறுதிக் கட்டணக் கணக்கின் மீதி ரூ. 10 000 பரீட்சை மீதியில் ரூ. 1 000 என உள்ளடக்கப்பட்டமை.

இவ்வாறு கணக்கீட்டுச் செயன்முறையின்போது பல்வேறு மட்டங்களில் கணக்கீட்டு வழுக்கள் ஏற்படக்கூடும். ஆகையால், ஆரம்பத்திலேயே குறித்த வழுக்களை இனங்கண்டு திருத்திக் கொள்ளல் வேண்டும்.

## 12.3 கணக்கீட்டு வழுக்களை இனங்காணல்

இரட்டைப்பதிவுத் தத்துவத்திற்கமைய வணிகத்தின் கொடுக்கல் வாங்கல்கள் பதிவு செய்யப்படுகின்றன. அதன்படி ஒவ்வொரு வரவுப் பதிவிற்கும் ஒவ்வொரு செலவுப் பதிவு பதியப்படல் வேண்டும். ஆகையால், வணிகத்தால் தயாரிக்கப்பட்ட பரீட்சை மீதியில் வரவு செலவு மீதிகளின் கூட்டுத்தொகைகள் சமமாக அமைய வேண்டும். அவ்வாறு சமப்படாவிட்டால் கணக்கீட்டுச் செயற்பாட்டில் வழுக்கள் ஏற்பட்டிருக்கக்கூடும் என்பதைத் தெளிவாக தீர்மானித்துக் கொள்ள முடியும். பரீட்சை மீதியொன்றின் வரவு, செலவு நிரல்களது கூட்டுத் தொகைகள் சமப்படும் சந்தர்ப்பத்திலும் கூடக் கணக்கீட்டுச் செயன்முறையில் வழுக்கள் நிகழ்ந்திருக்க முடியும். வரவுப் பதிவுகளுக்குச் சமமாக செலவுப் பதிவுகள் பதியப்பட்டு கணக்குகள் சரியாகச் சமப்படுத்தப்பட்டிருப்பதனால் பரீட்சை மீதியின் வரவு நிரலின் கூட்டுத்தொகையும் செலவு நிரலின் கூட்டுத்தொகையும் சமமாகக் காணப்படுகின்றமை மட்டுமே இதன் மூலம் உறுதிப்படுத்தப்படுகின்றது.

இதற்கமைய கணக்கீட்டு வழுக்களை இரண்டாக வகுத்து நோக்கலாம்.

- பரீட்சை மீதியின் சமப்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தாத வழுக்கள்
- பரீட்சை மீதியின் சமப்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தும் வழுக்கள்

கணக்கீட்டு வழுக்களை இனங்கண்டதன் பின்னர் பொது நாட்குறிப்பேட்டில் திருத்தப் பதிவுகளை மேற்கொள்வதன் மூலம் அவற்றைத் திருத்தி அமைக்கலாம். பின்னர் உரிய கணக்குகளில் வழுக்களைச் சரி செய்தல் வேண்டும்.

நாம் இப்போது மேற்காட்டப்பட்ட ஒவ்வொரு வழுக்களும் திருத்தப்படும் முறையினை அறிந்து கொள்வோம்.

## 12.4 பரீட்சை மீதியின் சமப்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தாத வழுக்கள்

கணக்கீட்டுச் செயன்முறையில் ஏற்படும் சில வழுக்கள் பரீட்சை மீதி சமப்படுவதில் தாக்கஞ்செலுத்துவதில்லை. அத்தகைய வழுக்கள் ஏற்பட்டிருப்பினும் கூடப் பரீட்சை மீதியில் வரவு நிரலின் கூட்டுத்தொகை செலவு நிரலின் கூட்டுத் தொகைக்குச் சமமாகவே காணப்படும். இவை **''பரீட்சை மீதி வெளிக்காட்டாத வழுக்கள்''** என அழைக்கப்படும். இவற்றிற்கான உதாரணங்கள் சில கீழே காட்டப்பட்டுள்ளன.

**01. கொடுக்கல் வாங்கல்கள் முழுமையாக ஏடுகளில் விடுபடல் / விடுபாட்டு வழுக்கள்**

எந்தவொரு கொடுக்கல் வாங்கலும் அதற்குரிய மூல ஏட்டில் பதிவு செய்யப்படாத சந்தர்ப்பத்தில் அது தொடர்பான பேரேட்டுக் கணக்குகளிலும் பதியப்படாதிருக்கும். இவ் வழு **''விடுபாட்டு வழு''** எனக் கருதப்படும். இதனைத் திருத்துவதற்கு அக் கொடுக்கல் வாங்கலுக்குரிய இரட்டைப் பதிவினை முறையாக மேற்கொள்ளல் வேண்டும்.

உதாரணம் :-

ரூ. 50 000க்கு கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்ட பொருள்பட்டியலொன்று கணக்கேடுகளிலிருந்து முழுமையாக விடுபட்டுள்ளது.

இக் கணக்கீட்டு வழு பின்வருமாறு திருத்தப்படும்.

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச்சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | | கொள்வனவுக் கணக்கு<br>கடன் கொடுத்தோர் கணக்கு<br>(ரூ. 50 000 பெறுமதியான கடன் கொள்வனவு பட்டியல் ஏடுகளில் பதியப்படாமை திருத்தப் பட்டது.) | | 50 000 | <br>50 000 |

## 02. கொடுக்கல் வாங்கலொன்றின் பெறுமதியை மூல ஏடுகளில் பிழையாகப் பதிதல்.

இங்கு கொடுக்கல் வாங்கல்களின் உண்மைப் பெறுமதியை விடக் கூட்டியோ அல்லது குறைத்தோ மூல ஏடுகளில் பதிந்திருத்தலாகும். ஆகையால் பேரேட்டுக் கணக்குகளின் வரவு, செலவு ஆகிய இரு பதிவுகளும் அப்பிழையான தொகையின் படியே பதியப்பட்டிருக்கும். இங்கு வரவு, செலவுப் பக்கங்களில் சமமான தொகைகள் பதியப்பட்டிருப்பதனால் பரீட்சை மீதி சமப்படும். இவ்வழு திருத்தப்படும்போது கொடுக்கல் வாங்கலினது உண்மைப் பெறுமதியினதும் பதியப்பட்ட பெறுமதியினதும் வேறுபாட்டுத் தொகையினைப் பதிவு செய்வது போதுமானதாகும்.

உதாரணம் :-

ரூ. 20 000 க்கு கடனுக்கு விற்கப்பட்ட பொருள்பட்டியல் ரூ. 2 000 என விற்பனை நாளேட்டில் பதியப்பட்டுள்ளது.

இங்கு கடன்பட்டோரினைப் போன்று விற்பனைக் கணக்கிலும் ரூ. 18 000 (ரூ. 20 000 - 2 000) குறைவாகப் பதியப்பட்டிருப்பதால் உரிய இரு கணக்குகளிலும் ரூ. 18 000 வீதம் பதிவதன் மூலம் இக்கணக்கீட்டு வழுவினைத் திருத்தஞ்செய்ய முடியும்.

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச்சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | | கடன்பட்டோர் கணக்கு | | 18 000 | |
| | | விற்பனைக் கணக்கு | | | 18 000 |
| | | (ரூ. 18 000 பெறுமதியான கடன் விற்பனை பட்டியல் ஏடுகளில் குறைத்துப் பதிந்தமை திருத்தப்பட்டுள்ளது.) | | | |

உதாரணம் :-

கடன் கொடுத்தோரிடம் பெற்ற கழிவு ரூ. 1 500 காசுப் புத்தகத்தின் பெற்ற கழிவு நிரலில் ரூ. 1 300 எனப் பதியப்பட்டிருந்து.

இங்கு, கடன்கொடுத்தோர் கணக்கினைப் போன்று பெற்ற கழிவுக் கணக்கிலும் ரூ. 1 300 என குறைவாகப் பதியப்பட்டுள்ளதால் அவ்வேறுபாட்டுத் தொகையான (ரூ. 1500 – 1300) ரூ. 200 ஐ உரிய கணக்குகளில் பதிவு செய்தல் வேண்டும்.

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச்சாத்துக் இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. . |
|---|---|---|---|---|---|
| | | கடன் கொடுத்தோர் கணக்கு | | 200 | |
| | | பெற்ற கழிவுக் கணக்கு | | | 200 |
| | | (ரூ. 1500 பெறுமதியான பெற்ற கழிவு ரூ. 1300 எனப் பதிந்தமை திருத்தப்பட்டது.) | | | |

## 03. ஒரே கொடுக்கல்வாங்கலைக் கணக்கேடுகளில் இருமுறை பதிதல் / இரட்டிப்பு வழு

சில சந்தர்ப்பங்களில் ஒரு கொடுக்கல் வாங்கல் உரிய மூல ஏட்டில் இரு முறை பதிவு செய்யப்பட்டிருக்கும். இதனால், அவை உரிய கணக்குகளிலும் இருமுறை பதியப்பட்டிருக்கும். அக்கணக்குகளின் எதிர்ப் பக்கங்களில் பதிவுகளை மேற்கொள்வதன் மூலம் இப் பிழையைத் திருத்தஞ்செய்ய முடியும்.

உதாரணம் :-

ரூ. 10 000 பெறுமதியான கொள்வனவுப் பட்டியலொன்று கணக்கேடுகளில் இருமுறை பதியப்பட்டுள்ளது.

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச்சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. . |
|---|---|---|---|---|---|
| | | கடன் கொடுத்தோர் கணக்கு | | 10 000 | |
| | | கொள்வனவுக் கணக்கு | | | 10 000 |
| | | (ரூ. 10 000 கொள்வனவுப் பட்டியலொன்று கணக்குகளில் இருமுறை பதியப்பட்டமை திருத்த்தப்பட்டது.) | | | |

## 04. ஏதேனும் ஒரு கொடுக்கல் வாங்கலின் பெறுமதி உரிய கணக்கில் பதியாது வேறொரு கணக்கில் பதியப்படுகின்றமை / கணக்கு மாறிப் பதிதல் தவறு

வணிகத்தினால் சில கொடுக்கல் வாங்கல்கள் பதிவு செய்யப்படும்போது உரிய தொகையைப் பொருத்தமான கணக்கில் பதியாது வேறொரு கணக்கில் பதியப்படும் சந்தர்ப்பம் உண்டு. இங்கு வரவு, செலவுப் பதிவுகள் சமமானவையாக அமைவதனால் பரீட்சை மீதியின் சமப்பாட்டில் எவ்விதத் தாக்கமும் ஏற்படுத்துவதில்லை.

உதாரணம் :-

வணிகத்தின் பயன்பாட்டிற்கென வாங்கப்பட்ட அலுவலக உபகரணங்கள் ரூ. 200 000 கொள்வனவுக் கணக்கில் வரவில் பதிந்திருந்தமை.

வணிகத்தில் மீள் விற்பனை செய்யும் நோக்குடன் கொள்வனவு செய்யப்பட்ட பொருள்களின் பெறுமதியே கொள்வனவுக் கணக்கில் பதியப்பட முடியும். இங்கு வணிகத்தினது பாவனைக்கே அலுவலக உபகரணங்கள் வாங்கப்பட்டுள்ளன. இதனை அலுவலக உபகரணக் கணக்கு என்னும் சொத்துக் கணக்கில் வரவில் பதியப்பட வேண்டும். இத்தவறு பின்வருமாறு திருத்தஞ்செய்யப்படல் வேண்டும்.

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச் சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | | அலுவலக உபகரணக் கணக்கு<br>கொள்வனவுக் கணக்கு<br>(வணிகத் தேவைக்காக வாங்கப்பட்ட அலுவலக உபகரணம் கொள்வனவுக் கணக்கில் பதிந்தமை திருத்தப்பட்டது.) | | 200 000 | 200 000 |

## செயற்பாடு 01

பயிலுனராக இணைத்துக் கொள்ளப்பட்ட கணக்கு இலிகிதர் ஒருவர்மூலம் 20xx.12.31 ஆம் திகதியில் தயாரிக்கப்பட்ட பரீட்சை மீதியின் வரவுப் பக்க மீதியின் கூட்டுத்தொகையானது செலவுப்பக்க மீதியின் கூட்டுத்தொகைக்கு சமமானதாக காணப்பட்டதனால் மீண்டும் கணக்கு பரிசீலனைக்குட்படுத்துவது அவசியமற்றது எனவும், இறுதிக் கணக்குகளைச் சரியாகத் தயாரிக்க முடியும் எனவும் வெளிப் படுத்தப்பட்டது.

இக்கூற்றுத் தொடர்பாக உங்களது கருத்துக்களை முன்வைக்கவும்.

## செயற்பாடு 02

வணிகமொன்றின் மூலம் 20xx.12.31ஆம் திகதியில் தயாரிக்கப்பட்ட பரீட்சை மீதியின் வரவு, செலவு மீதிகளின் கூட்டுத்தொகைகள் சமமாகக் காணப்பட்டாலும் பின்னர் கீழ்வரும் வழுக்கள் இடம் பெற்றமையை இனங்காணக் கூடியதாக இருந்தது.

i. ரூ. 20 000 பெறுமதியான கொள்வனவுப் பட்டியலுக்கான பதிவுகள் கணக்கேடு களில் முற்றாகப் பதியாமல் விடப்பட்டிருந்தது.
ii. ரூ. 40 000க்கு அலுவலகப் பாவனைக்காக வாங்கப்பட்ட கணினிக் கிரயம் கொள் வனவுக் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருந்தது.
iii. செலுத்திய மின்சாரக் கட்டணமான ரூ. 500 தவறாகக் காப்புறுதிக் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருந்தது.
iv. உரிமையாளரால் அவரது சொந்தத் தேவைகருதி பற்றிய ரூ. 12 000 பெறுமதியான பொருள்கள் புத்தகங்களில் பதியாது தவறவிடப்பட்டிருந்தது.

மேற்காட்டப்பட்ட வழுக்களைத் திருத்துவதற்கான பொது நாட்குறிப்பேட்டினைத் தயாரிக்கவும்.

## 12.5 பரீட்சை மீதியைச் சமப்படுத்துவதில் தாக்கத்தை ஏற்படுத்தும் வழுக்கள்

கணக்கீட்டுச் செயன்முறையில் எழுகின்ற சில வழுக்கள் காரணமாகப் பரீட்சை மீதியின் வரவு, செலவு நிரல்களின் கூட்டுத்தொகைகளுக்கிடையில் வேறுபாடு எழக்கூடும். இத்தகைய வழுக்கள் **''பரீட்சை மீதியின் சமப்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தும் வழுக்கள்''** எனக் குறிப்பிடலாம். இங்கு, பரீட்சை மீதியில் வெளிப்படும் கணக்கீட்டு வழுக்கள் எவை என்பதை அறிவதற்குக் கணக்கீட்டுப் பரிசீலனையொன்று மேற்கொள்ளப்படல் வேண்டும். எவ்வாறாயினும், இப்பரிசீலனைக்கு நியாயமான காலமொன்று தேவைப்படலாம். ஆகையால், இவ்வழுக்களை இனங்கண்டு திருத்தம் செய்யும் வரையில் பரீட்சை மீதியின் வேறுபாட்டுத் தொகை தொங்கற் கணக்கிற்கு மாற்றம் செய்யப்படுதல் வேண்டும்.

### தொங்கற் கணக்கு

பரீட்சை மீதியின் வரவு, செலவு மீதிநிரல்களின் கூட்டுத்தொகைகளுக்கிடையில் வேறுபாடு எழும்போது அதற்குக் காரணமான கணக்கீட்டு வழுக்களை இனங்கண்டு திருத்தஞ்செய்யும் வரையில் பரீட்சை மீதியிலுள்ள கூட்டுத்தொகைகளின் வேறு பாட்டுத் தொகை தற்காலிகமாகப் பதியப்படும் கணக்கு **''தொங்கற் கணக்கு''** என அழைக்கப்படும்.

தொங்கற் கணக்கு கணக்கேடுகளில் திறக்கப்படுதல் பின்வருமாறு நிகழும்.

i. பரீட்சை மீதியில் வரவு, செலவு மீதிகளின் கூட்டுத்தொகைகளுக் கிடையிலான வேறுபாட்டை அறியவும்.

ii. அவ்வேறுபாட்டுத் தொகையினால் பரீட்சை மீதியில் கூட்டுத்தொகை குறைவாகக் காணப்படும் நிரலில் தற்காலிகமாகப் பதிந்து பரீட்சை மீதியைச் சமப்படுத்துங்கள்.

iii. இவ்வேறுபாட்டுக்குரிய காரணங்களைச் சரியாக இனங்காண முடியாதிருப் பதனால் இவ்வேறுபாட்டுத் தொகையின் முன்பாக **''தொங்கற் கணக்கு''** என எழுதுக. பின்னர் அப்பெறுமதியைத் தொங்கற் கணக்கிற்கு மாற்றுங்கள்.

இதற்கமையப் பரீட்சை மீதியின் வரவு மீதிகளின் கூட்டுத்தொகை செலவு மீதிகளின் கூட்டுத்தொகையை விடக் குறைவாயின் அதன் வேறுபாடு தொங்கற் கணக்கில் வரவில் பதிய வேண்டும். செலவு மீதிகளின் கூட்டுத்தொகை வரவு மீதிகளின் கூட்டுத்தொகையை விடக் குறைவாயின் அதன் வேறுபாடு தொங்கற் கணக்கில் செலவில் பதிய வேண்டும்.

உதாரணம் :-

ஜானகிராமன் வணிகத்தின் மூலம் 20XX.12.31 ஆம் திகதியில் தயாரிக்கப்பட்ட பரீட்சைமீதியின் வரவு செலவு மீதி நிரல்களின் கூட்டுத் தொகைகள் சமமானவையாகக் காணப்படவில்லை. அப்பரீட்சை மீதியானது கீழே தரப்பட்டுள்ளது.

ஜானகிராமன் வணிகத்தின்
20XX.12.31 திகதியிலான பரீட்சை மீதி

| கணக்கின் பெயர் | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|
| காசுக் கணக்கு | 50 000 | |
| போக்குவரத்துச் செலவுக் கணக்கு | 11 000 | |
| விற்பனைக் கணக்கு | | 350 000 |
| கொள்வனவுக் கணக்கு | 130 000 | |
| மூலதனக் கணக்கு | | 360 000 |
| மோட்டார் வாகனக் கணக்கு | 520 000 | |
| வங்கிக்கடன் கணக்கு | | 190 000 |
| பற்றுக் கணக்கு | 24 000 | |
| உபகரணக் கணக்கு | 140 000 | |
| மின்சார செலவுக் கணக்கு | 20 000 | |
| தொங்கற் கணக்கு | 5 000 | |
| | 900 000 | 900 000 |

மேற்காட்டிய பரீட்சை மீதியின் வேறுபாட்டுத் தொகையானது தொங்கற் கணக்கில் பின்வருமாறு பதிவு செய்யப்படும்.

வரவு தொங்கற் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப. | தொகை ரூ | திகதி | விபரம் | பே ப. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பரீட்சை மீதியின் வேறுபாடு | | 5 000 | | | | |

செயற்பாடு 03

கீழே காட்டப்படுவது நவீன் வணிகத்தின் 20xx.03.31 அன்று தயாரிக்கப்பட்ட பரீட்சை மீதியின் வரவு, செலவு நிரல்களின் கூட்டுத்தொகைகளாகும்.

| | |
|---|---|
| வரவு நிரலின் கூட்டுத்தொகை | ரூ. 545 000 |
| செலவு நிரலின் கூட்டுத்தொகை | ரூ. 520 000 |

தொங்கற் கணக்கில் மாற்ற வேண்டிய தொகையை அறிந்து அக்கணக்கில் எப்பக்கத்தில் பதிவுசெய்ய வேண்டுமென்பதைக் காட்டுக.

## பரீட்சை மீதி வெளிக்காட்டும் வழுக்களைத் திருத்தஞ்செய்தல்

பரீட்சை மீதியின் வேறுபாட்டினைத் தொங்கற் கணக்கில் பதிவுசெய்த பின்னர் அவ்வேறுபாட்டிற்கான காரணங்களை இனங்காண வேண்டும். கணக்கீட்டு செயன்முறையில் இடம்பெற்ற அனைத்து வழுக்களையும் திருத்தஞ் செய்ததன் பின்னர் தொங்கற் கணக்கானது ஏடுகளிலிருந்து நீக்கப்படல் வேண்டும். எனவே, கணக்கீட்டு வழுக்களைத் திருத்தும்போது தொங்கற் கணக்கிலும் பதிவு இடம்பெற வேண்டும். பரீட்சைமீதியின் சமப்பாட்டில் தாக்கத்தினை ஏற்படுத்தும் வழுக்களினாலயே தொங்கற்கணக்கு மீதி ஏற்படுகின்றது. எனவே, அவ்வழுக்களைத் திருத்தும்போது இரட்டைப் பதிவுகளில் ஒரு பதிவினை தொங்கற் கணக்கில் பதிவுசெய்ய வேண்டும். பரீட்சை மீதியினூடாக வெளிக்காட்டப்படும் வழுக்கள் சிலவற்றையும் அவை திருத்தப்பட்ட முறைகளும் கீழே விபரிக்கப்பட்டுள்ளன.

### 1. இரட்டைப் பதிவுகளில் ஒரு பதிவை மட்டும் பதிதல்

உதாரணம் :-

தொலைபேசிக் கட்டணமான ரூ. 15 000இற்கான கொடுப்பனவு காசேட்டில் மட்டும் பதிவு செய்யப்பட்டிருந்தமை.

இங்கு உரிய பெறுமதி தொலைபேசிக் கட்டணக் கணக்கில் வரவு வைக்கப்படவில்லை. அதனால் இத் தவறைத் திருத்தஞ் செய்வதற்குத் தொலைபேசிக் கட்டணக் கணக்கில் வரவு வைக்கப்பட வேண்டும். காசேட்டில் செலவில் பதியப்பட்டுள்ளதால் காசேடு சரியானதாயினும் வரவுப் பதிவு பதியப்படாததால் பரீட்சைமீதியில் வரவுப் பக்கக் கூட்டுத்தொகை ரூ. 15 000 குறைவாகும். அதனால் தொங்கற் கணக்கில் ரூ. 15 000 பெறுமதியான வரவு மீதி ஒன்று பதிவாகியிருக்கும். இதனைத் திருத்துவதற்குத் தொங்கற் கணக்கில் செலவு வைக்க வேண்டும்.



படம் 12.1

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச் சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | | தொலைபேசிக் கட்டணக் கணக்கு<br>தொங்கல் கணக்கு<br>(ரூ. 15 000 தொலைபேசிக் கட்டணம் கணக்கில் வரவில் பதியாதமை திருத்தப்பட்டது) | | 15 000 | 15 000 |

**2. கொடுக்கல் வாங்கல்களின் இரட்டைப் பதிவுகளில் ஒரு பதிவு சரியாகவும் மற்றைய பதிவு தொடர்பாகப் பிழையான தொகையும் பதியப்பட்டிருத்தல்.**

உதாரணம் :-

ரூ. 54 000 இற்கான காசு விற்பனைகள் காசேட்டில் சரியாகப் பதியப் பட்டபோதும் விற்பனைக் கணக்கில் ரூ. 45 000 எனச் செலவில் பதியப்பட்டிருந்தது.

இங்கு விற்பனைக் கணக்கின் செலவில் ரூ. 9 000 குறைத்து பதியப்பட்டுள்ளது. இதனைத் திருத்தஞ்செய்வதற்கு விற்பனைக் கணக்கில் ரூ. 9 000 செலவு வைத்து தொங்கற் கணக்கில் ரூ. 9 000 வரவு வைக்க வேண்டும். ரூ. 9 000 குறைவாகச் செலவில் பதியப்பட்டதனால் பரீட்சை மீதியில் செலவுப் பக்கக் கூட்டுத்தொகை ரூ. 9 000 குறைவடைவதுடன் தொங்கற் கணக்கில் ரூ. 9 000 செலவு மீதி ஒன்று உருவாகும். ரூ. 9 000 தொங்கற் கணக்கில் வரவு வைப்பதினூடாக தொங்கற் கணக்கு நீக்கப்படும்.



படம் 12.2

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச் சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. . | செலவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | | தொங்கற் கணக்கு<br>விற்பனைக் கணக்கு<br>(விற்பனைக் கணக்கில் ரூ. 9000 விற்பனை குறைவாகப் பதிந்தமை திருத்தப்பட்டது.) | | 9 000 | 9 000 |

**3. கொடுக்கல் வாங்கல்களின் இரட்டைப் பதிவுகளை உரிய கணக்குகளில் ஒரே பக்கங்களில் பதிதல்.**

கொடுக்கல் வாங்கல்களின் பெறுமதி உரிய கணக்குகள் இரண்டிலும் ஒரே பக்கத்தில் பதிவு செய்யப்பட்டுக் காணப்படக்கூடும்.

உதாரணம் :-

கடன்பட்டோரிடம் பெற்ற பணம் ரூ. 5000 காசேட்டில் வரவில் பதிவதுடன் கடன்பட்டோர் கணக்கிலும் வரவில் பதிதல்.

ஒரு கணக்கிற்கு ரூ. 5 000 வீதம் இரண்டு கணக்குகளிலும் வரவு வைக்கப்பட்டுள்ளது. இதனால் பரீட்சை மீதியின் செலவுப் பக்கக் கூட்டுத்தொகை ரூ. 10 000 ஆல் குறைத்துக் காட்டப்படும். எனவே தொங்கற் கணக்கில் ரூ. 10 000 செலவு மீதி ஏற்படும். அதனை இல்லாமல் செய்வதற்கு தொங்கற் கணக்கில் ரூ. 10 000 வரவில் பதிய வேண்டும். கடன்பட்டோர் கணக்கில் செலவில் பதிய வேண்டிய தொகை வரவில் பதிந்திருப்பதனால் பிழையாக பதிந்த தொகையை இல்லாமல் செய்வதற்குக் கடன்பட்டோர் கணக்கில் ரூ. 5 000 தொகை செலவில் பதிய வேண்டும். அத்துடன் உண்மையில் பதிய வேண்டிய ரூ. 5 000 தொகை செலவில் பதியப்படல் வேண்டும். எனவே மொத்தமாகக் கடன்பட்டோர் கணக்கில் ரூ. 10 000 செலவில் பதிய வேண்டும்.



படம் 12.3

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச்சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | | தொங்கற் கணக்கு<br>கடன்பட்டோர் கணக்கு<br>(கடன்பட்டோர் தந்த காசு ரூ. 5 000 கடன்பட்டோர் கணக்கில் வரவில் பதிந்திருந்தமை திருத்தப்பட்டது) | | 10 000 | 10 000 |

**04. பேரேட்டுக் கணக்குகளைச் சமப்படுத்தும்போது ஏற்படும் பிழைகள்**

உதாரணம் :-

கொள்வனவுக் கணக்கின் கூட்டுத்தொகை ரூ. 25 000 என்பதற்குப் பதிலாகக் கொள்வனவுக் கணக்கில் ரூ. 5 000 எனக் காட்டப்பட்டமை.

இதனால் கொள்வனவுக் கணக்கின் மீதி ரூ. 20 000 ஆல் குறைவடைந்ததன் காரணமாகப் பரீட்சைமீதியின் வரவு மீதி ரூ. 20 000த்தால் குறைத்துக் காட்டப்படும். இவ் வேறுபாட்டின் காரணமாக தொங்கற் கணக்கில் ரூ. 20 000 வரவு மீதி ஏற்படும். அதை இல்லாமல் ஆக்குவதற்கு அத்தொகை தொங்கற் கணக்கில் செலவு வைக்கப்பட வேண்டும். அத்துடன் கொள்வனவுக் கணக்கின் மீதி ரூ. 20 000த்தால் குறைந்து காணப்படுகின்றது. அதனை நிவர்த்தி செய்வதற்கு கொள்வனவுக் கணக்கில் ரூ. 20 000 வரவு வைக்கப்பட வேண்டும்



படம் 12.4

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச்சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. . |
|---|---|---|---|---|---|
| | | கொள்வனவுக் கணக்கு வரவு<br>தொங்கற் கணக்கு<br><br>(கொள்வனவுக் கணக்கின் கூட்டுத் தொகை ரூ. 25 000 ஆனது ரூ. 5 000 என பிழையாகப் பதிந்தமை திருத்தப்பட்டது) | | 20 000 | 20 000 |

05. *பரீட்சைமீதியைத் தயாரிக்கும்போது ஏற்படும் பிழைகள்*

வணிகத்தின் பேரேட்டில் காணப்படும் கணக்குகளைச் சமப்படுத்திப் பரீட்சை மீதி தயாரிக்கும்போது பின்வரும் பிழைகள் ஏற்படக்கூடும்.

- சில கணக்குகளின் மீதிகளைப் பரீட்சை மீதிக்குக் கொண்டு செல்லாமை.
- சில கணக்குகளின் சரியான மீதிகளுக்குப் பதிலாக பிழையான மீதிகளைப் பரீட்சை மீதிக்குக் கொண்டு செல்லல்.
- கணக்குகளின் மீதிகளைப் பரீட்சை மீதிக்குக் கொண்டுவரும்போது பிழையான நிரலில் பதிதல் போன்ற வழுக்கள் இடம்பெறும்.

ஏனைய வழுக்களுடன் ஒப்பிடுகையில் பரீட்சைமீதியைத் தயாரிக்கும்போது இடம் பெறும் வழுக்களில் விசேட அம்சங்களைக் காண முடியும். இங்கு உரிய பேரேட்டுக் கணக்குகளில் தவறுகள் காணப்படவில்லை. வழுக்கள் பரீட்சை மீதியைத் தயாரிக்கும் போது மட்டுமே இடம்பெற்றுள்ளன. ஆகையால், பேரேட்டுக் கணக்குகளில் திருத்தஞ் செய்ய வேண்டியதில்லை. எனினும் பரீட்சை மீதியில் வேறுபாடு காணப்படுவதால் அவ்வேறுபாடு தொங்கற் கணக்கில் பதியப்பட்டிருக்கும். அதனால் தொங்கற் கணக்குத் தொகை நீக்கப்படுதல் மட்டும் போதுமானதாகும்.

உதாரணம் :-

ரூ. 10 000 கட்டட வாடகை பரீட்சைமீதிக்குக் கொண்டு வரப்படவில்லை.

இங்கு கட்டட வாடகைக் கணக்கில் எந்த பிழையும் ஏற்படவில்லையாதலால், அக்கணக்கில் திருத்தப் பதிவுகள் தேவைப்படாது. ஆயினும், பரீட்சை மீதியின் வரவுப் பக்கத்தில் ரூ. 10 000 குறைந்திருப்பதன் காரணமாகத் தொங்கற் கணக்கில் ரூ. 10 000 இற்கான வரவு மீதியொன்று ஏற்படும். இதற்கமையத் தொங்கற் கணக்கினை நீக்குவதற்கு ரூ. 10 000 தொங்கற் கணக்கில் செலவு வைக்கப்படுவதன் மூலமும் விடுபட்ட பெறு மானத்தினைப் பரீட்சை மீதியில் பதிவு செய்வதன் மூலமும் இடம்பெற்ற வழு சீராக்கம் செய்யப்படும்.



படம் 12.5

பொது நாட்குறிப்பு

| திகதி | கைச்சாத்து இல | விபரம் | பே ப | வரவு ரூ. | செலவு ரூ. |
|---|---|---|---|---|---|
| | | தொங்கற் கணக்கு<br>(கட்டட வாடகை கணக்கின் மீதி பரீட்சை மீதிக்குக் கொண்டு வராமை திருத்தப்பட்டது) | | | 10 000 |




படம் 12.6

பரீட்சைமீதி சமப்பாட்டில் தாக்கத்தை ஏற்படுத்தும் வழு ஒன்றைச் திருத்தும்போது திருத்தப்பதிவுகளில் ஒரு பதி வினைத் தொங்கற் கணக்கிலும் மற்றைய பதிவை வழு ஏற்பட்டுள்ள உரிய கணக்கிலும் பதிதல் வேண்டும்.

பரீட்சைமீதியினது சமப்பாட்டில் தாக்கஞ் செலுத்தாத வழுக்களைச் திருத்தஞ் செய்யும்போது தொங்கற் கணக்கில் எவ்வித பதிவுகளும் பதியப்பட வேண்டிய அவசியம் ஏற் படாது. வழுக்கள் ஏற்பட்ட கணக்குகளை அறிந்து அவற்றில் திருத்தங்களைச் செய்தல் வேண்டும்.

*உதாரணம் :-*

சூரியகுமார் வணிகத்தின் 20XX.12.31 ஆம் திகதியில் தயாரிக்கப்பட்ட பரீட்சை மீதியின் வரவு, செலவு நிரல்களின் கூட்டுத் தொகைகள் சமப்படவில்லை. அப்பரீட்சை மீதியானது பின்வருமாறு காட்டப் பட்டுள்ளது.

சூரியகுமார் வணிகத்தின்
20XX.12.31 ஆம் திகதியிலான பரீட்சை மீதி

| கணக்கின் பெயர் | வரவு<br>ரூ. | செலவு<br>ரூ. |
|---|---|---|
| காசுக் கணக்கு | 56 000 | |
| தொலைபேசிக் கட்டணக்கணக்கு | 5 000 | |
| விற்பனைக் கணக்கு | | 300 000 |
| கொள்வனவுக் கணக்கு | 150 000 | |
| மூலதனக் கணக்கு | | 400 000 |
| காணி கட்டடக் கணக்கு | 500 000 | |
| வங்கிக் கடன் கணக்கு | | 200 000 |
| பற்றுக் கணக்கு | 34 000 | |
| தளபாட உபகரணக் கணக்கு | 130 000 | |
| பெற்ற வட்டிக் கணக்கு | 10 000 | |
| தொங்கற் கணக்கு | 15 000 | |
| | 900 000 | 900 000 |

பின்வரும் கணக்கீட்டு வழுக்கள் இனங்காணப்பட்டுள்ளன.

1. மின்சாரக் கட்டணக் கணக்கு மீதியான ரூ. 16 000 பரீட்சை மீதிக்குக் கொண்டு செல்லப்படவில்லை.
2. பெற்ற வட்டிக் கணக்கு மீதியான ரூ. 10 000 பரீட்சை மீதியின் வரவு நிரலில் பதியப்பட்டுள்ளது.
3. வங்கிக் கடன் மீளச் செலுத்துதலுக்கான ரூ. 30 000 காசேட்டில் மட்டுமே பதியப்பட்டுள்ளது.
4. கொள்வனவுக் கணக்கு மீதியான ரூ. 130 000த்தை பரீட்சைமீதியில் ரூ. 150 000 எனப் பதியப்பட்டுள்ளது.
5. பற்றுக் கணக்கைச் சமப்படுத்தும்போதும் அதன் கூட்டுத் தொகையான ரூ. 43 000 த்திற்குப் பதிலாக ரூ. 34 000 எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

மேற்காட்டிய சூரியகுமாரின் வணிகத்தின் கணக்கீட்டு வழுக்களைச் சீராக்கும் முறையினைப் பின்வருமாறு குறிப்பிட்டுக் காட்ட முடியும்.

1. மின்சாரக் கட்டணக் கணக்கின் மீதியான ரூ. 16 000 பரீட்சை மீதிக்குக் கொண்டு செல்லப்படாமையின் காரணமாக பரீட்சை மீதியின் வரவு நிரலில் ரூ. 16 000இற்கான குறைவொன்று காணப்படுகின்றது. எனவே பரீட்சை மீதியின் வரவு நிரலில் ரூ. 16 000 எழுதப்பட வேண்டி இருப்பதுடன் அப் பெறுமானத்தை தொங்கற் கணக்கில் செலவு வைக்கப்படல் வேண்டும்.

2. பெற்ற வட்டிக் கணக்கானது வருமானக் கணக்காக இருப்பதனால் அதனைப் பரீட்சை மீதியில் செலவு நிரலிலே காட்டப்படல் வேண்டும். ரூ. 10 000 அக்கணக் கில் வரவு நிரலில் பதியப்படுவதினூடாக செலவு நிரலில் ரூ. 20 000இற்கான குறைவொன்று ஏற்படுகின்றது. இதனால் ரூ. 20 000 ஐப் பரீட்சை மீதியின் செலவு நிரலில் எழுதப்படுவதுடன் தொங்கற் கணக்கிலும் வரவு வைக்கப்படல் வேண்டும்.

3. வங்கிக் கடனை மீளச் செலுத்தும்போது காசேட்டில் செலவு வைக்கப்பட்டு வங்கிக் கடன் கணக்கில் வரவு வைக்கப்பட வேண்டியதாக இருப்பினும் அது வங்கிக் கடன் கணக்கில் பதிவு செய்யாது விடப்பட்டதன் காரணமாக அக்கணக்கானது ரூ. 30 000இனால் அதிகரிக்கப்பட்டு காணப்படும். எனவே ரூ. 30 000 ஐ வங்கிக் கடன் கணக்கில் வரவு வைக்கப்பட்டு அத்தொகையினை தொங்கற் கணக்கில் செலவு வைக்கப்படல் வேண்டும்.

4. கொள்வனவுக் கணக்கின் சரியான மீதியான ரூ. 130 000 இற்குப் பதிலாக பரீட்சை மீதியில் ரூ. 150 000 ஐப் பதிவு செய்தலின் காரணமாக அதன் வரவு நிரலில் ரூ. 20 000 இனால் அதிகரித்துக் காணப்படும். இதனால் தொங்கல் தொகையானது செலவு நிரலில் ஏற்பட்டிருப்பதால் அதனை இரத்துச் செய்யத் தொங்கற் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

5. பற்றுக் கணக்கின் கூட்டுத்தொகையானது ரூ. 9 000 இனால் குறைவடைவதன் காரணமாகப் பரீட்சை மீதியின் வரவு நிரலில் ரூ. 9 000 இற்கு தொங்கல் ஏற்படும். இதனைத் திருத்துவதற்குத் தொங்கற் கணக்கில் செலவு வைத்துப் பற்றுக் கணக்கில் வரவு வைக்கப்படல் வேண்டும்.

மேலே குறிப்பிடப்பட்ட கணக்கீட்டு வழுக்களைத் திருத்தும் முறையானது பின்வரும் பொது நாட்குறிப்பேட்டில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

பொது நாட்குறிப்பேடு

| திகதி | கை.சா. இல | விபரம் | பே. ப.. | வரவு ரூ | செலவு ரூ |
|---|---|---|---|---|---|
| | | தொங்கற் கணக்கு (மின்சாரக்கட்டணக் கணக்கு மீதியானது பரீட்சை மீதிக்கு கொண்டு செல்லப்படாத வழு திருத்தப்பட்டது.) | | | 16 000 |
| | | தொங்கற் கணக்கு (பெற்ற வட்டிக் கணக்கு மீதியானது பரீட்சை மீதியில் வரவு நிரலில் பதியப்பட்ட வழு திருத்தப்பட்டது.) | | 20 000 | |
| | | வங்கிக் கடன் கணக்கு<br>தொங்கற் கணக்கு<br>(ரூ. *30 000* வங்கிக் கடன் மீளச் செலுத்தியது வங்கிக் கடன் கணக்கில் வரவு வைக்கப்படாத வழு திருத்தப்பட்டது) | | 30 000 | 30 000 |
| | | தொங்கற் கணக்கு வரவு (கொள்வனவுக் கணக்கு மீதியான ரூ.*130 000*த்திற்குப் பதிலாக ரூ. *150 000* என பரீட்சை மீதியில் பதியப்பட்ட வழு திருத்தப்பட்டது.) | | 20 000 | |
| | | பற்றுக் கணக்கு<br>தொங்கற் கணக்கு<br>(பற்றுக் கணக்கைச் சமப்படுத்தும் ரூ. 9 000 குறைவாகப் பதியப்பட்ட வழு திருத்தப்பட்டது.) | | 9 000 | 9 000 |

மேற்காட்டிய கணக்கீட்டு வழுக்களைத் திருத்தும்போது தயாரிக்கப்பட்ட தொங்கற் கணக்கு பின்வருமாறு காணப்படும்.

வரவு தொங்கற் கணக்கு செலவு

| திகதி | விபரம் | பே ப | தொகை ரூ | திகதி | விபரம் | பே ப | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| | பரீட்சை மீதியின் வித்தியாசம் | | 15 000 | | தவறு | | 16 000 |
| | தவறு | | 20 000 | | வங்கிக் கடன் கணக்கு | | 30 000 |
| | தவறு | | 20 000 | | பற்றுக் கணக்கு | | 9 000 |
| | | | 55 000 | | | | 55 000 |

## செயற்பாடு 04

வணிகத்தின் மூலம் தயாரிக்கப்பட்ட பரீட்சைமீதியின் வரவு, செலவு நிரல்களின் கூட்டுத் தொகை ஒன்றுக்கொன்று சமப்படவில்லையாதலால் அவ்வேறுபாடானது ரூ. 5 500 தொங்கற் கணக்கில் செலவு வைக்கப்பட்டுள்ளது. பின்னர் பரிசோதனை செய்தபோது பின்வரும் வழுக்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

1. தொலைபேசிக் கட்டணக் கணக்கின் வரவுப் பக்கக் கூட்டுத்தொகை ரூ. 5 000த் தால் குறைவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.
2. கட்டடப் பழுது பார்த்தலுக்காகச் செலுத்தப்பட்ட ரூ. 30 000 காசேட்டில் சரியாகப் பதியப்பட்டபோதும் கட்டடக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது.
3. கொள்வனவுக்காக வழங்கப்பட்ட ரூ. 45 000 பெறுமதியான காசோலையொன்று காசேட்டில் சரியாகப் பதியப்பட்ட போதிலும் கொள்வனவுக் கணக்கில் ரூ. 54 000 எனப் பதியப்பட்டுள்ளது.
4. சம்பளக் கணக்கின் மீதி ரூ. 5 000 பரீட்சைமீதியில் ரூ. 500 எனக் காட்டப் பட்டுள்ளது.
5. விற்பனைக் கணக்கின் செலவுப் பக்கம் ரூ. 6 000 குறைவாகக் கூட்டப்பட்டுள்ளது.

பின்வருவனவற்றைக் காண்க :-

1. மேற்காட்டிய வழுக்களைத் திருத்துவதற்கான முறையான குறிப்பேட்டுப் பதிவுகள்
2. தொடக்க மீதியை இனங்கண்டு தொங்கற் கணக்கைத் தயாரித்துக் காட்டுக.

## செயற்பாடு 05

வணிகமொன்றின் மூலம் தயாரிக்கப்பட்ட பரீட்சைமீதியின் செலவு நிரலின் கூட்டுத்தொகை வரவு நிரலின் கூட்டுத்தொகையைவிட ரூ. 6 200 அதிகமாகக் காணப்பட்டது. அதற்குக் காரணமான பின்வரும் கணக்கீட்டு வழுக்கள் இனங் காணப்பட்டன.

1. செலுத்திய காப்புறுதிக் கட்டணம் ரூ. 5 600 ஆகும். காப்புறுதிக் கட்டணக் கணக்கில் ரூ. 6 500 எனப் பதியப்பட்டிருந்தது.
2. பெற்ற வாடகை ரூ. 9 000 காசேட்டில் வரவில் பதியப்பட்டபோதும் வேறு எப் பதிவுகளும் மேற்கொள்ளப்படவில்லை.

3. காசாகப் பற்றியது ரூ. 1 500 ஆகும். இது காசேட்டில் மட்டுமே பதியப்பட்டுள்ளது.

4. ரூ. 7 500 வங்கிக் கடன் தவணைக் கட்டணம் செலுத்துதல் தொடர்பான வரவுப் பதிவு மேற்கொள்ளப்படவில்லை.

5. சம்பளக் கணக்கின் மீதி ரூ. 7 100 பரீட்சை மீதிக்குக் கொண்டு செல்லப்படவில்லை.

பின்வருவனவற்றைக் காண்க :-

1. மேற்காட்டிய வழுக்களைத் திருத்துவதற்கான நாட்குறிப்பேட்டுப் பதிவுகள்
2. தொங்கற் கணக்கு

## செயற்பாடு 06

சௌமியா வணிகத்தின் 20xx.12.31 திகதியில் தயாரிக்கப்பட்ட பரீட்சைமீதி சமப்படவில்லையாதலால் அதன் வேறுபாட்டுத் தொகை தொங்கற் கணக்கிற்கு மாற்றப்பட்டுள்ளது. பின்னர் வேறுப்பாட்டிற்கான காரணங்களை அறிந்து அவ்வழுக்கள் பொது நாட்குறிப்பேட்டின் மூலம் திருத்தப்பட்டு பரீட்சைமீதி சீராக்கப்பட்டது.

சௌமியா வணிகத்தின் கணக்கு லிகிதர் மூலம் கணக்கீட்டு வழுக்கள் திருத்தப்பட்டு தயாரிக்கப்பட்ட தொங்கற் கணக்கு கீழே காட்டப்பட்டுள்ளது

வரவு　　　　　　　　தொங்கற் கணக்கு　　　　　　　　செலவு

| திகதி | விபரம் | பே ப | தொகை ரூ. | திகதி | விபரம் | பே ப | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | விற்பனைக் கணக்கு | | 11 000 | | உபகரணக்கணக்கு | | 10 000 |
| | காப்புறுதிக் கட்டணக் கணக்கு | | 2 000 | | சம்பளக் கணக்கு | | 5 000 |
| | | | | | கொள்வனவு கணக்கு | | 4 000 |

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. வழுக்களைத் திருத்துவதற்கு முன்னர் பரீட்சை மீதியில் காணப்பட்ட பரீட்சை மீதியில் வேறுப்பட்டிருந்த தொகையைக் கணிப்பிடுக.
2. பரீட்சை மீதியில் குறைவான பெறுமானம் எந்நிரலில் காட்டப்பட்டுள்ளது?
3. தொங்கற் கணக்கு மீதியைப் பதிவதற்கு முன்னர் பேரேட்டில் வரவு மீதியின் கூட்டுத் தொகை ரூ. 25 455 ஆக இருப்பின் குறிப்பிடப்பட்டிருக்கும் செலவு மீதிகளின் கூட்டுத் தொகையினைக் குறிப்பிடுக.
4. மேற்காட்டப்பட்ட வணிகத்தின் பேரேட்டுக் கணக்குகளில் இடம்பெற்றிருக்கக் கூடியது எனக் கருதக்கூடிய வழுக்களை இயலுமானவரையில் பட்டியற்படுத்துக. இதற்காக உமது நண்பரின் உதவியையும் பெற்றுக் கொள்ளுங்கள்.

## செயற்பாடு 07

சத்தியா வணிகத்தின் 20xx. 12 31ஆந் திகதி தயாரிக்கப்பட்ட பரீட்சை மீதியின் வரவு, செலவு நிரல்களின் கூட்டுத் தொகை சமப்படவில்லை. அவற்றின் வேறுபாட்டினை தொங்கற் கணக்கிற்கு மாற்றியதுடன், வழுக்கள் பின்னர் இனங்காணப்பட்டுள்ளன.

கொள்வனவுக் கணக்கின் கூட்டுத்தொகை ரூ. 5 000த்தினால் அதிகமாகக் கூட்டப் பட்டுள்ளது.

மின்சாரக் கட்டணமாகச் செலுத்தப்பட்ட ரூ. 7 000 மின்சாரக்கட்டணக் கணக்கில் ரூ. 700 ஆகப் பதியப்பட்டுள்ளது.

தொலைபேசிக் கட்டணமாகச் செலுத்தப்பட்ட ரூ. 8 000 தொலைபேசிக் கட்டணக்கணக்கில் ரூ. 10 000 என வரவு வைக்கப்பட்டுள்ளதுடன், பெற்ற வட்டி ரூ. 16 000 வட்டிக் கணக்கில் ரூ.18 000 எனச் செலவில் பதியப்பட்டுள்ளது.

உரிமையாளரின் ரூ. 60 000 மேலதிக மூலதனமிடல் காசேட்டில் வரவு வைக்கப் பட்டு விற்பனைக் கணக்கில் செலவில் பதியப்பட்டுள்ளது.
ரூ. 25 000 கடன் விற்பனையானது கணக்கேடுகளிலிருந்து தவறவிடப்பட்டி ருந்தது.

உரிமையாளரின் ரூ. 60 000 மேலதிக மூலதனமிடல் காசேட்டில் வரவு வைக்கப் பட்டு விற்பனைக் கணக்கில் செலவில் பதியப்பட்டுள்ளது.

சில்லறைக் காசேட்டில் பிரயாண செலவுக் கட்டண கூட்டுத் தொகையான ரூ. 250 பிரயாணச் செலவுக் கட்டணக் கணக்கில் பதியப்படவில்லை.

01. மேலே காட்டப்பட்டுள்ள தகவல்களிலிருந்து தொங்கற் கணக்கில் தாக்கத்தை ஏற்படுத்தாத வழுக்களை இனங்கண்டு அவற்றைச் சீராக்குவதற்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தயாரிக்குக.

02. தொங்கல் கணக்கைத் தயாரித்து பரீட்சை மீதியின் கூட்டுத் தொகைகளுக் கிடையில் காணப்பட்ட வேறுபாட்டுத் தொகையைக் கணிப்பீடு செய்க.

(இப்பாட அலகில் காணப்படுகின்ற சகல படங்களும் வலையமைப் பிலிருந்து பெறப்பட்டவையாகும்.)

## கலைச் சொற்கள்

| | | |
|---|---|---|
| Acceleration | துரிதப்படுத்துதல் | වේගවත් කිරීම |
| Accepted | ஏற்றுக்கொள்ளல் | පිළිගත් |
| Accomplish | நிறைவேற்றுதல் | අත්කර ගන්නවා |
| Accordingly | அதற்கமைவாக | ඒ අනුසාරයෙන්, එ පරිදි |
| Account | கணக்கு | ගිණුම |
| Accounting errors | கணக்கீட்டு வழுக்கள் | ගිණුම්කරණ වැරදි |
| Adopt | ஏற்றுக்கொள்ளல் | යොදා ගන්නවා |
| Advantage | அனுகூலம் | වාසිය |
| Agreement | ஒப்பந்தம் | ගිවිසුම |
| Asset | சொத்து | වත්කම |
| Assigned | கையளித்தல் / ஒதுக்குதல் | පවරන ලද |
| Assume | கருதுதல் | උපකල්පනය කරනවා |
| Balance | நிலுவை / மீதி | ශේෂය |
| Bank loan | வங்கிக் கடன் | බැංකු ණය |
| Bankrupt | முறிவடைதல் | බුංවත් වීම |
| Business | வணிகம் | ව්‍යාපාරය |
| Capital | மூலதனம் | ප්‍රාග්ධනය |
| Cash book | காசேடு | මුදල් පොත |
| Cash discount | காசுக் கழிவு | මුදල් වට්ටම |
| Cashier | காசாளர் | මුදල් අයකැමි |
| Categorize | வகைப்படுத்தல் | වර්ග කරනවා |
| Characteristic | பண்பு, இயல்புகள் | ලක්ෂණය |
| Collectively | ஒருமைப்பாடு/ஒன்றிணைந்து | සාමූහිකව |
| Commodity | நுகர்வுப் பொருள்கள் | පාරිභෝගික භාණ්ඩ |
| Communication | தொடர்பாடல் | සන්නිවේදනය |
| Community | சமூகம் | ප්‍රජාව |
| Compare | ஒப்பிடுதல் | සසඳනවා |
| Competency | தேர்ச்சி | නිපුණත්වය |
| Competitor | போட்டியாளர் | තරගකරුවා |
| Concept | எண்ணக்கரு | සංකල්පය |
| Consolidate | ஒன்றிணைத்தல்/திரட்டிய | ඒකාබද්ධ කරනවා |
| Consumer | நுகர்வோர் | පාරිභෝගිකයා |
| Consumption | நுகர்வு | පරිභෝජනය |
| Continuously | தொடர்ச்சியாக | අඛණ්ඩව |
| Convenient | சௌகரியமான | පහසු |
| Co-operative society | கூட்டுறவுச் சங்கம் | සමූපකාර සමිතිය |
| Correction | திருத்தம்/திருத்துதல் | නිවැරදි කිරීම |
| Credit | கடன்/செலவு | බැර |
| Creditor | கடன் கொடுத்தோர் | ණයහිමියා |
| Currency | நாணயம் | මුදල් |
| Customer | வாடிக்கையாளர் | ගනුදෙනුකරු |
| Debit | வரவு | හර |
| Debtor | கடன்பட்டோர் | ණයගැතියා |
| Decrease | குறைதல் | අඩු වීම |
| Dedication | அர்ப்பணிப்பு | කැපවීම |
| Department | திணைக்களம் | දෙපාර්තමේන්තුව |

| | | |
|---|---|---|
| Difficult | கடினம் | දුෂ්කර |
| Discount allowed | அனுமதித்த கழிவு | දුන් වට්ටම |
| Discount received | பெற்ற கழிவு | ලද වට්ටම |
| Distinct | வேறு | වෙනස් |
| Distribute | விநியோகித்தல்/பகிர்தல் | බෙදාහරිනවා |
| Diversification | வேறுப்படுத்தல் | විවිධාංගකරණය |
| Double entry theory | இரட்டைப் பதிவு கோட்பாடு | ද්විත්ව සටහන් න්‍යාය |
| Dual function | இரட்டைத் தொழிற்பாடு | ද්විත්ව ක්‍රියාකාරීත්වය |
| Dual impact | இரட்டை விளைவு | ද්විත්ව බලපෑම |
| Earning | உழைப்பு | ඉපැයුම |
| Embargo | தடைகள் | සම්බාධක |
| Emphasize | அழுத்தப்படுத்தல் | අවධාරණය කරනවා |
| Employee | ஊழியர் | සේවකයා |
| Entrepreneurship | முயற்சியாண்மை | ව්‍යවසායකත්වය |
| Environment | சூழல் | පරිසරය |
| Equation | சமன்பாடு | සමීකරණය |
| Equipment | உபகரணம்/சாதனம் | උපකරණ |
| Equity | உரிமை | හිමිකම |
| Especially | விசேடமாக | විශේෂයෙන්ම |
| Essential | அத்தியாவசியமான | අත්‍යවශ්‍ය |
| Established | ஸ்தாபிக்கப்பட்ட | පිහිටුවන ලද |
| Evidence | சாட்சி, ஆதாரம் | සාක්ෂි |
| Excess | மேலதிகம் / மிகை | අතිරික්ත / වැඩිපුර |
| Existence | உளதாயிருத்தல் | පැවැත්ම |
| Expense | செலவினம் | වියදම |
| Factor | காரணி | සාධකය |
| Factors of production | உற்பத்திக் காரணிகள் | නිෂ්පාදන සාධක |
| Favourable | சாதகமான | වාසිදායක |
| Financial institution | நிதி நிறுவனம் | මූල්‍ය ආයතන |
| For profit business | இலாப நோக்குள்ள வணிகம் | ලාභ අරමුණු කරගත් ව්‍යාපාරය |
| Foreign exchange | அந்நிய செலாவணி | විදේශ විනිමය |
| Format | மாதிரி / அமைப்பு | ආකෘතිය |
| General journal | பொது நாட்குறிப்பேடு | පොදු ජර්නලය |
| Globalization | உலகமயமாகுதல் | ගෝලීයකරණය |
| Gradually | படிப்படியாக நிகழ்கின்ற | අනුක්‍රමයෙන් |
| Identification | இனம் காணல் | හඳුනාගැනීම |
| Immense | மிகப் பரந்த | අති විශාල |
| Impact | தாக்கம் | බලපෑම |
| Implementation | அமுல்ப்படுத்துதல் | ක්‍රියාත්මක කිරීම |
| Importance | முக்கியத்துவம் | වැදගත්කම |
| Incentives | ஊக்கப்படுத்தல் | දිරිගැන්වීම් |
| Incorporated companies | கூட்டிணைக்கப்பட்ட கம்பனி | සංස්ථාපිත සමාගම් |
| Individual | தனிப்பட்ட | කේවල |
| Inflation | பணவீக்கம் | උද්ධමනය |
| Inflow | உட்பாய்ச்சல் | ගලා ඒම |
| Influence | செல்வாக்கு | බලපෑම |
| Infrastructure | உட்கட்டமைப்பு வசதிகள் | යටිතල පහසුකම් |
| Innovations | புத்தாக்கம் | නව්‍යතා |
| Instance | பதிலாக | මොහොත |
| Interconnection | உட்தொடர்பு | අන්තර් සම්බන්ධතාව |

| | | |
|---|---|---|
| Invoice | பட்டியல் | ඉන්වොයිසිය |
| Ledger | பேரேடு | ලෙජරය |
| Legal personality | சட்ட ஆளுமை | නීතිමය පුද්ගල භාවය |
| Liability | பொறுப்பு | වගකීම |
| Limited | வரையறுக்கப்பட்ட | සීමාසහිත |
| Maintain | பராமரிப்பு | නඩත්තු කරනවා |
| Manager | முகாமையாளர் | කළමණාකරු |
| Mandatory | கட்டாயமாக | අනිවාර්ය |
| Manufacturing | உற்பத்தி செய்தல் | නිෂ්පාදනය |
| Medium scale | நடுத்தர அளவு | මධ්‍ය පරිමාණ |
| Mentioned | குறிப்பிடப்பட்ட | සඳහන් කරන ලද |
| Motive | நோக்கு/இலக்கு | චේතනාව |
| Narration | விளம்பல் | සංලක්ෂය |
| Necessity | தேவைகள் | අවශ්‍යතාව |
| Needs and wants | தேவைகளும் விருப்பங்களும் | අවශ්‍යතා හා වුවමනා |
| Not for profit business | இலாப நோக்கமற்ற நிறுவனம் | ලාභ අරමුණු කර නොගත් ව්‍යාපාරය |
| Objective | நோக்கம் | අරමුණ |
| Obligations | கடப்பாடுகள் | වගකීම් |
| Obtain | பெற்றுக் கொள்ளல் | ලබා ගන්නවා |
| Occur | நிகழ்தல் | සිදු වෙනවා |
| Organization | அமைப்புக்கள் | සංවිධානය |
| Oriented | திசைப்படுத்தல் | දිශානත |
| Outflow | வெளிப்பாய்ச்சப்படல் | ගලා යාම |
| Owner | உரிமையாளர் | අයිතිකරු |
| Partnership | பங்குடைமை | හවුල් ව්‍යාපාරය |
| Payment | கொடுப்பனவு | ගෙවීම |
| Petty cash book | சில்லறை காசேடு | සුළුමුදල් පොත |
| Petty cash imprest | சில்லறைக் காசு கட்டுநிதி | සුළු මුදල් අග්‍රිමය |
| Positively | நேர்முறையான | ධනාත්මකව |
| Posting | பதிதல் | සටහන් කිරීම |
| Prevention | தடுத்தல் | වැළැක්වීම |
| Private sector | தனியார் துறை | පුද්ගලික අංශය |
| Procedure | நடைமுறை | ක්‍රියා පටිපාටිය |
| Produce | உற்பத்தி செய்தல் | නිෂ්පාදනය කරනවා |
| Production | உற்பத்தி | නිෂ්පාදනය |
| Professional | வாண்மை | වෘත්තීය |
| Profit | இலாபம் | ලාභය |
| Proportion | பங்கு | කොටස |
| Public sector | பொதுத் துறை | රාජ්‍ය අංශය |
| Purchases | கொள்வனவுகள் | ගැනුම් |
| Purchases journal | கொள்வனவு நாட்குறிப்பு | ගැනුම් ජර්නලය |
| Quantity | அளவு | ප්‍රමාණය |
| Receipt | பற்றுச்சீட்டு | ලැබීම් පත |
| Recognized | ஏற்பிசைவு | හඳුනාගත් |
| Record | பதிவு | වාර්තා කිරීම/වාර්තාව |
| Registration | பதிவுசெய்தல் | ලියා පදිංචිය |
| Reimbursement | மீள் நிரப்பல் | ප්‍රතිපූරණය |
| Relevant | தொடர்பான, உரிய | අදාළ |
| Reliably | நம்பகமான | විශ්වාසවන්ත වූ |
| Remedy | தீர்வு, பரிகாரம் | පිළියම |
| Require | வேண்டுகோள் | අවශ්‍ය වෙනවා |

| | | |
|---|---|---|
| Resource | வளம் | සම්පත් |
| Respective | அவரவருக்குரிய | අදාළ |
| Sacrifice | திருப்தி | කැප කරනවා |
| Sales | விற்பனை | විකුණුම් |
| Sales journal | விற்பனை நாட்குறிப்பு | විකුණුම් ජර්නලය |
| Scale | அளவு | පරිමාණය |
| Service | சேவை | සේවාව |
| Share | பங்கு | කොටස |
| Similarly | ஒத்த தன்மை | එසේම |
| Skills | திறன்கள் | දක්ෂතා |
| Social | சமூக | සමාජයීය |
| Society | சமூகம்/ சங்கம் | සමිතිය/සමාජය |
| Sole proprietorship | தனியாளுரிமை வணிகம் | තනි අයිතිය |
| Specialized | சிறப்புத் துறை தேர்ச்சி | විශේෂිත |
| Stakeholders | அக்கறை செலுத்தும் தரப்பினர் | ඇල්මැති පාර්ශ්ව |
| State corporation | அரச கூட்டுத்தாபனம் | රාජ්‍ය සංස්ථාව |
| Stationary | எழுதுக்கருவி | ලිපි ද්‍රව්‍ය |
| Subscription | சந்தா/அங்கத்துவக் கட்டணம் | දායක මුදල |
| Sufficient | போதுமான | ප්‍රමාණවත් |
| Supplier | விநியோகத்தர்/வழங்குனர் | සැපයුම්කරු |
| Suspense account | தொங்கல் கணக்கு | අවිනිශ්චිත ගිණුම |
| Systematical | ஒழுங்குமுறை | ක්‍රමානුකූල |
| Technology | தொழினுட்பம் | තාක්ෂණය |
| Trade discount | வியாபாரக் கழிவு | වෙළඳ වට්ටම් |
| Trail balance | பரீட்சை மீதி | ශේෂ පිරික්සුම |
| Transaction | கொடுக்கல் வாங்கல்கள் | ගනුදෙනුව |
| Transmit | கடத்தல் | සම්ප්‍රේෂණය කරනවා |
| Ultimately | ஒட்டு மொத்தமாக | අවසානයේ දී |
| Unlimited | வரையறுக்கப்படாத | අසීමිත |
| Various | பல்வேறு வகையான | විවිධ |